# மங்கையர் மலர்



மாறிவரும்
பெண்கள்
சிறப்பிதழ்
- இணைப்புடன்

ஆண்டுமலர்



MANGAYAR MALAR பிப்ரவரி 1996 விலை ரூ. 9

**வா**ழ்க்கையை நல்ல முறையில் வாழ்வதே பிறவிப்பயன். படிப்பு, பண்பு இரண்டும் இணைந்து செயல்படுவதே படிப்பின் பயன். படித்ததின் பயனாக உத்தியோகம் இன்று இன்றியமையாததாக ஆனாலும், ஆண் பெண் இருவரும் சமம் என்ற நிலை வந்தாலும் பெண்களுக்கே உரித்தான சில பண்புகள் இருந்தால்தான் அது பெண்ணாகப் பிறந்த தற்குப் பெருமையளிக்கும்.

மாதா பிதா குரு தெய்வம் என்பார்கள். அவர்களிலே முதன்மை ஸ்தானம் பெண்ணுக்குத்தான் கொடுக்கப்பட்டு இருக்கிறது. இந்த நாட்டில் மழை பெய்ய பலவித காரணங்கள் சொல்லப்படுகின்றன. அவைகளுள் கற்புக்கரசியான பெண்மணி 'பெய்'யென பெய்யுமாம் மழை.

'வேத மோதும் வேதியர்க்கோர் மழை
நீதி தவறா வேந்தனுக்கோர் மழை
கற்புதவறா பெண்டிர்க்கோர் மழை'

இப்படி நல்ல பெண்டிர் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கும், வளத்திற்கும் காரணமாகவே சொல்லப்படுகின்றனர். இந்த பாரத பூமியை பாரத மாதா என்பார்கள். உயிரினங்களுள் பசுவை கோமாதா என்பார்கள். இப்படிப் பல வகையிலும் பாரத நாட்டிலும், தமிழ் நாட்டிலும் பெண்களுக்கான விசேஷ கௌரவம் அளிக்கப்பட்டு வருகின்றது.

சமீபகாலமாக சினிமாவிலும், கதைகளிலும், விளம்பரங்களிலும் இப்படிப்பட்ட உன்னதமான பெண்ணினத்தை விளம்பர கவர்ச்சிப் பொருளாக ஆக்குவது வேதனைக்குரியது. படிப்பு, உத்தியோகம் என்ற பெயரில் நடை, உடை, பாவனைகளில்

## காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் நம் வாசகியருக்குத் தரும் அருளுரை

அமெரிக்க நாகரிகத்தை மிஞ்சும் வகையில் மாறி வருவது சரியல்ல. விஞ்ஞான கண்டுபிடிப்புக்களைச் செய்தவர்கள் எளிமையாக இருக்க, அதனைப் பார்க்கச் செல்பவர்கள், உபயோகிப்பவர்களிடையே ஆடம்பரம், படாடோபம் இருப்பது வேடிக்கையாக இருக்கிறது.

இந்து சமயத்தின்படி பெண்களை ஒரு போதும் அடிமையாக இருக்கச் சொன்னதில்லை. அவர்கள் இருந்ததும் இல்லை. நாட்டிலே பல பொறுப்புகள் இருப்பது போல வீட்டிலே பல பொறுப்புகள் உள்ளன. ஒரு நாட்டிற்கு இராணுவம், காவல் துறை எப்படித் தேவையோ, அவர்களுக்கு ஒரு கட்டுப்பாடும் எந்த அளவிற்குச் சுதந்திரமும் தேவையோ அதே போலத்தான் வீட்டைக் காக்கும் பொறுப்பை ஏற்ற பெண்களின் பணி நடைபெற்றது. இதை அடிமைத்தனம் என கொள்ளக் கூடாது. அதிக சுதந்திரம் அதனால் ஏற்படும் விளைவுகளைப் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம்.

சுதந்திரமாக சிந்திக்க வேண்டும்,
நல்லதை நினைக்க வேண்டும்,
நல்லதைச் செய்ய வேண்டும்.

மற்ற அரசியல் பிரசாரம் போல, பல்வேறு பிரசாரங்களில் மயங்கி பெண்கள் தங்களை பாழடித்துக் கொள்ளக் கூடாது. மங்கையர்கள் மங்களமாகவே விளங்கிக் கொண்டிருக்க மங்கையர் மலர் மூலம் ஆசீர்வதிக்கிறோம்.

# மங்கையர் மலர்

**பிப்ரவரி '96 ஆண்டு மலர்**

**மாறிவரும் பெண்கள் சிறப்பிதழ்**

மலர் : 16
இதழ் : 1







அட்டை வண்ணப்படம் :
**டி.சி. நாகேஷ்**

**வழக்கமான பகுதிகள்**





சில பிரச்சனைகள்; சில வார்த்தைகள்!

# நாம் மதிக்கப்பட வேண்டியவர்கள்!

மஞ்சுளா ரமேஷ்

**எம்.**ஓ.பி. வைஷ்ணவ பெண்கள் கல்லூரியில் ஒரு பட்டிமன்றம் - 'அழகிப் போட்டிகள் பெண்கள் விடுதலைக்கு ஓர் உதாரணமா?'. இன்றைய இளைய தலைமுறை நிறைய சிந்திக்கிறார்கள், முந்தைய தலைமுறையை விட விஷயம் தெரிந்தவர்கள் என்ற என்னுடைய உறுதியான எண்ணத்திற்கு மேலும் வலிமை சேர்ப்பதாக இருந்தது அவர்களுடைய அன்றைய பேச்சு. நான் மகிழ்ச்சியாகக் கேட்டுக் கொண்டிருந்தேன்.

ஒரு பெண் சொன்னாள், "தாய் தந்தையர் தன் குழந்தைகளை வளர்க்கும் போது, 'நம் குழந்தை இன்ஜினியர் ஆகணும், டாக்டர் ஆகணும்' என்றுதான் வளர்ப்பார்கள், இலட்



சியத்தை ஏற்படுத்துவார்களே தவிர ஐஸ்வர்யா ராய் போல வர வேண்டும், சுஷ்மிதாசென் போல வர வேண்டும் என யாரும் நினைப்பதில்லை" என்றாள். எத்தனை வாஸ்தவமான பேச்சு!

ஆனால் அப்புறம் இந்தப் பெண்களில் சிலர் கொஞ்சம் திசைமாறிப் போய் விடுகிறார்களே ஏன்? உலகப் பேரழகிகளாக பிரபலமான இரண்டுப் பெண்மணிகள் தவறாக இல்லாமல் இருக்கலாம், அவர்களால் இந்த நாட்டிற்குப் பெருமை கிடைத்திருக்கலாம். ஆனால் இவர்களுடைய புகழ் நம் நாட்டில், குறிப்பாகத் தமிழ்நாட்டில் ஏற்படுத்திய தாக்கத்தை நம்மால் மறக்கவே முடியாது. அது கொஞ்ச நாளைக்கு ஒரு மின்சார அலை போல கவர்ச்சி அலை போல வீசியது என்பதை நாம் யாரும் மறக்கவே முடியாது. தெருவுக்குத் தெரு, பகுதிக்குப் பகுதி அழகிப் போட்டிகள் நடத்தப்பட்டன. எந்தப் பெற்றோர்கள் நீ நல்லா படிச்சு முன்னுக்கு வரணும், நல்லபடியா குடும்பம் நடத்தணும் என்று சொல்வார்களோ அவர்களே தம் பெண்களை அழகிப் போட்டிகளில் பங்கேற்க ஊக்குவித்தார்கள்.

மேடைகளிலே புடவையோ, ஏதோ ஒரு டிரஸ்ஸோ அணிந்து பூனை போல (கேட்வாக்) நடந்து வந்து முன்னும் பின்னும் திரும்ப வேண்டும். அரங்கிலிருந்து 'ஹோ'வென்று கூச்சலும், விசில் சத்தமும் எழும். எப்படியும் கவர்ச்சிகரமாகத்தான் உடை உடுத்த வேண்டியிருக்கிறது. தன் மகளுக்குத் தாயே எடுப்பாக மார்பு இருக்கும்படியாக உடையெல்லாம் தைத்துக் கொடுத்தாள்.

டி.வி. சேனல்களிலும் அழகுப் போட்டி. ஊர் ஊராக நடத்தினார்கள். சில சமயம் அவையில் இருப்பவர்களே மார்க் போடுவார்கள். மேடையில் தோன்றும் பெண்களைப் பார்த்து 'நீ அழகில்லை ஓடு' எனக் கூச்சல். இப்படிப்பட்ட ஒரு 'தரமான' போட்டியில் மேடைக்குப் போக வெட்கப்பட்ட ஒரு மகளிடம் தாய், "போயேண்டி, சும்மா கலந்துகிட்டாவே ஒரு தூக்கோ, வாளியோ பிரைஸ் கிடைக்கும். போய் ஸ்டேஜ்ல நடந்துட்டு வர்றத்துக்கு என்ன வெக்கம்? ஒன்ன மாதிரி எத்தனை பேர் அங்க நடக்கலை?" என்று கேட்ட கொடுமையையெல்லாம் பார்த்துக் கொண்டு தான் இருந்தோம்.

அடேங்கப்பா, ஒரு வருடத்திற்கு மேல் இந்த அழகிப் போட்டி மோகம் நம்மையெல்

லாம் ஆட்டிப் படைத்துக் கொண்டு இருந்தது. இன்னும் முழுமையாக நின்று விடவில்லை. இப்போதும் ஆங்காங்கே நடந்து கொண்டு தான் இருக்கிறது. அந்த அளவு இல்லை என்று வேண்டுமானால் ஆறுதல்படலாம்.

உலக அளவில் அழகிப் போட்டி நடக்கும் போது சாதாரணமானவர்கள் அதைப் பிரமிப் போடு பார்க்கிறோம். நாம் பேப்பரிலும், டீ.வி.யிலும் மட்டுமே பார்க்கக்கூடிய ஒன்று என அத்தோடு நிறுத்திக் கொள்கிறோம். ஒரு அபூர்வமான கலைப் பொருளை பிரமிப்போடு 'நமக்கு எட்டாதது' எனப் பார்க்கும் தோரணைதான் அது. ஆனால் தெரு வரை இறங்கி வந்து விட்ட அழகிப் போட்டிகளால் எத்தனை ஆபத்து.

பெண் என்பவளை உடல்ரீதியாக எடை போடும்.அசிங்கம். இதற்கும் ஆடு மாடுகளை கறிக்காக எடை போடும் வியாபாரத்திற்கும் என்ன வித்தியாசம் இருக்கிறது? ஆனால் அதைக் கூட உணர முடியாத அளவிற்கு சாதாரணமானவர்களையும் இந்த மோகம் ஆட்டிப் படைத்தது படைக்கிறது என்பதுதான் வேதனை. உலக அழகிகள் தெருவில் நடக்க

பட்ட ஐந்து பெண் என்று ஏன் கொள்ள வேண்டும். இயற்கையும், காடுகளும், மலைகளும், விண்ணும், மண்ணும், பூச்சி முதல் யானை வரையிலும், ஆணும், பெண்ணும் அனைத்துமே இறைவனின் படைப்பில் அழகு தான். எங்கும், யாரும் அழகாக இருந்தால் ரசிக்க வேண்டியதுதான். இதைத் தவறு என்று சொல்லுவதும், கற்போடு சம்பந்தப்படுத்துவதும் எல்லாம் இங்கு விவாதிக்கப்பட வேண்டிய விஷயங்கள். ஒரு பெண் ஒரு ஆணை அழகு என்று சொல்லி விட்டால் அவளுடைய ஒழுக்கத்தையே சந்தேகிப்பார்கள். ஆனால் ஆண் எந்தப் பெண்ணையும் பார்த்து ரசிக்கலாம். அது ஆணாகப் பிறந்தவனின் 'ஆண் உரிமை' என்று இங்கு கொள்ளப்படுகிறது.

இப்படியெல்லாம் பல எழுதாத சமூகச் சட்டங்கள் இயற்றப்பட்டிருப்பதால்தான் பெண்களுக்கு இந்த அவல நிலை. மானே, தேனே எனும் வர்ணனைகள். வேண்டாம், இந்த பசப்பு வார்த்தைகளிலே இன்றைய இளம்பெண்கள் மயங்க வேண்டியதில்லை. மற்ற இயற்கை மிருக ஜாதிகளைப் போல இங்கே மனிதப் பிறவியும் ரசிக்கப்பட வேண்டி




# MURUDIS BENEFIT FUND LIMITED

Regd. Office: No.1 Luz Church Road, Mylapore,
Madras - 600 004. ✆ 499 45 39/ 499 43 05.

Murudis Offer the following DEPOSIT SCHEMES

**1. FIXED DEPOSIT**

| A. SHORT TERM DEPOSIT | | | | |
|---|---|---|---|---|
| Period | 46 Days | 91 Days | 181 Days | 271 Days |
| R.I. p.a | 13% | 14% | 15% | 16.5% |
| Min. Deposit | 3000 | 3000 | 3000 | 3000 |

| B. LONG TERM DEPOSIT | | | | | |
|---|---|---|---|---|---|
| Period | 1 Year | 2 Years | 3 Years | 4 Years | 5 Years |
| R.I. p.a | 18% | 18.5% | 19.5% | 20% | 21% |
| Min. Deposit | 3000 | 3000 | 3000 | 3000 | 3000 |

**2. PENSIONERS WELFARE DEPOSIT**

| PERIOD | MONTHLY INTEREST PAYMENT | | | CUMULATIVE AMOUNT | | |
|---|---|---|---|---|---|---|
| | 1 Year | 2 Years | 3 Years | 1 Year | 2 Years | 3 Years |
| Rate of Interest p.a | 20% | 20.5% | 21% | 12200 | 15000 | 18600 |
| Minimum Deposit Rs. | 10000 | 10000 | 10000 | 10000 | 10000 | 10000 |

3. **Double Benefit Deposit :** Your Deposit doubles in 42 months - Minimum Rs.5,000/-

4. **Murudi KALPATRU BOND :** Triple your money in 60 months. Minimum Rs.50,000/- Maturity Amount Rs.1,51,000/- including Bonus. Bonus payable when no loan is availed.

5. **Murudi SPECIAL BOND FOR Rs.50,000/-**
Get back Rs.50,000/- at the end of 5 years, thereafter 10 years Rs.3,00,000/-

**6. Murudis Cumulative Deposit**

| AMOUNT OF DEPOSIT | MATURITY VALUE AND DURATION OF DEPOSIT | | | | |
|---|---|---|---|---|---|
| | 12 Months | 24 Months | 36 Months | 48 Months | 60 Months |
| 3000 | 3540 | 4230 | 5100 | 6600 | 8100 |
| 5000 | 5900 | 7200 | 8600 | 11100 | 13600 |
| 10000 | 11840 | 14500 | 17250 | 22400 | 27400 |

**7. Recurring Deposit**

| MONTHLY DEPOSIT RS. | Maturity Value | | | | |
|---|---|---|---|---|---|
| | 12 Months | 24 Months | 36 Months | 48 Months | 60 Months |
| 100 | 1340 | 2960 | 4960 | 7400 | 10360 |

8. **Savings Deposit**
Minimum Deposit of Rs.100/- Interest @12% p.a.calculated on the minimum balances held in the account between 6th &26th of any month. Interest credited to the Account once half yearly.

9. **Murudis Amuda Surabi Scheme**
(i) Pay Rs.1000/- on any important day of year for 4 years and take back Rs.1100/- on the day from 5th year onwards for life time (ii) Pay Rs.1000/- monthly for 4 years and take back Rs.1100/- monthly from 5th year onwards for life time. (iii) Pay Rs.1000/- quarterly for 4 years and take back Rs.1100/- quarterly from 5th year onwards for life time. (iv) Pay Rs.1000/- half yearly for 4 years and take back Rs.1100/- from the 5th year onwards for life time.

10. **Murudis Shreemathi Scheme**
Scheme for housewives only. Rate of Interest 19.5% Minimum Deposit Rs.3000/- Minimum period of deposit will be 2 years. Loan on Deposit will be after 6 months. Foreclosure allowed but only after 12 months and the interest will be calculated on foreclosure at the F.D. rate of interest. Loans Against Gold jewels upto Rs.300/- per gram; Houseproperty (Under Madras City Limit) only.

(Transaction - With Members only) - Working Hours : 9.00 - 5.30 Sunday 9.00 to 1.00
Every Friday Holiday.

**BOARD OF DIRECTORS :**

P.H. PADMANABHAN * P.H.P. SHASHIKALA * P.K. CHANDRASEKHAR, B.Sc., C.A.
* M.SUBRAMANYA RAO B.Sc., B.L., DL.AL. * P.VADHIRAJA UPADHYA * P.RAJAGOPAL
* G. NARAYANA ACHARYA

# இதைப் பற்றி விவாதங்கள் நடக்க வேண்டும்!

**வீடுகள் கட்டித்தரும் 'ரியல் எஸ்டேட்' துறையில் பெண்கள் இருப்பது மிக அபூர்வம். காரணம் 'வீட்டைக் கட்டிப்பார்' எனப் பழமொழியே இருக்கிறதே! அந்த அளவிற்கு கடினமான துறையில் குறிப்பிடத்தக்க வெற்றிகளைப் பெற்றிருக்கும் அனுபவ் ஹோம்ஸ் லிமிடெடின் நிர்வாக இயக்குநர் திருமதி முல்லை சுப்பையா இங்கே தான் கண்ட மாற்ற மடைந்துள்ள பெண் சமூகத்தைப் பற்றி நம்முடன் பகிர்ந்து கொள்கிறார். அவர் தன்னுடன் இளைய சமுதாயத்தைச் சேர்ந்த பெண்களையும் இணைத்துக் கொண்டு பணியாற்றுகிறார். அவர்களும் நிறைய பேசினார்கள்.....**

திருமதி முல்லை சுப்பையா (நிர்வாக இயக்குநர், அனுபவ் ஹோம்ஸ் லிமிடெட்.) :

"பெண்கள் படிப்பு, தொழில் எனும் வகையில் நிறைய மாறியிருப்பது உண்மைதான். இது உயர்நிலையில். ஆனால் பொருளாதாரத்தில் அடித்தட்டிலுள்ள பெண்களைப் பார்க்கும் போது வருத்தமாகத்தான் இருக்கிறது.

வீடுகட்டும் தொழிலாளப் பெண்களிடையே பெரிய மாற்றமில்லை என்றுதான் சொல்ல வேண்டும். பாவம், நாள் முழுக்க உழைக்கிறார்கள். அவர்களுக்கு ஊதியமும் ஆண்களை விட குறைவாகத்தான் தரப்படுகிறது. ஆனால் அதை அடித்து உதைத்து வாங்கிக் கொள்ள குடிகாரக் கணவன் தயாராக இருப்பான். குழந்தைகளையும் பள்ளியில் சத்துணவு போடும் வகுப்பு வரைதான் படிக்க வைக்கிறார்கள். அதற்குப் பிறகு தங்கள் தொழிலிலேயே இழுத்துக் கொள்கிறார்கள். ஏனென்றால் ஒரு நாளைக்கு ஐம்பது ரூபாய்க்கு மேல் கிடைக்கிறதே!

படித்த பெண்களிடம் கூட இந்த பிரச்னை இருக்கத்தான் செய்கிறது. எனக்குத் தெரிந்த ஒரு பெண் - கணவனால் பாதிக்கப்பட்டவள் - அவளுக்கு வேலை கொடுத்தேன். ஆனால் ஓயாத குடும்ப பிரச்னைகள், குழந்தைகளின் நினைவு இவற்றால் அவள் அலைகழிக்கப்படுகிறாள். ஒரு பெண் என்ற முறையில் நான் அவளுக்காகப் பரிதாபப்படலாம், ஆனால் நிர்வாகி என்ற முறையில், பணிபுரிபவர் சரியாக தன் வேலையைச் செய்ய வேண்டும் என்று கண்டிப்பாக இருந்துதானே ஆகணும்.

இப்படி நிறைய இன்றைய இளம் பெண்களை அவர்களின் வருத்தங்களை பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம். உடை, கல்வி, நடவடிக்கைகள் இவற்றில் மாறியிருக்கிறார்கள். ஆனால் மனதால் மாறவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். ஒரு பெண் வாழ்க்கையில் வருத்தப்படும்போது, முன்னேற வரும்போது, சாதனைகள் படைக்கும் போது அதை இன்னொரு பெண்தான் விமர்சிக்கிறாள். பழைய காலத்தில் திண்ணையில் அமர்ந்து பேசிய பேச்சுக்கள் இன்று இடம் மாறி ஆபீஸ்களிலோ மற்ற இடங்களிலோ தொடருகிறது. எவ்வளவோ படித்த பெண்கள் கூட அப்படி இருக்கிறார்கள். அவரவர் தங்கள் தங்கள் கடமையை, வேலையை முழுமையாகச் செய்தால் அடுத்தவரைப் பார்க்க வேண்டும், குறை சொல்ல வேண்டும் என்றே தோன்றாது.

சமீபத்தில் ஒரு உலகளாவிய பெண்கள் கருத்தரங்கில் கலந்து கொண்டேன். அங்கே உயர்மட்டப் பெண்கள் தங்களுக்குள் கருத்துப் பரிமாற்றத்திற்கே தயாராக இல்லை. அவரவர்



• முல்லை சுப்பையா



• யசோதா

தாங்கள்தான் பெரியவர்கள் என்று மற்றவர்களைக் குறைச்சலாகவே பார்த்துக் கொண்டிருந்தார்கள். இது அநேகமாக உயர் பதவிகளில் உள்ள பெண்கள் பலரிடம் பார்க்க முடிகிறது.

நான் இப்படியெல்லாம் பேசுகிறேன் என்று சொன்னால் ஏதோ பெண் சமுதாயத்தையே குறை சொல்வதாக நினைக்க வேண்டாம். மிக அற்புதமான முறையில் நாம் இன்று முன்னுக்கு வந்து கொண்டு இருக்கிறோம். கல்வி, தொழில் எதிலும் பெண்களால் சாதிக்க முடிகிறது. மிகக்



கூர்மையான அறிவுள்ள பெண்களால் பல பிரச்னைகளைத் தீர்க்க முடிகிறது. நான் எம்.டியாக இருப்பதாலேயே, ஒரு பெண் இருக்கிறார் என்பதாலேயே என்னிடம் நேராக வந்து பிரச்னைகளை விவாதிக்கிறார்கள். இதனால் என்னால் பலவற்றைத் தீர்த்து வைக்க முடிகிறது. உயர் பதவிகளில் பெண்கள் இருப்பது சிறப்பானது. நம்மிடம் மேலே சொன்னது போல மிகச் சில குறைகள் உள்ளன. அவற்றையும் நாம் நீக்கிக் கொண்டோமானால் எதிர்காலம் மிகச் சிறப்பானதாக அமையும்.

அதுவேயில்லை, நாம் இப்பொழுது மிக முக்கியமான ஒரு காலக்கட்டத்திலே இருக்கிறோம் என்று கூட சொல்ல வேண்டும். ஒரு பக்கம் நம்முடைய பாரம்பரியச் சிறப்பு, மற்றொரு பக்கம் வேகமான விஞ்ஞான வளர்ச்சி. இந்த இரண்டையும் 'பாலன்ஸ்' செய்து கொண்டு போயாக வேண்டும்.

இதற்காக பள்ளி, கல்லூரிகளில் பல கருத்தரங்குகளை நடத்த வேண்டும். மாணவிகளிடையே நாம் எப்படிப்பட்ட முக்கியமான காலக்கட்டத்திலே இருக்கிறோம், நம்முடைய பொறுப்பு எத்தகையது என்பதை அவர்களை உணரச் செய்ய வேண்டும். பெற்றோர், ஆசிரியர், மாணவர்கள் சேர்ந்த அமைப்பாக இதைப் பற்றியெல்லாம் விவாதிக்க வேண்டும். இப்படிப்பட்ட நல்ல நோக்கமுள்ள விவாதங்கள், பேச்சுக்கள் எதிர்கால இந்தியச் சமுதாயத்திற்கு மிகவும் உதவிகரமாக இருக்கும்..."

குமாரி ஜ்யோத்ஸ்னா (டெபுடி மானேஜர்.)

"நாங்கள் எவ்வளவுக்கெவ்வளவு புதுமையான உடைகளுடன், எண்ணங்களுடன் இருக்கிறோமோ அந்த அளவிற்குப் பழமையையும் விரும்புகிறோம். நம்முடைய பண்பாட்டையும், கலாசாரத்தையும் விடவில்லை.

ஆனால் குழந்தைகள் நல்லபடியாக வளர வேண்டுமானால் அது பெற்றோர்களின் கையில்தான் இருக்கிறது. உதாரணத்திற்கு நான் நன்கு படிப்பவள் என்பதால் நான் விரும்பும் வரை படிக்க வைத்தார்கள். என் சகோதரி பல கலைகளில் நாட்டம் உடையவள். அவளை அந்த வகையில் ஊக்குவித்தார்கள். ஆனால் 'இவள் எவ்வளவோ நல்லா படிக்கிறாள் பார்' என்று என்னைக் காண்பித்து என் சகோதரியைத் திட்டிக் கொண்டே இருந்திருந்தால் இருவர் வாழ்க்கையுமே பாழாகி இருக்கும். அவள் தாழ்வு மனப் பான்மையால் எந்தத் துறையிலும் ஈடுபட்டு இருக்க மாட்டாள். நானும் என்னைப் போல உண்டா என கர்வியாக வளர்ந்து இருப்பேன். இன்று நிறைய பெற்றோர்கள் இந்தத் தவற்றினைச் செய்து



ஜ்யோத்ஸ்னா

CATEGORY I MERCHANT BANKER • LEASING • HIRE PURCHASE

MEMBER. NATIONAL STOCK EXCHANGE



# பெற்றோரின் அரவணைப்புக்கு ஈடான பாதுகாப்பு

ரோனக் ஃபைனான்ஸ் லிமிடெட் (Raunaq Finance Ltd.), முழு நம்பிக்கையுடன் டெபாசிட் செய்துள்ள எண்ணற்ற பல டெபாசிட்தாரர்களின் தொகைகளைக் கையாளும் போது, பொறுப்புள்ள பெற்றோரைப் போலவே செயல்படுகிறது.

**சிறப்பு அம்சங்கள்**

- டயர்கள், மோட்டார் வாகன சாதனங்கள், பொறியியல் திட்டப்பணி, மருந்துப் பொருட்கள், ஏற்றுமதி, டெலிகாம், நிதிசேவைகள் எனப்பல்வேறு துறைகளில் லாபகரமாக இயங்கிவரும் ரூ.1000 கோடி மதிப்புள்ள ரோனக்-குழுமத்தின் ஓர் அங்கம். • அனுபவம் வாய்ந்த நிதித்துறை நிபுணர்களின் நிர்வாகம். • வர்த்தக உலகின் பெரும்புள்ளிகளும், ஓய்வு பெற்ற மத்திய பாதுகாப்புத்துறை உயர் அதிகாரிகளும் இயக்குநர் குழுவில் இடம்பெற்றுள்ள நம்பகமான அமைப்பு.
- டெபாசிட் செய்துள்ள அசல் மற்றும் வட்டிக்கு பின்தேதியிட்ட காசோலைகள் / வாரண்டுகளை முன்கூட்டியே வழங்கிவிடும் நிறுவனம்.
- டெபாசிட் தொகையில் 75 % கடன்பெறவும், RBI சட்டதிட்டங்களின்படி டெபாசிட் தொகையை முன்னதாகத் திரும்பப் பெறவும் வசதி.
- செக்/DD கிடைத்த தேதியிலிருந்தே வட்டி கணக்கிடப்படும். ஃபிக்ஸட் டெபாசிட்டுக்கு ஆண்டுவட்டி 15% குமுலேடிவ் டெபாசிட்டுக்கு அதிகபட்சம் 22..14% ஆதாயம்.
- NRI டெபாசிட்கள் மாற்றத்தக்கது - மாற்ற வேண்டாதது (Repatriable / Non-Repatriable).
- நாமினேஷன் வசதி

விண்ணப்பபடிவம் மற்றும் கூடுதல் விவரங்களுக்கு எமது அலுவலகத்தையோ பிரபலமான புரோக்கர்களையோ அணுகவும்.

**போதிய பாதுகாப்புள்ளது என்பதற்கு**
**Crisil-ன் FA+ மதிப்பீடு பெற்றது.**
**Interest 15% pa**



## ரோனக் ஃபைனான்ஸ் லிமிடெட்
## (RAUNAQ FINANCE LIMITED)

ராஜ்பில்டிங், 730, மவுண்ட் ரோடு, சென்னை - 600 006. போன்: 8525303.

Corporate Office : Allahabad Bank Building, 17, Sansad Marg,New Delhi - 110 001. Ph.: 011-3746510.

நம்பிக்கை — ஆயுள் முழுவதும். *Lifetime Trust*

CATEGORY I MERCHANT BANKER • LEASING • HIRE PURCHASE

CORP. MEDIA MEN

வருகிறார்கள்.

இன்று எங்களைப் போன்ற பெண்களுக்கு நிறைய வாய்ப்புகள், வசதிகள் இருக்கின்றன. உலகளாவிய விஷயங்களைத் தெரிந்து கொள்கிறோம். மேலை நாடுகளால் பெண்கள் பல கலாசார சீரழிவுகளில் பாதிக்கப்பட்டதைப் பார்க்கிறோம். ஆனால் எங்களுக்கோ எங்கள் அடுத்த தலைமுறைக்கோ நிச்சயம் அந்த நிலை வராது. ஏனென்றால் நம் கலாசாரம் ஒவ்வொருவரின் மனதிலும் ஊறி நிற்பது. நவீன விஞ்ஞான வளர்ச்சியோடு, நம் பண்பாட்டுக் கலாசார அடிப்படையில்தான் எதிர்காலப் பெண்கள் இருப்பார்கள்...."

**குமாரி யசோதா (துணை நிலை மேலாளர்)**

"அலுவலக உறவுகளில் எங்களால் பிரச்னையில்லாமல் வாழ முடிகிறது. மேடத்தோடு (முல்லை சுப்பையா) நாங்கள் சுமுகமாக பழகுகிறோம். அவர்களும் எங்களை ஊக்குவிக்கிறார். நாங்களும் அன்பாகப் பழகுகிறோம். ஆனால் இதே வீட்டில் வரும்போது மாமியார், மருமகள் உறவு சரியாக இருப்பதில்லை. அன்பு இருவரிடமும் இருக்கிறது. அதோடு ஆளுமைத் தன்மையும் வந்து விடுகிறது. அன்பு, ஆளுமை இரண்டையும் சரியான விகிதத்தில் கலந்தால் வீட்டு உறவுகள் வெற்றிகரமாக இருக்கும். இல்லையென்றால் பிரச்னைதான்.

ஆனால் நானெல்லாம் வீடோ, அலுவலகமோ இப்படி பிரச்னைகளை வளரவிட்டுத் திண்டாடவே மாட்டேன். எதையுமே மனம் விட்டுப் பேசி நிச்சயமாக புரிந்து கொள்ள முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கு. என் மேல் குற்றம் கண்டு பிடிக்க நினைக்கும் மாமியாரிடம் உட்கார்ந்து பேசுவேன். அதெல்லாம் ப்ராக்டிகல்லா நடக்காது என்பது சரியில்லை. நான் 'இவரோடு என்ன பேசுவது?' என 'ஈகோ'வை வளர்த்துக் கொண்டால் தானே? நான்குமுறை பேச மறுப்பவர் ஐந்தாம் முறை பேசியே தீருவார். அதே போல எங்களுக்குள் தீரவே முடியாத பிரச்னை என்றால் சுமுகமாக தனியாக வாழலாம். எங்கள் தலைமுறையினர் நிச்சயம் சிக்கல்களை வளர்த்துக் கொள்ள மாட்டோம்.

அதே போல அலுவலகத்திலும் நம்மை மற்றவர் ஏமாளியாக்க விடக்கூடாது. வேலை என்று வந்து விட்டால் முழுமனதோடு நேரம் காலம் பார்க்காமல் உழைக்க வேண்டியதுதான். அதிலே பெண் என்ற சலுகையை எல்லாம் எதிர்பார்க்கக் கூடாது. ஆனால் அதே சமயம் நம்மை மற்றவர் வீழ்த்தவும் இடம் கொடுக்கக் கூடாது.

இதையெல்லாம் எங்களுடைய தலைமுறையினர் நன்கு புரிந்து கொண்டு இருக்கிறார்கள். அடுத்த தலைமுறை பெண்கள் இன்னும் சிறப்பாக இருப்பார்கள் என்ற நம்பிக்கை எனக்கு நிறையவே இருக்கிறது."

தொகுப்பு : **வளர்மதி**

# திருப்போரூரில் திருப்பணி வேண்டுகோள்

தமிழ்நாடு செங்கை எம்.ஜி.ஆர். மாவட்டம் திருப்போரூரில் எழுந்தருளி உள்ள அருள்மிகு கந்தசுவாமிப் பெருமான் திருக்கோயில் மிகவும் புகழ்பெற்ற திருக்கோயிலாகும். மதுரை மீனாட்சி அம்மன் அருளாணை பெற்று அங்கிருந்து இங்கு எழுந்தருளி இக்கோயிலை ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் இற்றைக்கு 450 ஆண்டுகளுக்கு முன்னர் நிறுவினார்கள். மூலஸ்தானத்தில் (கருவறை) எழுந்து அருளியுள்ள மூர்த்திக்கு கந்தசுவாமிப் பெருமான் என்று பெயர். மூலவர் சுயம்பு மூர்த்தி ஆவார். சிதம்பரசுவாமிகள் இவ் ஆலயத்தில் ஆற்றல் மிகுந்த சக்த வாய்ந்த எல்லாம் நற்பலன்களையும் அளிக்கின்ற ஒரு பெரிய சீரிய யந்திர பீடத்தை அமைத்துள்ளார்கள். இன்றைக்கு மக்களுக்கு அவர்கள் விழைந்த வேண்டுகோளுக்கு நற்பலன்களை அளித்து வருகிறது. அருணகிரிநாதசுவாமிகள் அருள்மிகு கந்தசுவாமி பெருமான் மீது நான்கு திருப்புகழ் பாசுரங்களைப் பாடியுள்ளார்கள். ஸ்ரீமத்சிதம்பரசுவாமிகள் இப் பெருமான் மீது "திருப்போரூர் சன்னதி முறை" என்ற தெய்வ நலம் சான்ற நூலினை அருளி செய்துவுள்ளார். இந்த நூல் மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய திருவாசகத்திற்கு நிகராகும். இது ஒரு சிறந்த பிரார்த்தனை ஸ்தலம். ஒவ்வொரு பரணி கிருத்திகைக்கும் ஆயிரக்கணக்கான அன்பர்களும், அடியார்களும், பக்தர்களும் குழுமி பிரார்த்தினை செய்து வழிபாடு புரிகின்றனர். 1984ல் இத்திருக்கோயிலுக்கு குடமுழுக்கு விழா நடைபெற்றது. 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற வேண்டும் என்ற நியதி சைவ சமய, நூல்களின் விதிகளும், ஆசார நியதியம் கூறப்படுகின்றன. அதற்கு இணங்க இவ் ஆலயத்தின் விடுபட்ட அடியில் காணும் திருப்பணிகளைத் துவங்கி குடமுழுக்கு விழா செய்ய குருவருளும், திருவருளும் கூட்டுவிக்க சைவ சமய ஆன்றோர்கள் ஆன்மீக அன்பர்கள் அறம் தோய்ந்த நெஞ்சங்களாலும், தரும சிந்தனையின் அருள் ஊற்றுப் பெருக்காலும் வந்தனையும், வழிபாடும் செய்து இச்சீரிய திருப்பணி நிறைவேற பிரார்த்திக்கின்றோம்.

இதைக் கண்ணுறும் ஆன்மநேய பெருமக்கள் அனைவரும் தங்களால் இயன்ற அளவு உபயம் செய்து திருப்பணி நிறைவேற வழி வகை புரிந்து அருள்மிகு கந்தசுவாமிப் பெருமான் திருவருளைப் பெற்று நீடு, நிறைவு வாழ்வு பெற்று உயர்வார்களாக.

மேலும் விபரங்களுக்கு ஸ்ரீலஸ்ரீ சிதம்பரம் சிவஞான சுவாமிகள், ஆதீன பரம்பரை தர்மகர்த்தவை நேரிலோ அல்லது கடிதம்ம் மூலம் தொடர்பு கொள்ளவும்.

ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் குருவே நம

அருள்மிகு கந்தசுவாமிப் பெருமாள் திருவடிகளே சரணம்.

பி. மாணிக்கம் பி.ஏ. நிர்வாக அதிகாரி

ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சிவஞான சுவாமிகள்
ஆதீன பரமபரை தர்மகர்த்தர்

அருள்மிகு கந்தசுவாமி திருக்கோயில் திருப்போரூர், செங்கை - எம்.ஜி.ஆர். மாவட்டம்.

# ரூபாய் ஒரு லட்சம் பரிசு!

**டாக்டர் ஏ.வி.ஜி. ரெட்டி இயற்கை மருத்துவமனையில்** தங்கி 30 நோயாளிகள் வரை சிகிச்சை பெறலாம்.

ஆஸ்துமா, நீரிழிவு, தோல் வியாதி நோயாளிகள் உத்தரவாதமுள்ள உடல்நலத்தை ஒரே மாதத்தில் பெறுவது உறுதி.

ஒவ்வொரு வருடமும் ஏ.வி.ஜி. ரெட்டியின் ஆலோசனையைப் பின்பற்றி சுமார் பத்தாயிரம் நோயாளிகள் உடல்நலம் பெறுகின்றனர்.

எங்களிடம் சிறுநீரகக் கோளாறு நோயாளிகளும், புற்றுநோயாளிகளும் தங்கி, சிகிச்சை பெற்று குணமடைந்துள்ளனர். குணமடைந்த செய்தி நவம்பர் 95 சுபயோகம் பத்திரிகையிலும், தேவி பத்திரிகையிலும் வெளிவந்துள்ளது.

20 வருடமாக இன்சுலின் போட்ட நோயாளி எங்களுடைய சிகிச்சையில் இன்சுலினை நிறுத்தி விட்டு பழங்களையும் சாப்பிட்டுக் கொண்டு சர்க்கரை வியாதி இல்லாமல் உடல்நலத்துடன் வாழ்கின்றார்.

நோயாளிகள் தங்கி சிகிச்சை பெற முன்பதிவு பெற்று வரவும். நேரில் வந்து தினசரி மாலை 6 மணிக்கு மேல் கீழ்க்காணும் விலாசத்தில் ஆலோசனை பெறலாம்.

மேற்கண்ட செய்திகளை எல்லாம் பொய் என்று நிரூபிக்கும் முதல் மனிதருக்கு ரூ. 1 லட்சம் பரிசு. ஒரு நோயாளி ஏ.வி.ஜி. ரெட்டியின் ஆலோசனையைப் பெற்றும் குணமடையாவிட்டால் ரூ. 1000/- நஷ்டஈடாகத் தரப்படும்.

A.V.G. NATURAL DIET CURE HOSPITAL
AG 57, THIRD AVENUE, ANNA NAGAR, MADRAS - 600 040.
PHONE : 621 57 35.

சேலத்தில்
அவுட்டோர் ரெக்கார்டிங்...
ஒருவாரம் -
கணவர் கிடையாது...
குழந்தைகள் கிடையாது...
வீட்டு ஞாபகம்
சுத்தமாய் கிடையாது...

'இவளுக்கு க்ளோஸ்-அப்...
அதை டீஃபோகஸ் பண்ணனும்...
லோ-ஆங்கில் ஷாட் வேணும்
ஃபாலோ ஃபோகஸ் பண்ணு...'
சிந்தனை முழுசும்
விஷுவலைசேஷன்!

ஊர் திரும்பியதும் -
ஓடிவந்து கட்டிக் கொண்ட
குழந்தைகள் கன்னத்தில்
இயந்திர முத்தம்...
மனசுக்குள் -
'எட்டு மணிக்கு எடிட்டிங் போகணும்...'

'ஆயா-
குழந்தைகளை ஸ்கூலுக்கு அனுப்பிடு...'
'டுர் ஓ.கேயா?'
கணவர்...
'ம்... ம்...'
அவசர முனகல்...
'சாயங்காலம்
சீக்கிரம் வருவியா?'
- தாபக் குரலுக்கு



# ஸிஸ்வரூபம்

'ஒன்பதுக்குத்தான்
எடிட்டிங் முடியும்'
வெறுமையான குரலில்
பொறுமையிழந்த பதில்...

காரில் பறந்து
எடிட்டிங்கில் மூழ்கினால் -
'மான்டாஜ் இப்படி வரணும்...
ஷாட் டிஸ்ஸால்வ் பண்ணணும்...
ஓவர்லாப் ஆடியோ ஹியர்...'
பசி-தாகம் மறந்து
படச்சுருளில்
சிற்பம் செதுக்குவேன்

சாயங்காலம் ஆறு மணிக்கு
அவசர போன்கால்.
'குழந்தைகளுக்கு
உடம்பு சரியில்லை...
டாக்டர்கிட்டே போகணும்மா...'

'ஆயா -
ஐயாவுக்கு போன் பண்ணி
அழைச்சுட்டுப் போகச் சொல்லு...'

க்ளோஸிங் ஷாட்டும்
க்ரெடிட் லைனும் போடுகையில்
பத்து என்று
கடிகாரம் கைதட்ட...

உடலும், மனசும் சோர்ந்து
வீட்டுக்குள் தளர்ந்தால்
ஜுரத்தில் சுருங்கிய
குழந்தைகள் -
'அம்மா வந்துட்டியா...?'
மடியில் மடிந்து
கைவிரல் சப்ப...
'கண்ணம்மா வந்துட்டியா..?'
கையை வருடிக்
கணவர் தோள் சாய...
இறுக்கம் இளகி...
தாய்மையும் பெண்மையும்
விஸ்வரூபமாய்
வியாபிக்கத் துவங்க...
இயந்திர மனுஷி - என்னுள்
அப்போதைக்கு இறந்தாள்....

**— ஆண்டாள் பிரியதர்ஷினி**

---

அன்று உறவினர்கள் வருகிறார்கள் என்று நிறைய சாதம் வடித்திருந்தேன். ஆனால் அவர்கள் வராமல் போகவே அனைத்துமே மீந்து விட்டது. சரி, வத்தல் போட்டுவிடலாம் என்று நினைத்திருந்தேன். திடீரென ஒரு ஐடியா கிடைத்தது. மீந்த சாதத்தை மாலையே, மிக்ஸியில் போட்டு ஒரு சுற்று சுற்றினேன். பின் வாணலியை அடுப்பில் வைத்து வெங்காயம் (பொடியாக நறுக்கியது), நறுக்கிய பச்சை மிளகாய், உப்பு, மிளகுத்தூள் சேர்த்து நன்கு வதக்கினேன். பின் பாதி வேகவைத்த உருளைக்கிழங்கை தனியே மிக்ஸியில் அரைத்துக் கொண்டேன். அரைத்த சாதத்தை சிறு சிறு உருண்டைகளாக்கி அதில் குழி செய்து, உருளைக்கிழங்கு, வெங்காய வகையறாக்களை அதில் வைத்து இறுக்க மூடி தட்டி தட்டி எண்ணெயில் பொரித்தெடுத்தேன். தட்டில் வைத்தால் இறுதியில் தட்டு மட்டும்தான் பாக்கி. அத்தனை சுவை. (டொமேடோ சாஸ் தொட்டுக் கொள்ளலாம்)



- எஸ். பிரியதர்ஷிணி



**வா**ழும் மகான்கள் - நமக்குத் தெரிந்தும் தெரியாமலும் இன்றும் எத்தனையோ பேர்கள்! அவர்கள் அனைவருக்கும் அனந்தகோடி நமஸ்காரங்கள். காலம் காலமாக மனித சமுதாயத்திற்காக வாழ்ந்த, மானுடத்தை உய்யச் செய்ய எத்தனையோ மகான்கள் தோன்றினார்கள். அவர்கள் ஜீவன் முக்தர்களாக இன்றும் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறார்கள். மனிதர்களின் பிறப்பு, வாழ்க்கைச் சூழ் நிலை, மனப்பக்குவத்தைப் பொறுத்து இந்த மகான்கள் அருளை அள்ளித் தந்து கொண்டு இருக்கிறார்கள். அவர்களிலே ஒருவர்தான் -

பகவான் ரமண மகரிஷி!

இந்த நூற்றாண்டிலே பகவான் வாழ்ந்ததால் நாமெல்லாம் பாக்கியசாலி

# 'சும்மா'தான் பார்த்தார்!

க ன் ஆனோம். பகவான் ரமணரின் வாழ்வினை நோக்க நோக்க விந்தையாக இருக்கிறது. பெரும் ஞானியாக இருப்பவர்கள் வாழும் நாட்களிலே எப்போதும் ஆன்மீகச் சிந்தனையில் இருப்பதால் அதிகம் பேச மாட்டார்கள். பேசினாலும் உயர்ந்த ஆன்மீகமும், தத்துவார்த்தமுமே இருக்கும். ஆனால், 'நான் யார்?' எனும் ஆத்மவிசாரத்தை மானுட வர்க்கத்திற்குக் கூறிய பகவானோ எளியோருக்கு எளியோராக இருந்திருக்கிறார்! குரங்குகளும், மயில்களும் என எத்தனையோ ஜீவராசிகளோடு நண்பராய் இருந்திருக்கிறார். குழந்தைகளோடு குழந்தையாய் விளையாடி இருக்கிறார்.

அண்ணாமலையாய் ஆன்மீக ஞானத்தில் உயர்ந்திருந்த பகவான், அருளே வடிவாய், எளிமையாய் ஒரு சாதாரண மானுடன் போல மனிதர்களோடு பழகியதைப் பார்க்கும்போது மனிதன் எப்படி வாழ வேண்டும் என்பதற்கு மனிதர்களுக்கு வழிகாட்டியும் சென்றிருக்கிறார் என்றுதான் தோன்றுகிறது.

**1879**இல் மதுரையில் பிறந்த வெங்கட்ராமன் வளர்ந்தபோது ஒரு வித்தியாசமும் தெரியவில்லை. பள்ளியில் படித்துக்





• ரமணரின் நினைவாலயத்தில் வேத கோஷம்...

கொண்டிருந்தான்.

படிப்பில் ஒன்றும் பெரிய கட்டி இல்லை. சாதாரணமாகப் படித்து, சாதாரணமாக விளையாடி.... பதினாறாவது வயதில் ஓர் உறவினர் வந்தபோது 'திரு வண்ணாமலையிலிருந்து வருகிறேன்' என்றார் அவனிடம். 'திருவண்ணாமலை' என்ற சொல் வெங்கட்ராமனைக் காந்தம் போல இழுத்தது. 'ஷாக்' அடித்தவன் போல ஆனவன் அப்புறம் சாதாரணமாக ஆகிவிட்டான். பிறகு சிறிது நாள் கழித்து ஒருநாள் மொட்டை மாடியில் படுத்துக் கொண்டு ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டிருந்த சிறுவனுக்கு, 'தான் செத்துப் போனால் என்ன ஆவேன்' என்ற மரணபயம் வந்தது. அப்படி ஆனால் என்ன ஆகும் என ஆராயத் தொடங்கிய அந்த விநாடியே வெங்கட்ராமன் எனும் மானிடன் மகான் ஆகத் தொடங்கினான்.

எத்தனையோ தவசிகள், எத்தனையோ பிரம்மஞானிகள் காலம் காலமாகத் தவம் தவமாய் இருந்தும் அடைய முடியாத ஞானப்பக்குவத்தை அந்தச் சில விநாடி களில் பெற்றுவிட்டான் அந்தச் சிறுவன். அது தான் அலகிலா விளையாட்டு உடையானின் திருவருள் போலும்!

அதைப் பற்றிப் பிற்பாடு குறிப்பிடும்போது பகவானே, "நான் சமாதிநிலை அடைகிறேன், பல வருடங்கள் தவநிலையில் இருந்தேன். என்றெல்லாம் சொல்கிறார்கள். ஆனால் மதுரையில் நான் பெற்ற அனுபவத்திற்கு ஈடு இணை கிடையாது" என்கிறார்.

அதற்குப் பின் வெங்கட்ராமனின் போக்கே மாறிவிட்டது. படிப்பில், குடும்பத்தின் உறவுகளில் நாட்டமில்லை. அம்மாவும் உடன்பிறந்தவர்களும் பயந்து விட்டார்கள். அண்ணன் நாகசாமி தம்பி படிப்பதில்லை எனத் திட்டத் தொடங்கினார். அதனால் ஒரு நாள் வெகு தீவிரமாக வீட்டுப் பாடம் எழுதத் தொடங்கினான். பாதி எழுதிக் கொண்டிருக்கும்போதே 'இதெல்லாம் அர்த்தமில்லாத ஒன்று' என்று தோன்றியது. எடுத்து வைத்து விட்டு ஏதோ சிந்தனையில் ஆழ்ந்துவிட்டான்.

"படிக்காத பயலுக்கு இதெல்லாம் எதுக்குடா?" எனக் கோபத்துடன் இவனுடைய நடவடிக்கையைப் பார்த்து



• கடைசியாக பகவான் வசித்த அறை...

அன்னன் சப்தம் போட்டிருக்கிறார். வெங்கட்ராமனுக்கு அவர் சொன்னது நியாயமாகவே பட்டது. 'ஆமாம், நமக்கு இதெல்லாம் எதற்கு?' என யோசித்தவன், அண்ணன் கல்லூரி பீஸ் கட்டக் கொடுத்த பணத்தில் தனக்குத் தேவையானதை எடுத்துக் கொண்டு கிளம்பிவிட்டான். தான் முன்பே பெயரால் ஈர்க்கப்பட்ட திருவண்ணாமலை நோக்கிப் போவதற்குச் சரியாக வழியும் தெரியாமல் விழுப்புரத்தில் இறங்கி நடந்தே போய், பசியால் மயங்கி ஆகமொத்தம் இறுதியில் திருவண்ணாமலையை அடைந்தான்.

* போஜன சாலையில்...

அண்ணாமலையார் கோவிலில் ஆங்காங்கே நிஷ்டையில் ஆழ்ந்துவிட்ட இச்சிறுவனைக் கண்ட, அவன் வயதொத்த சிறுவர்கள், கேலி செய்யவும் துன்புறுத்தவும் ஆரம்பித்தார்கள். அவரின் மகத்துவத்தை உணர்ந்து கொண்ட அங்கு அப்போது வாழ்ந்து கொண்டிருந்த சேஷாத்ரி சுவாமிகள் அவர்களை விரட்டி அடிப்பாராம். இறுதியில் பாதாள லிங்கம் எனும் அங்கேயே இருக்கும் மற்றொரு சுரங்கக் கோயிலில் போய் அமர்ந்துவிட்டான்.

அவனைப் பொறுத்த வரை காலம் நின்றுவிட்டது. மற்றவர்க்கோ மாதங்கள் ஓடியது. கரையானும், எறும்புகளும் அவன் உடலை அரித்தன. அப்படியே நிஷ்டையில் ஆழ்ந்துபோன அவனை அனேகம் பேர் கண்டு வெளியே எடுத்து வந்தனர். அந்த பாலயோகியின் நிலை கண்டு பக்தர்கள் மனம் கலங்கினார்கள். பிராமண ஸ்வாமிகள் எனப் பெயரிட்டு அழைக்க ஆரம்பித்தார்கள்.

பிராமண ஸ்வாமிகள் பல இடங்கள் மாறிக் கடைசியில் அண்ணாமலையில் விருபாக்ஷி குகையில் தங்க ஆரம்பித்தார். அவருடைய தேஜோமயமான கண்களும், அருள் வடிவான முகமும் ஆயிரக்கணக்கான பக்தர்களை ஈர்த்தது. இவர் இங்கு இருப்பதைக் கேள்விப்பட்டு இவரைத் தேடி இவரது அன்னையும் வந்தார். அவருடைய குடும்பத்தினர் எத்தனையோ மன்றாடிக் கேட்டும் பாலயோகி வர மறுத்துவிட்டார். பல காலங்களுக்குப் பின்னர் அன்னையும், தீக்ஷை பெற்று இவருடைய சகோதரரும் கூட இங்கேயே தஞ்சமென வந்துவிட்டனர். அது பிற்காலத்திய சம்பவங்கள்.





* ரமண வித்யா ட்ரஸ்ட்டில் கமலா பரசுராமன்



• எலிஸபெத்

விருபாக்ஷி குகையில் தவ வாழ்வை வாழ்ந்து வந்த பிராமண ஸ்வாமிகள் பகவான் ரமண மகரிஷி ஆனார். இவருடைய பெருமை யினை வேதங்களை முழுதும் கற்ற கணபதி சாஸ்திரிகள் இந்தியாவிற்கு எடுத்துரைத்தார். மிகச் சிறந்த தத்துவ விசாரகரான பால் பிரிண்டன் எனும் வெளிநாட்டவர் இந்தியா முழுக்கச் சுற்றி ஆன்மீக நிறைவு அடையாதவர், பகவான் ரமணரைக் கண்டபின்தான் நிறைவு பெற்றார். அவர் பகவானுடன் நிகழ்த்திய உரையாடலை மிகச் சிறந்த ஒரு தொகுப்பாக வெளியிட்டார். அதுவே வெளிநாட்டவர் ஏராளமானோரை உணரச் செய்து பகவான் பால் ஈர்க்க ஆரம்பித்தது. பகவானின் புகழ் உலகம் முழுக்க பரவ ஆரம்பித்தது.

'நயன தீக்ஷை' என்பார்களே, அப்படிக் கண்களால் பகவான் பார்த்தாலே போதும். மனம் நிறைய சந்தேகங்களுடனும், துக்கங்களுடனும் வருகிறவர்க்கெல்லாம் தீர்ந்து போனது. மாபெரும் அறிவாளிகள், ஞான மார்க்கத்தில் செல்பவர்கள், ஆன்மீகப் பெரியோர்களுக்கெல்லாம் அண்ணாமலையில் கலங்கரை தீபமாய் ஒளிவிட்டுக் கொண்டிருந்தார் பகவான்.

மாபெரும் ஞானியாக, வழிகாட்டும் தீபமாக, கண்கண்ட தெய்வமாக வாழ்ந்த மகான் எளியோருக்கும் எளியோனாக வாழ்ந்ததுதான் அதிசயம். அவருடன் குரங்குகளும், மயில்களும் தோழர்களாக வலம் வந்தன. பக்தி தவிர எதுவுமே தெரியாத முதலியார் பாட்டி, அகிலாண்டம்மாள், கனகம்மாள் போன்றவர்கள் எல்லாம் அவரை மானிடத் தெய்வமாகவே தொழுது பணிவிடை செய்திருக்கிறார்கள். அங்கேயே அவருடனேயே வாழ்ந்த எச்சம்மாள் பாட்டி சமைக்கும்போது இவரும் போய் சில சமயங்களில் கறிகாய் கூட நறுக்கிக் கொடுப்பாராம். அறிவாளிகளுக்கு மகாஞானியான பகவான் பக்தர்களுக்குத் தொண்டனாக வாழ்ந்ததுதான் அதிசயம். ஞானம் மட்டுமில்லை, எளிமையும் இனிமையும் கூட எப்பேர்ப்பட்டவர்களுக்கும் தேவை என பரிபூரணமாக வாழ்ந்து காட்டியிருக்கிறார்.

பிற்பாடு தாயார் இவரோடு சேர்ந்து கொண்டபோது, "ஐயையோ, அவன்னாம் தொட்டுட்டாளே, உன் 'மடி' ஆசாரம் போயிடுத்தே" எனக் கேலி செய்து, கேலி செய்தே அன்னையையும் பக்குவப்படுத்தி இருக்கிறார். சாதி சமயம் கடந்த சமரச ஞானியாகவும் வாழ்ந்திருக்கிறார்.

1947 இல் உடல் நலிவுற்ற பகவானுக்குக் கையில் புற்று நோய் தோன்றியது. அவர் உடல் படும் உபாதையைக் கண்டு பக்தர்கள் கண்ணீர் வடிப்பார்கள். பகவானோ அதற்கும் தனக்கும் சம்பந்தமில்லாதது போல வாழ்ந்தார். மிகவும் உடல் நலம் குன்றிய பகவான் 1950 ஏப்ரல் 14 இல் மகாசமாதி அடைந்தார். அப்போது ஓர் ஒளி தோன்றி வானில் மறைந்ததை பம்பாயில் உள்ளவர்கள் வரை பார்த்திருக்கிறார்கள்.



• மணி



• சாந்தினி

வாழ்ந்த காலத்திலே தன்னிடம் வருவோர்க்கு ஞானவிளக்கை, அன்பு விளக்கை ஏற்றிய பகவான் இன்றும் வழிகாட்டிக் கொண்டுதான் இருக்கிறார். அதைத்தான் சமீபத்தில் ரமணாச்ரமம் போயிருந்தபோது அங்கிருந்த பலருடன் பேசியபோது என்னால் உணர முடிந்தது.

சாந்தினி - ஸ்டெல்லா மேரீஸ் கல்லூரியின் பேராசிரியை, "எனக்குச் சின்னச் சின்ன விஷயங்களுக்குக் கூட பகவான் வழிகாட்டுகிறார். நான் இங்கே வருவது கூட அவருடைய அருள்தான். திருவண்ணாமலைக்குப் போகலாம், எனக்கு வழிகாட்டு எனச் சொல்லி என்னைப் புறப்படச் செய்பவர்கள் அவர்கள் நின்றுவிடுவார்கள், நான் வந்துவிடுவேன். இப்படிப் பல முறை பல மாதிரியாக.

இங்கே வந்தவுடன் என் மனம் நிறைந்துவிடுகிறது. பரிபூரண ஆனந்தம், அமைதி கிடைக்கிறது. மற்றதெல்லாம் ஒரு பொருட்டாகவே தோன்றவில்லை. இதைவிட ஒரு

# வெடிப்புகளிலிருந்து விடுதலை பெற்று, பாதங்கள் மீண்டும் அழகுறும் - 14 நாட்களில்

வெடிப்புகள் எவ்வளவு அருவருப்பாக மற்றும் வலியூட்டுவதாக உள்ளன. கோல்ட் க்ரீம் மற்றும் ஜெல்லி மிகக் குறைந்த காலத்திற்கே ஆறுதல் அளிக்கவல்லது. ஆனால், மனம் தளர வேண்டாம். இப்போது உள்ளது தனிச்சிறப்பாக தயாரிக்கப்பட்ட புதிய க்ராக் க்ரீம். இதன் சிறப்பான "ஈ ஜெல்" (ஈமோலியண்ட் ஜீல்) ஃபார்முலா மற்றும் இதில் கலந்துள்ள அரிய மூலிகைகள் வெடிப்புகளில் ஆழ்ந்து ஊடுருவிச் சென்று உங்களுக்கு உடனடி ஆறுதல் அளிக்கிறது. 14 நாட்களில் * நீங்கள் பூரண குணம் பெறுவீர்கள். உங்கள் பாதங்களும் அவ்வாறே பொலிவுடன் விளங்குகின்றன எவ்வாறு உங்கள் அழகான முகம் விளங்குவதுபோல். *க்ராக் க்ரீம் தினமும் 3 முறை தடவுங்கள். இதைத் தடவியபின் 15 நிமிடங்கள் வரை உலரவிடுங்கள்.







க்ராக் ஆண்டிசெப்டிக் க்ரீம்



மனிதனுக்கு வேறென்ன வேண்டும்" எனக் கேட்கிறார். உங்கள் வாழ்க்கையில் ஏதாவது 'மிராகிள்' நடந்ததா என நான் கேட்டதற்குத் தான் இந்த பதில்.

வட கனடாவிலிருந்து வந்திருக்கும் எலிசபெத், "உங்களுக்கு மேற்கத்திய கலாசாரம், வேகம் தெரியும். அப்படிப் பிறந்து வளர்ந்த எனக்கு ரமணரைப் புரிந்து கொள்ள ஆரம்பித்த பிறகு என்னைச் சுற்றி நடப்பவை எல்லாமே வேடிக்கையாக இருந்தது. நான் மாற்றும் உடை போல, ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு முகம் காட்டுகிறேன், அம்மா, மகள், மனைவி என. அப்படியானால் உண்மையில் நான் யார்? எதற்கு இப்படிப் பைத்தியம் பிடித்தாற் போல் ஓடுகிறேன் என யோசிக்க ஆரம்பித்தேன்" என்கிறார்.

இன்று உலகம் பூரா இந்த நிலைமைதான். மனிதனுக்குத் தேவை ஆத்ம நிம்மதி, அதை எங்கு பெற வேண்டுமோ பெற்று பூரணத்துவத்துடன் வாழ்வதுதான் வாழ்க்கை எனப் புரியாமல் பணம், பதவி, பட்டம் பின்னால் தலைதெறிக்க ஓடுகிறார்கள். அதனால்



ஏகப்பட்ட சிக்கல்கள். எலிசபெத் இதையெல்லாம் உணர்ந்தார். பகவானின் அருள்மொழிகளாலே நிம்மதியைக் கண்டார். வாழ்வின் பொருளை உணர்ந்து கொண்டு இருக்கிறார்.

இவர்கள் ஆன்மீகத் தேடலில் இருந்தது போல பக்தியிலே ரமணரிடம் கரைந்தவர்கள் ஆந்திராவிலிருந்து வந்த வரலட்சுமியும், தென்னகத்திலிருந்து வந்த ஹேமாவதி தம்பதியினரும்.

"அருணாசல சிவ அருணாசல சிவ"

என அருணையும், ரமணரையும் அவர் பாடிய பாடல்களைப் பாடுவதன் மூலமே வழிபட்டு வாழ்வில் எங்கும் கிடைக்காத நிம்மதியுடன் வாழ்கிறார்கள். வியட்நாமில் பிறந்து பிரான்சில் வளர்ந்த 'மாய்' இங்கே ரமணரின் போதனைகளில் தன்னை மறந்து போகிறாள்.

தன் அன்னைக்கு நல்வழிகாட்டி அவரை நல்லடக்கம் செய்த இடத்திலேயே மாத்ருபூதேஸ்வரர் கோயிலை எழுப்பி இருக்கிறார் ரமணர். அக்கோயில் இப்போது சக்திபீடமாக விளங்குகிறது. ஸ்ரீ சக்கரத்தை அங்கே நிறுவி இருப்பதால் அம்மன் கோயில்களுக்குரிய சண்டி ஹோமம், நவராத்திரி ஆராதனைகள் உண்டு. பக்கத்திலேயே பெரிய ஹாலில் ரமணரின் பூத உடல் மறைந்த இடம் நினைவாலயமாக இருக்கிறது. அங்கே வேத கோஷங்கள் முழங்குகின்றன. காலை மாலை இரு வேளையும் அங்கேயே வேத பாடசாலையில் பயிலும் மாணவர்கள் வேதம் சொல்கிறார்கள். பக்கத்திலே தியான மண்டபம். உள்ளே காலடி வைத்தாலே மின்சாரம் பரவுவது போன்ற பிரமை. கால் நீட்டி அமர்ந்திருக்கும் ரமணர் படத்தின் முன் கண்மூடி தியானிக்கும் பக்தர்கள். வெகு எளிதில் தியானம் கைகூடும் வித்தையை அங்கே அறிய முடிகிறது. அடுத்து மூன்று வேளையும் ரமணாச்ரமம் வரும் அன்பருக்கு 'இல்லை'யென்னாது அன்னமிடும் போஜன சாலை.

"பகவான் எல்லோரோடும் உட்கார்ந்துதான் சாப்பிடுவார். அவருக்குன்னு தனியா ஒண்ணும் கிடையாது. அத்தனை பேரும் சாப்பிட ஆரம்பித்த பிறகுதான் இவர் சாப்பிட ஆரம்பிப்பார். ஜாதிமத வித்தியாசமே கிடையாது. குரங்குகளை யாராச்சும் விரட்டினா, 'ஏண்டா அதை விரட்டறே? அவங்களோட இடத்துக்கு நாமதான் வந்திருக்கிறோம். அதனால் இந்த இடத்துல முதல்



• வரலட்சுமி



• மாய்

"அருமறை யாவும் கற்றேன். வேதாந்த சாஸ்திரங்கள் அனைத்தும் அறிந்துள்ளேன். மனம் நிறைவுறுமளவு மந்திர ஜபம் பண்ணினேன். ஆனால் இதுவரை தவம் என்பதன் தாத்பர்யம் எனக்கு விளங்கவில்லை!"

- கணபதி சாஸ்திரிகளின் கேள்வி

"நான் நான் என்பது எங்கிருந்து புறப்படுகிறதோ அதனைக் கவனித்தால் மனம் அங்கே லீனமாகும் (ஒடுங்கும்); அதுவே தபஸ். ஒரு மந்திரத்தை ஜபம் பண்ணினால் அந்த மந்திரத் த்வனி எங்கிருந்து புறப்படுகிறது என்று கவனித்தால் மனம் அங்கே லீனமாகிறது. அதுதான் தபஸ்!"

- பகவான் ரமணரின் பதில்

உரிமை அதுங்களுக்குத்தான்' என்பாராம். என் வாழ்க்கையிலேயும் எத்தனையோ பிரச்னைகளுக்கு அருவமா வழிகாட்டி இருக்கிறார்" என்கிறார் இங்கு பணிபுரியும் சந்திர மௌலி.

"நான் சின்னப் பையனா இருந்தப்போ ரமணரைப் பார்த்து இருக்கேன். நாங்கள்ளாம் அவர் பக்கத்துலேயே அமர்ந்து விளையாடுவோம். அப்போல்லாம் அவர் எப்பேர்ப்பட்ட மகான்னு தெரியாது. வளர்ந்து பெரியவனாகி அவருடைய உபதேசங்களையெல்லாம் படிச்சப்புறம்தான் தெரிஞ்சுண்டேன். அவருடைய சகோதரர் வழியில் நான் பிறந்தேன்கிறது என்னோட பாக்கியம்தான்" என்கிறார் நிர்வாகத்தைப் பார்த்துக் கொள்ளும் திரு. மணி.

"போஜன சாலையில் ஒருவேளைக்கு எத்தனை பக்தர்கள் வருவான்னு தெரியாது. பகவான் மேலே பாரத்தைப் போட்டுட்டுச் செய்வோம். கரெக்டா இருக்கும். ஒருநாள் கூட நாங்கள் திணறிப் போனதில்லை. பகவான் இன்றைக்கும் எங்களுக்குப் பல வழிகளிலே வழிகாட்டிட்டுதான் இருக்கார். அதைப் பிரத்யட்சமா நாங்க பார்க்கிறோம்" என்கிறார் மணி மெய்சிலிர்க்க.

சாதாரண பாலயோகியாக அண்ணாமலையைத் தஞ்சமடைந்தவர் பகவான் ரமணராகக் காட்சியளிக்க ஆரம்பித்தபோது நாடி வந்த பக்தவெள்ளம் ஏராளம். அப்படியே விருபாக்ஷி குகையிலேயே அமர்ந்து கொண்டு இருக்க முடியாது. கீழிறங்கி அண்ணாமலைச் சாரலிலே ரமணாச்ரமம் தோன்றியது. இன்று அங்கு புத்தக சாலையிலிருந்து, போஜன சாலை வரை விரிந்திருக்கிறது. கோ சாலையிலோ அன்புடன் பராமரிக்கப்படும் நூற்றுக்கணக்கான பசுக்கள். இன்றைய ரமணாச்ரமம் வேரூன்றி நிற்க பட்ட பிரயத்தனங்கள் நிறைய. அந்த முக்கண்ணனே பூவுலகில் வந்தாலும் மானுட சிக்கல்களை ஏற்றுத்தானே ஆக வேண்டும்?

அப்படிப்பட்ட பல பிரச்னைகளைச் சந்தித்து இன்றைய நிலைக்கு உயர்த்தக் காரணமாக இருந்தவர் ஸ்வாமி ரமணானந்தா. பகவானின் சகோதரர் நாகசாமியின் புதல்வரான இவர் அதற்காகப் பட்ட சிரமங்கள் நிறைய. பட்ட துன்பங்கள் கணக்கிலடங்காதது. ஏச்சையும் பேச்சையும் கேட்டுக் கொண்டு படாத பாடுபட்டு, எந்தக் காரணத்தைக் கொண்டும் பகவானின் இலட்சியத்திலிருந்து இந்த ஆச்ரமம் மாறிவிடக் கூடாது என்று நிறைய பாடுபட்டிருக்கிறார். அவருடைய அனுபவங்கள் சொல்லச் சொல்ல அவருக்குள் பொங்கி வருகிறது.

"இப்போ நான் ரொம்ப சந்தோஷமா இருக்கேன்மா. ஒருவழியா ஆச்ரமம் 'எஸ்டாப்ளிஷ்' ஆயாச்சு. இன்னிக்குச் சாப்பாட்டுக்கு என்ன பண்ண அப்படிங்கற நிலைபோய், நூத்துக்கணக்கிலே பக்தர்கள் வந்து பசியாறுற நிலைமை இருக்கு. ஆச்ரமம் நல்லா இருக்கு. இது போதும் எனக்கு. எல்லாம் பகவானோட கிருபை" என்கிறார் ஸ்வாமி.

வெளிநாடுகளில் பல இடங்களில் 'ரமணா சென்டர்' நிறுவப்பட்டு இன்று பல்லாயிரக் கணக்கான பக்தர்கள் ரமணானந்தத்தில் மூழ்கித் திளைக்கிறார்கள். டெல்லி, பெங்களூரிலும் கூட இருக்கின்றன. ஆனால், சென்னையிலே சிறந்த முறையில் ஒரு சென்டர் இல்லையென்பது பக்தர்களுக்கு ரொம்பவும் குறை. அதனால் பல முயற்சிகள் எடுக்கப் பட்டன. ஏனெனில் வெளிநாடு, வெளி மாநிலங்களில் இருந்து ஆன்மீக உணர்வுகளோடு வருகிறவர்களுக்கு அதே நிலையில் ஒரு தங்குமிடம் சென்னையில் இருந்தால் தங்கி திருவண்ணாமலைக்குப் போகலாம் என்றிருக்கும். அந்தக் குறை நீங்க சமீபத்தில் ஒரு பிரம்மாண்ட முயற்சியை ஆர். வெங்கடகிருஷ்ணன் எனும் பக்தரின் தலைமையில் பலரும் ஆரம்பித்திருக்கிறார்கள். 'ஸ்ரீ ரமண வித்யா டிரஸ்ட்' எனும் பெயரில்,

*அவரவர் பிராரப்தப் பிரகாரம் அதற்கானவன் ஆங்காங்கிருந்து ஆட்டுவிப்பான். என்றும் நடவாதது என் முயற்சிக்கினும் நடவாது. நடப்பது என் தடை செய்யினும் நில்லாது. இதுவே திண்ணம். ஆகலின், மௌனமாயிருக்கை நன்று.*

(தன்னை ஊருக்குத் திரும்ப அழைத்த அன்னைக்கு மறுத்து பகவான் எழுதிக் கொடுத்தது.)

38, கிருஷ்ணசாமி அவின்யூ, லஸ் சர்ச் ரோடு, சென்னை - 4 இல் ஆரம்பித்து இருக்கிறார்கள்.

"வேளச்சேரியில் ஒரு ஏக்கருக்கும் மேலாக நிலம் வாங்கியாயிற்று. ஒவ்வோர் அன்பரும் ஒவ்வொரு மெட்டீரியல் தருகிறேன் எனச் சொல்லி இருக்கிறார்கள். தியான மண்டபம், கோயில், லைப்ரரி என ஓர் அமைதியான ஆன்மீகச் சூழ்நிலையை எழுப்ப இருக்கிறோம். அதேசமயம் பகவானின் உபதேச மொழிகளைப் பரப்புவதற்காக நகரின் பல இடங்களில் சென்டர்களில் பூஜை, வழிபாடு என நடந்து கொண்டு வருகிறது. பகவானின் சிந்தனைகளைப் பரப்ப வேண்டும் என்பதுதான் எங்கள் நோக்கம்" என்கிறார்கள் இந்த ட்ரஸ்டில் மிகவும் ஆர்வத்துடன் பணியாற்றி வரும் ஸ்ரீராம், ரமணன், சங்கர் போன்ற பக்தர்கள்.

இந்தக் கட்டுரை எழுதவும், இந்த முறை திருவண்ணாமலை பால் ஈர்க்கப்படவுமே காரணமாக இருந்தவர் கமலா பரசுராமன் எனலாம். எத்தனையோ முறை ரமணாச்ரமம் போயிருந்தாலும், அவரின் உபதேச மொழிகளைப் படித்திருந்தாலும் அதை எழுத்து வடிவாக்க காரண கர்த்தா கப்பா எலக்ட்ரிகல்ஸ் உரிமையாளர் கமலா பரசுராமன்தான்.

"நீங்க வாழும் மகான்கள் எழுதினீங்க. பகவான் ரமணர் திருவண்ணாமலைக்கு 1896 இல் வந்தார். அதனால இந்த வருடம் ரமணாச்ரமத்துல நூற்றாண்டு விழா கொண்டாடப் போறாங்க. நீங்க ஏன் அந்த மகானைப் பத்தி எழுதக் கூடாது" எனும் தீப்பொறியை வைத்தார். மகா ரமண பக்தரான அவர்,

"அம்மாவோட வாக்கியம்தான் எனக்குள்ள ரமணரைப் பத்திப் போட்ட விதைன்னு நினைக்கிறேன். நான் சின்னவளா இருந்தப்போ என் பெற்றோர் ரமணரைப் பார்த்துட்டு வந்துருக்கா. ஊரிலிருந்து வந்த அம்மாவை நான், "பகவான் என்ன சொன்னார்னு கேட்டேன். 'சும்மாதான் பார்த்தார்' அப்படீன்னாங்க. சும்மாதான் பார்த்தார் என்பது எப்பேர்ப்பட்ட வார்த்தை, ரமணரின் கண் பார்வையிலே எத்தனை அருள் ஞானம் கிடைக்கும்கிறதெல்லாம் எனக்குத் தெரியாது. ஆனால் என்னவோ அந்த 'சும்மாதான் பார்த்தார்'ங்கிற வார்த்தை அப்படியே மனசுல தங்கிப் போச்சு. அந்த வார்த்தை தூண்டுகோலாய் அவருடைய புத்தகங்களை எல்லாம் படிச்சேன். இன்றைய என்னுடைய வாழ்க்கைக்கு பகவானின் அருள்தான் காரணம்" என்கிறார் கமலா பரசுராமன். திருவண்ணாமலை பிரயாணத்துக்குக் காரணமாக இருந்த அவர், அங்கே ஆசிரமத்தில் அழகாக அறிமுகப்படுத்தி நாம் தேடிப் போன விஷயங்களைச் சீராக அமைத்துக் கொடுக்கவும் செய்தார். நிறைய ஆச்ரமத்திற்குச் செய்திருக்கிறார் என்பதைப் பிற்பாடு அங்கு தெரிந்து கொண்டோம்.

இப்படி ஆயிரக்கணக்கில் பக்தர்கள். வித விதமான நிலையில் அன்பர்கள் இந்த நோக்கில் பகவானைப் பார்க்கப் பார்க்க இப்படி ஒரு மகானா என ஆச்சர்யமாக இருக்கிறது! கிரிவலம் வந்து பஜனை நாமாவளியிலே தங்களைக் கரைத்துக் கொள்ளும் அன்பர்களில் இருந்து, தியானத்திலே ஆழ்ந்து 'நான் யார்?' என ஆத்மவிசாரத்தில் நாடும் யோகிகள் வரை அனைவரையும் இந்த அண்ணாமலை இழுக்கிறது!

இன்றைய சூழலில் உழைத்தால் அனைத்தும் கிடைக்கும். கிடைக்காதது நாம் உணர்ந்து நாடிப் போனால் ஒழிய நம்மை நாடாத மனோ நிறைவு, மனோ நிம்மதிதான். அதை ஞானிகளின் பாதங்களிலே, யோகிகளின் பார்வையிலே, தவநெறியாளர்களின் அருகாமையிலேதான் பெற முடியும். பகவான் ரமண மகரிஷி வாழ்ந்து இன்றும் அருள் பொழிந்து கொண்டிருக்கும் ரமணாஸ்ரமத்திலே அது நிறையவே கிடைக்கிறது.

**- மஞ்சுளா ரமேஷ்**

படங்கள் : **ஜி. சுரேஷ்**

நம் அன்றாட வாழ்க்கையில்- நடைமுறைகளில் தான் எத்தனை மாறுதல்கள்? புடைவை போய் சுடிதார் வந்து விட்டது ஒரு புறம் இருக்க 'கணவன் பெயரைச் சொல்லலாமா?' என அஞ்சிய காலம் போய் கணவனின் பெயர் சொல்லியே அழைத்து – ஒருமையில் நீ, வா என குறிப்பிட்டுப் பேசும் அளவிற்கு நிலைமை மாறி விட்டது. பெரியவர்கள் எதிரில் சரிசமமாக உட்காரக் கூடாது, மாமனார் பெரிய மைத்துனர் போன்ற வர்கள் எதிரில் நின்று பேசக் கூடாது என்ற நிலைமாறி 'மரியாதை என்பது மனதில் இருந்தால் போதும்'என்னும் காலம்.

மோட்டர் சைக்கிள் போன்ற இரண்டு சக்கர வாகனங்களில் கணவர் அல்லது சகோதரர்களின் பின்னால் மட்டுமே பெண்கள் அமர்ந்து சென்ற காலம் மாறி, பழகியவர்களின் பின்னால் எத்தனையோ பெண்கள் அமர்ந்து செல்லுகின்றனர். இந்த மாற்றங்கள் பற்றிய கருத்துக்களை நான்கு பெண்களிடம் கேட்டபோது–



• மைதிலி



## செல்வி. சுபா (டெலிகாமில் பணிபுரிபவர்)

“நாம் அணியும் உடைகள் 'மார்டனாக' இருப்பதில் தவறு இல்லை. ஆனால் பார்ப்பவர்களின் கண்களை உறுத்தாத வகையில் இருக்க வேண்டும். உடுத்தும் உடைகள் நம்மைப் பற்றிய மதிப்பை உயர்த்தக் கூடிய வகையில் அமைய வேண்டும். மற்றவர்கள் நம்மை மட்டமாக எடை போடாத வகையில் உடுத்துவதுதான் சிறந்தது. புடைவையில் இருக்கும் நளினமும் அழகும் வேறு எந்த உடையிலும் இல்லை என்பதுதான் என் எண்ணம். சுடிதார் கூட இரண்டாவதுதான்! சுடிதார் சௌகர்யமான உடை என்பதில் சந்தேகமில்லை. 'நைட்டி'– வீட்டில் அது வும் இர... விற்கு நிலைமை மாறி விட்ட...

வருவது இயல்புதான். அளவு மீறாத வண்ணம் பழகலாம். அவசியமில்லாமல் நெருங்கிப் பழகுவது பின்னால் பிரச்னைகளை உருவாக்கலாம். ஒதுங்கி இருப்பது கூட ஒரு வகை தற்காப்புதான்.

பெரியவர்களை மதிப்பதென்பது என்றும் வேண்டும். சமமாக உட்கார்ந்து பேசுவதில் தவறு இல்லை. ஆனால் கால்மேல் கால் போட்டு உட்காருவது, அவர்களின் வார்த்தைகளை அலட்சியம் செய்வது என்பதைத் தவிர்ப்பதே நாம் அவர்களுக்குத் தரும் மரியாதை ஆகும்."

**செல்வி. நிருபமா கண்ணன் (+2 மாணவி)**

"உடைகள் என்பது நமது வசதி, சௌகர்யம் இரண்டுக்காகவும்தான். எத்தனை நாகரிகமாக உடுத்தினாலும் அதில் ஒரு 'டீசென்சி' வேண்டும். மற்றவர்கள் நம்மை மதிக்கும் வகையில் அமைய வேண்டும் உடைகள். அதே சமயம் நம் உடல்வாகிற்கேற்ற வகையில் உடுத்த வேண்டும். வயதைக் கண்டுபிடிக்க முடியாத வகையில் உடற்கட்டை சீராக வைத்திருப்பவர்கள் நாகரிக உடைகளை (வயதை மறந்து!) அணிவதில் தவறே இல்லை.

நாகரிகம் என்ற பெயரில் மற்றவர்களின் மனதைப் புண்படுத்தக்கூடாது என்பது என் எண்ணம். பெரியவர் எதிரில் உட்காரக் கூடாது; அவர்களிடம் சமமாக உட்கார்ந்து பேசக் கூடாது என்று சொல்லிவிட்டு அவர்களைப் பற்றி அவர்களுக்குப் பின்னால் கண்டபடி பேசுவதை விட தாராளமாக அவர்கள் எதிரில் உட்கார்ந்து பேசலாம். நடத்தையிலும், பேச்சிலும் பண்பும்- நயமும் இருந்தால் போதும். வெளித் தோற்றத்திலும் பழகுவதிலும் எதுவும் தவறு இல்லை.




குறிப்பிட்ட அந்தக் கணவர் விரும்பினால் அவருடைய மனைவி தாராளமாக அவர் பெயரைச் சொல்லி ஒருமையிலும் அவரை அழைத்துப் பேசட்டுமே? அதில் என்ன தவறு? அவர் விரும்பாத போதுதான் இதில் பிரச்னையே!

இதுபோல மோட்டர் சைகிளில் உட்கார்ந்து செல்வது யோசிக்க வேண்டிய ஒன்றுதான்! நன்கு தெரிந்தவர்கள், பழக்கமானவர்கள் என்றால் மட்டுமே செல்லலாம். மற்றவர்கள் என்றால் அனாவசியமான ரிஸ்க் ஏன்?"

**திருமதி. லலிதாமுரளி (இயக்குனர்– இண்டல்புக்ஸ்)**

"உடைகளைப் பொறுத்தவரை முதலில் சௌகர்யமானதாக இருக்க வேண்டும். பிரயாணங்கள், குழந்தைகளின் பின்னால் ஓடும் நேரம்- போன்ற சமயங்களுக்கு மிகவும் ஏற்றது சுடிதார், சல்வார் போன்றவையே. வீட்டு வேலைகள் செய்யும் நேரம் நைட்டி, ஹவுஸ் கோட் அணியலாம். ஆனால் எப்போதுமே நவீன உடைகள் என்பதைத் தவிர்க்க வேண்டும். நம் புடைவைக்கு ஈடு இணையாக உலகில் வேறு ஏதும் உடைகள் இல்லை என்பதை அடித்துச் சொல்லலாம். என்னதான் காலம் மாறினாலும் நாகரிகம் வளர்ந்தாலும் திருமணம் போன்ற விசேஷ நாட்களுக்கும் பண்டிகை பருவம் மற்றும் குடும்ப நிகழ்ச்சிகளின் போதும் பட்டுப் புடைவைகளை அணிவதுதானே மனதுக்கு நிறைவைத் தருகிறது? அதற்காக எப்போதுமே பழங்கால முறைப்படி 18 முழத்தைத்தான் உடுத்திக் கொள்வேன் என்று சொல்ல வேண்டாம். எந்த உடை உடுத்தினாலும் அதனால் நாம் பிறரால் மதிக்கப்படும் படி அந்த உடை அமைய வேண்டும். என்பதை நாம் மனத்தில் கொள்ள வேண்டும்.

இந்தக் காலத்தில் எல்லோருமே படித்தவர்கள். உலக ஞானம் உள்ளவர்கள். வீட்டுப் பெரியவர்களிடம் சமமாக உட்கார்ந்து பேசுவதில் தவறு ஏதும் கிடையாது. விவாதம் முற்றி கருத்து வேறுபாடு வராத முறையில் விவாதம் அமைய வேண்டும். பெரியவர்கள் எதிரில் உட்காருவதில் தவறு இல்லை. ஆனால் கால்மேல் கால் போட்டு அமருவது தவறு. அதே போலத்தான் எதிர்த்துப் பேசுவதும். என்னதான் நாகரிக உலகில் வாழ்ந்தாலும் நாம்தான் நம் குழந்தைகளுக்கு ஒரு முன் உதாரணம் என்ற எண்ணம் எப்போதும் நம் மனத்தில் வேண்டும். என் மாமியார் ரொம்பவும் 'மார்டர்ன்' ஆனவர். என்னிடம் மனம் விட்டுப் பேசுவார். நல்ல உலக ஞானம் உள்ள அவர்தான் இருமணத்துக்குப் பின்பும் என்னை சுடிதார் போன்ற

# சரவணா ஸ்டோர்ஸ்

## உயர்தரமான தங்க நகைகள்
## வெள்ளி பாத்திரங்களுக்கு

# செய்கூலி இல்லை

15.03.96
வரை

**பட்டு புடவைகளுக்கு**
**10% தள்ளுபடி**

ஜவுளிகள்,
ரெடிமேட் ஆடைகள்,
பாத்திரங்கள்,
T.V., டேப்ரிக்கார்டர்,
ஃப்ரிட்ஜ்,
வாஷிங் மெஷின்,
ஃபேன், கிரைண்டர்,
மிக்ஸி, சூட்கேஸ்

# சரவணா ஸ்டோர்ஸ்

ரெங்கநாதன் தெரு,
தி. நகர், சென்னை 600 017.

ஞாயிறு விற்பனை உண்டு.

L.R.Swami P/P

உடைகளை அணியச் சொன்னவர்.

கணவர் பெயரைச் சொல்வது– அவரையே ஒருமையில் அழைப்பது என்பது பொதுவாக கணவர் விரும்பினால் மனைவி அப்படியே அழைக்கலாம். ஆனால் என்னைப் பொறுத்தவரை கணவருக்கு மரியாதை கொடுத்துப் பன்மையில் "வாங்க" என அழைப்பதுதான் பிடிக்கிறது. தனியாக இருக்கும் போது எப்படி வேண்டுமானாலும் அழைக்கலாம். ஆனால் மற்றவர்கள் எதிரில் அப்படி அழைப்பது தேவையற்ற பிரச்னைகளை வளர்க்கும். ஆனால் ஒன்று– அந்தக் காலத்தில் தம்பதிகளுக்குள் வயது வித்தியாசம் அதிகம்; இப்போது இது மிகவும் குறைவு. இருவருமே ஒரே 'ஏஜ்க்ருப்பில்' இருப்பதால் நண்பர்கள் போல பழகுகிறார்களோ!

இன்று யாரும் வண்டியில் யார் பின்னாலும் உட்கார்ந்து செல்லுகின்றனர். மிகவும் தெரிந்தவர்கள், உறவினர்கள் உடன் வேலை செய்வோர் இவர்களின் பின்னால் உட்கார்ந்து செல்வதில் தவறு இல்லை. கூடுமானவரை புதியவர்களைத் தவிர்ப்பதுதான் நல்லது. 'ரிஸ்க்' எடுக்கிறேன் என்று பலர் பெருமையுடன் சொல்லலாம். ஆனால் 'ரிஸ்க்' எங்காவது போய் தவறாக முடிந்து விட்டால்...? தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்கள் தவிர இப்படி ஒரு விஷப் பரீட்சை வேண்டாம்."

**திருமதி. மைதிலி துரைஸ்வாமி (டீன்–ஏஜ் பேத்திகளின் பாட்டி)**

"அந்தக் காலத்தில் எங்களுக்குத் தெரிந்த ஒரே உடை புடைவையும்– ரவிக்கையும்தான். ஆனால் இன்று எத்தனையோ விதவிதமான ட்ரெஸ்கள். குழந்தைகள் போட்டுக் கொள்ளும் போது மனசுக்கு ரொம்பவும் பிடிச்சிருக்கு. நாம் போட்டு அனுபவிக்க முடியாத டிரஸ்கள் அவர்களுக்குப் போட்டுப் பார்க்கும் போது ஒரு தனி திருப்திதான். நல்ல டீசென்டானவைகளைத் தான் செலக்ட் பண்ணறாங்க இந்த காலக் குழந்தைகள். பழகறவிதம் பற்றி ரொம்ப நன்றாக தெரிந்து வைத்திருக்கிறார்கள் இப்போ இருக்கற இளம் பெண்கள். அவர்களுக்கே எப்படி பழகணும்–எப்படி எப்போது ஒதுக்கணும்– எவ்வளவு டிஸ்டென்ஸ் தரணும் எல்லாமே தெரியும்.

அந்தக் காலப் பெண்களுக்கு பேச விஷயமில்லாததாலே பெரியவர்கள்கிட்டே பேச மாட்டாங்க. ஆனால் இன்று அப்படியா? நல்ல படிப்பும், உலக ஞானமும், அனுபவமும் இருக்கற அவர்கள் வீட்டுப் பெரியவர்கள் கிட்டே உட்கார்ந்து பேசறதுலே என்னதப்பு? எதிரே உட்காருவதனாலே மரியாதை ஒன்றும் குறையாது.

அந்தக் காலத்துலே பத்து, பதினைந்து வயது வித்தியாசத்துலே கல்யாணம் நடக்கும். அதனாலே கணவர் பெயர் சொல்லக் கூட பயம் இருந்தது. ஆனால் இன்று தம்பதிகளுக்குள் அதிக வயது வித்தியாசம் ஏது? ஒரே 'ஏஜ் க்ருப்பில்' இருப்பவர்கள் பெயர் சொல்வதிலோ, ஒருமையில் பேசுவதிலோ என்ன தவறு? இதைப் பற்றி அடுத்தவர்கள் எதுவும் சொல்லாதவரையில் பிரச்னை எதுவும் வராது.

ஒரே இடத்தில் ஆணும் பெண்ணும் பணி புரிகின்றனர். வேலை நிமித்தம் வெளியே செல்ல வேண்டிய சந்தர்ப்பம். பஸ் வரவில்லை, ஆட்டோ கிடைக்கவில்லை– இப்படி ஏதோ தவிர்க்க முடியாத சூழ்நிலைகளில் பெண்கள் பழகிய ஆண்களின் பின்னால் மோட்டர் சைக்கிள் அல்லது ஸ்கூட்டரில் செல்வதில் தவறு ஏதும் இல்லை. அவர்கள் இருவரையும் தெரிந்தவர்களுக்கு அவர்களைப் பற்றித் தெரியும். தெரியாதவர்களின் 'பேச்சிற்கு' கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. அனாவசியமாக ஏதாவது செய்து எந்த வித ரிஸ்கிலும் மாட்டிக் கொள்ள மாட்டார்கள் இந்தக் கால பெண்கள்.

**- வைதேகி தேசிகன்**

**உங்கள் பழைய வாணலியை (இரும்பு) தூக்கி எறியுங்கள் என்று இனி யாரும் சொல்லக்கூடாது. இரும்பு வாணலியில் 20 நிமிடங்கள் வதக்கப்பட்ட காய்களின் மூலம் ஒரு நாளுக்கு நமக்குத் தேவையான இரும்புச்சத்து முழுவதும் கிடைத்து விடுகிறதாம்; என்று விஞ்ஞானிகளின் தற்போதையை ஆராய்ச்சிகள் கண்டுள்ளன.**

**–ஜானகிரங்கனாதன்**



# நீங்கள் தங்கத்தை அணியும்போது, உங்கள் மேசையும் ஏன் அணியக்கூடாது?











ALPHA GOLD G

கே ஸ் ரோ ல்



24
கேரட்
கோல்டு



ஈகிள் ஃப்ளாஸ்க் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

பல வகைகளில் உபயோகமானது ஈகிள்

DART /EF /3897 /TA

அந்த அடையார் பக்க பட்சணக் கடையில் திருவிழாக் கூட்டம்.

அன்று மாலை கோகுலாஷ்டமி.

மறுநாள் கிருஷ்ண ஜெயந்தி.

அதாவது கிருஷ்ணன் பிறந்த நாள். யசோதையிடம் கைமாறிய நாள். வெல்லச் சீடையும், உப்புச் சீடையும், தேன்குழலும், அதிரசமும் இந்தப் பண்டிகைக்கு யார் முதலில் செய்ய ஆரம்பித்தார்கள் என்பது தெரிய வில்லை. அந்தக் கடையில் பாக்கெட் பாக்கெட்டாய் விற்றுத் தீர்ந்து கொண் டிருந்தது.

ரொம்ப நயமான சரக்கா...? ஆமாம். சுத்தமாகச் செய்யப்பட்டதோ...? ஆமாம். விலை அதிகமாக இருந்தாலும் சுவையில் சிறந்ததோ...? ஆமாம். இன் னும் வேறென்ன விசேஷம்...? வீட்டில் செய்தது போலவே இருக்கும். அப் படியா...? இன்னும் வேறென்ன விசே ஷம்...? வீட்டில் இப்போது பல பேருக்கு இவைகளைச் செய்யத் தெரியாது.

என்ன...?

**அந்தக் காலம் மாறிவிட்டது.**

# பாலகுமாரன்

கைமுறுக்கு, வெல்லச் சீடை ஒரு விசேஷமான கலை. இன்று குடித்தனம் செய்யும் பெண்களுக்கு இது கைவரவில்லை. அப்படியா...! ஏன்? காலகாலமாய் நூறு நூற்றைம்பது வருடங்களாய் வீட்டில் செய்து வந்த எளிய இனிய பல்காரம்... இனிப்புப் பண்டம் இன்று முடியாது போனது ஏன்...?

சமையல் பண்றதே பிரச்னையா இருக்கறச்சே பட்சணம்... அதுவும் எண்ணெய் தெறிக்கிற வெடிக்கிற உப்புச் சீடை, விண்டு போற வெல்லச் சீடை, வட்டமாய் வரவேண்டிய கைமுறுக்கு எப்படி முடியும்...?

அந்த அடையார் பக்கக் கடையில் மத்தியதர வகுப்பினர்கள் இடைவிடாது ஆட்டோவில், ஸ்கூட்டரில் வந்து இறங்கிக் கொண் டிருந்தார்கள். பாலிதீன் பைகளில் வாங்கிப் போட்டுக் கொண்டு போய்க் கொண்டே இருந்தார்கள்.

வெல்லச் சீடை வாங்கியாச்சு. கோகுலாஷ்டமிக்கு நான் ரெடி. முகங்கள் சொல்லின.

"இதுவே நைவேத்யமா...? கடையில் வாங்கி சாமிக்குப் படையலா...?"

"நோ. நெவர். இந்தப் படையல் எங்களுக்கு. சுவாமிக்குக் கடையில் வாங்கிய வெண்ணெய், கடையில் வாங்கிய பால், தயிர், நாகப்பழம், கரும்புத் துண்டு, திராட்சை, ஆரஞ்சு, ஆப்பிள், வாழை இன்ன பிற.

ஆனால் இருபது வருடங்களுக்கு முன்பு அம்மா இவைகளைத் தானே தயாரித்து நாங்கள் எத்தனை கெஞ்சியும் ஒரு துண்டு கூட தராமல் பகல் முழுவதும் சமைய லறையில் வெந்த களைப்போடு முகம் கழுவியும் போகாத எண்ணெய்ப் பிசுக்கோடு பூஜை செய்வாள்.

'கிருஷ்ணார்ப்பணம்... கிருஷ்ணார்ப்பணம்...' சுற்றி நீர் தெளித்துச் சூடம் ஏற்றுவாள்.

ஒருமுறை உருண்டையாகவே வெல்லச் சீடை வரவில்லை. ஒரு முறை உப்புச் சீடை வாரி விடு முழுக்கத் தெறித்துவிட்டது. ஒருமுறை கைமுறுக்கு சவுக்கென்று இருந்தது. இதைச் சொன்னால் அம்மாவுக்கு வருத்தம் வரும்.

ரொம்பப் பிரமாதம் என்று பொய் சொல்வோம். அம்மாவுக்கும் அவைகள் இனிய பொய்கள் என்று தெரியும்.

ஆனால் அடையார் கடை பட்சணத்தில் குறையே இல்லை. (அந்த விலைக்குப் பழுது கொடுத்தால் மகா அநியாயம்) ஆனாலும் உள்ளே நிறையவில்லை.

"ஏன் நைவேத்யம் செய்யக் கூடாது? நான் இதை வாங்கிப் போய் சம்பிரமமா நைவேத்யம் பண்ணி வெல்லச் சீடை நன்னா வந்திருக்கா பாருங்க மாமின்னு பக்கத்து வீட்ல சொல்லிடுவேன்."

"ஏ இனாஸ்.. எப்படி இப்படி நல்லா வருது?" மாமி கேட்பார்.

சிரித்துக் கொண்டு கம்மா இருந்துடுவேன். நான் பொய்யும் சொல்லவில்லை. மெய்யும் சொல்லவில்லை." ஒரு பெண்மணி கண் சிமிட்டி தன் புத்திசாலித்தனம் சொன்னாள்.

"அப்படிப் பேசறதுக்கு முன்னாடி அந்தக் கடை கேரிபேக் எல்லாம் ஒளிச்சு வச்சுடணும். இரண்டு நாள் பொறுத்து மக்கு மாதிரி வேற ஏதாவது பொருளை அந்தக் கடை பேர் போட்ட பையில தந்து.. என்ன.. இந்தப் பை, ஏது வெல்லச் சீடை வாசனை வருதுன்னு மாமி கேட்கும்

# இனி அம்மா அன்னை
# சோற்றிலே
# தேடாதே



சூப், க்ரேவி போன்றவற்றில் போடுவதற்கு க்ரீம் கைவசம் இல்லையா? சிறிது வெண்ணெயில் சிறிது பாலைக் கலந்து நன்கு கலக்கியபின் இதையே க்ரீமுக்குப் பதிலாக உபயோகிக்கலாம். வித்தியாசமே கண்டுபிடிக்க முடியாது!

- உஷா

---

படியா வெச்சு மாட்டிக்கக் கூடாது."

"செய்தா திருத்தமாச் செய்யணும்..." மறுபடி அந்தப் பெண்மணி கண் சிமிட்டுவாள்.

"இந்த மாதிரி ஒரு வருஷம் பிஸிபேளாபாத் பண்ணிப் பேர் வாங்கிண்டிருந்தேன். பெங்களூர் கடைச் சரக்கு அது. ரொம்ப சிம்பிள். உப்புமா பண்ற மாதிரியேதான். உப்புகூடப் போட வேண்டாம். ரெடிமிக்ஸ். செம டேஸ்ட். சீக்கிரம் ரெடியாயிடும். எப்படி இப்படி... எழுதிக் கொடுங்களேன்... பக்குவம் சொல்லுங்கோன்னு பல பேர் கேட்டுட்டா..."

இன்னொரு பெண்மணி நமுட்டுச் சிரிப்பு சிரித்தாள்.

ஏன் இந்த மாற்றம்...? இது சரியா... தவறா...? உயர்வா... தாழ்வா...?

"யாரால முடியறது சொல்லுங்கோ. நான் தவறாம சமைக்கணும். குழம்பு, ரசம், கறி... ரசம், குழம்பு கறி... அலுத்துப் போறது. சமைக்கவா பொறந்தோம்னு தோணுது. நானாவது ஏதோ குழம்பு ரசம் பண்றேன். என் பெண்ணுக்கு இருபத்திரண்டு வயசு. உப்புமா கிண்டத் தெரியாது..."

"சமையல் கூட செய்துடலாம். ஆனால் பண்டிகை... பட்சணம்னா யாரால முடியும். எண்ணெய்ப் புகையும் அடுப்புச் சூடும் இரண்டு மணி நேரம் உட்கார்ந்தா அரைப்படி ஓமப்பொடி, இருபது கடலை உருண்டைதான் செய்ய முடியறது. சில சமயம் பண்டம் நல்லா வர்றதில்லை..."

ஸோ...

எனவே....

ஆகையால்...

வீட்டுப் பலகாரம் மாதிரி நல்லா, உசத்தியா... ருசியா சுத்தமாச் செய்யற இடத்துக்குப் போய் பத்துரூபா கூடப் போனாலும் போவுதுன்னு...

"அதிக செலவு இல்லையா தாயே...?"

"இல்லீங்க ப்ரதர்."

"எப்படி?"

"இருநூறு ரூபா ஆச்சு, கிருஷ்ண ஜெயந்தி பட்சணம்." இந்த அளவு வீட்ல செய்தால் நூறுதான் ஆவும். அது நெசம்தான்.... ஆனா உப்புச் சீடை தெறிச்சு மேலே பட்டுட்டா டாக்டர் செலவும்... எண்ணெய்ப் புகையில மூச்சு முட்டி இரண்டு நாள் நான் படுத்துட்டா ஹாஸ்பிடல் செலவும்...

கூட்டிக் கழிச்சுப் பார்த்தால் பலகாரக் கடைதான் சரி. நல்லது.

அதை விடுங்க தோழரே. டென்ஷன் எவ்வளவு குறையுது தெரியுமா? கிருஷ்ண ஜெயந்தி அன்னிக்குக் காலையிலேயே, 'ஐயோ, இன்னிக்குப் பண்டிகையா'ன்னு எழுந்துக்கணும். மத்தியானம் டீ.வி., டெலிபோன் பேச்சு எதுவும் முடியாது. கட்டிப் போட்ட மாதிரி வீட்டோட இருந்து, ஒருவேளை நல்லா வரலைன்னா வெட்கக்கேடு. வந்துட்டா பதக்கமா...? அதுவும் இல்லை! வெல்லச் சீடை வெல்லச் சீடையா இருக்குன்னு சொல்லலாம். இதுக்கு இத்தனை கஷ்டம் தேவையான்னு படும்."

"நாம செய்த பண்டத்தை எல்லாரும் விரும்பிச் சாப்பிடற போது ஒரு மனசு நிறைவு வரும்னு எங்க அம்மா சொல்வாங்க."

"எனக்கு வேணாம் சாமி. எம் பையன் காலைல எழுந்து என்கிட்ட அல்ஜீப்ரா, ஆர்கானிக் கெமிஸ்ட்ரி கத்துக்கிட்டு என்பது மார்க் வாங்கிட்டு வந்தா அது மகிழ்ச்சி. பெரிய நிறைவு.

இனிமே அம்மான்னா வெறும் பட்சணம் இல்லை. படிப்பு, கெட்டிக்காரத்தனம், பிஹேவியர். நான் சமையலறையிலேயே மாவு பிசைஞ்சுக்கிட்டிருந்தா என் பையன் சிகரெட் கஞ்சான்னு போயிடுவான். காலம் கெட்டுக் கிடக்கு. பையன் கூட நிறைய பேசணும். பொண்ணுகூட வெளியே சுத்தணும்.

பையன் படிப்பு முடிஞ்சதும் ஒரு பி.ஸி. வாங்கிடுவோம். அப்ப வீட்டுக் கணக்கு எழுத சௌகர்யமா... அது உபயோகப்படுத்த இப்பவே ரெடியாகறேன். மத்தியானம் டீ.வி. பார்த்து ஷேர் ரேட் குறிச்சு வைக்கறேன். ரொம்பத் தெரியாது. ஆனாலும் ஏதோ தெரியும். அவர் பேசற போது பசங்க விவாதம் பண்றபோது எதுக்கு நான் பேசாத இருக்கறது? சமையல் மட்டும் போதும்னு ஏன் அடங்கிக் கிடக்கிறது? அதான் பண்டிகை பலகாரம் செய்யறதே இல்லை. கடைலதான்."

"இந்த மேடம் சொல்ற சமாதானத்தைவிட குப்பரா நான் என் அனுபவத்திலேர்ந்து ஒரு




125TH YEAR OF PIONEERING AND DEDICATED SERVICE

# தி எக்மோர் பெனிபிட் சொசைட்டி லிமிடெட்

ஸ்தாபிதம் : 1870

13, பிளவர்ஸ் சாலை, சென்னை - 84

போன்: 6413341, 6413342

கிளை அலுவலகம் : 56, தெற்கு உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை - 17. போன் : 4346068

## 125ம் ஆண்டின் சிறப்புத் திட்டம்

1870ம் ஆண்டு நிறுவப்பட்டு மக்கள் சேவையே குறிக்கோளாகக் கொண்டு வைப்பு நிதிகளை தொன்று தொட்டு ஏற்று அதற்கான வட்டியுடன் உரிய காலத்திலோ அல்லது உறுப்பினர்களின் வேண்டுகோளுக்கு ஏற்பவோ விரைவுடனும், பாதுகாப்புடனும் திரும்பிக் கொடுக்கும் நம்பிக்கையினைப் பெற்ற எங்களது நிறுவனத்தில் நீங்கள் வைப்பு நிதிகளை வைத்திருப்பதே உங்களுக்கு ஒரு பெருமை.

20.11.95ல் அமுலுக்கு வந்துள்ள கீழ்காணும் புதிய வைப்புத் திட்டத்தில் உங்கள் முதலீட்டை செய்து மேன்மேலும் பயன் அடையுங்கள்.

| | |
|---|---|
| வைப்பு நிதிக்கான காலம் | - 4 ஆண்டுகள் |
| வட்டி விகிதம் | - 20% (ஆண்டுக்கு) |
| வட்டி வழங்கப்படுவது | - மாதம்தோறும் |
| குறைந்தபட்ச வைப்புத் தொகை | - ரூ.10,000 |

(புதிய டெபாசிட்டுகளுக்கும் மற்றும் டெபாசிட் புதுப்பித்தலுக்கும் மட்டும்)

N.P.V. ராமசாமி உடையார்
தலைவர்

பரிமாற்றங்கள் பங்குதாரர்களுக்கு மட்டும்.

மேட்டர் சொல்லட்டா."

"சொல்லுங்க ஆத்தா."

"யாரு தின்னாங்க இந்த வெல்லச் சீடை, அதிரசம், மிக்ஸர், சீடை இதெல்லாம்? எங்க வீட்ல போணியாவாது. அதனால இது அரை கிலோ வாங்கி நான் என் தங்கச்சி குடும்பம் ஷேர் பண்ணிக்குவோம்."

"ஏன் அப்படி?"

"நம்ம பசங்க நான் தவறாத ஐஸ்க்ரீம் சாப்பிடறாங்க. விருந்துன்னா அதையே கூட சாப்பிடறாங்க. எங்க வீட்ல பண்டிகைன்னு... ப்ளீஸ் வெளியே சொல்லாதீங்க... ப்ளம் கேக்கு அரை கிலோ, ஐஸ்க்ரீம் ஒரு கிலோ... சில சமயம் நாலஞ்சு விதமா வாங்கி ஃப்ரீஸர்ல வைச்சு சாப்பிடுவோம். அந்த பாம்பேகாரன் கம்பெனி ஒரு ஜட்டம் பண்றான் பாருங்க... அத்தனையும் வெண்ணெய் கம் சர்க்கரை... நம்ம பசங்க தடிமாடு மாதிரி வளர அதுவே காரணம். தோளுக்கு மிஞ்சினா தோழன். இவன் எப்பவோ மிஞ்சிட்டான். என் பொண்ணை தங்கச்சியான்னு கேட்கிறாங்க. நான் அழகா இருக்கக் காரணமும் ஐஸ்க்ரீம் தான்."

"பின்னால வயசு காலத்துல..."

"ஐய... அந்த எண்ணெய் பண்டத்துக்கு இந்தப் பால் பண்டம் எத்தனையோ மேல். தினம் ஹெல்த் கிளப் போறேன். ஏரோபிக்ஸ் செய்றேன். சாயந்திரம் வியர்க்க விறுவிறுக்க அவரோட வாக் போறேன். வெல்லச்சீடை நம்ம பசங்களுக்கு நல்லவேளையா பிடிக்கலை. மோந்து பார்த்துட்டுத் தூக்கிப் போடறா. எத்தனை விதமா சாக்லேட் என்னென்னவோ தின்பண்டம்... எதுக்கு வெல்லச்சீடை... உப்புச் சீடைல்லாம்...?"

"இவங்க சொல்றதைப் பார்த்தா எனக்கு இன்னொன்னு தோணுதுங்க..."

"என்னம்மா..."

"இனிமே இதுமாதிரி சாம்பார், ரசம், கூட்டு, பொரியல் எல்லாமும் கொஞ்சம் கொஞ்சமா போயிடும். எல்லாம் டின்ல செய்து கடைக்கு வந்துரும். வாங்கி உடைச்சு ஊத்தி சூடு பண்ணிச் சாப்பிடற மாதிரி ஆயிடும். சமையல் நேரம் அஞ்சு நிமிஷமாக் குறைஞ்சுடும்."

"அப்ப நைவேத்யம்... கடவுளுக்குப் படையல்...?"

"இருக்காது. அல்லது வேற மாதிரி இருக்கும்."

"பெண்கள் தன் அன்பைக் குழைத்துச் செய்த உணவைப் பரிமாறும்போது..."

"அதுக்கு வேற ஆளைப் பாரு."

"அன்பு கிடையாதா?"

"இருக்கு. அதை சோத்துல தேடாதே. அம்மா பசங்களுக்குச் சொல்லிக் கொடுக்க ஆயிரம் விஷயம் இருக்கு."

இதோ... இருபது வருடங்கள் முன்பு என் அம்மா பண்டிகை என்றால் பதறிப் பதறி பட்சணம் செய்வாள். தவிப்பாள், புலம்புவாள். அயர்ச்சியாவாள். இனி அது இல்லை.

"எப்படிடா இருக்கு தேன்குழல்?"

"சூப்பர்மா."

"நெஜம்மாவா?"

"சத்தியமா."

"சக... பொய் சத்தியமெல்லாம் பண்ணாதே. சுமாராத்தான் இருக்கு. எப்படி இருந்தால் என்ன...? நல்லதோ கெட்டதோ எல்லாம் கிருஷ்ணார்ப்பணம்... கிருஷ்ணார்ப்பணம்... கிருஷ்ணார்ப்பணம். பூஜை முடிச்சு அக்கடான்னு படுத்துக்கணும். என்னால முடியவே இல்லை."

எனக்கு மனசு வலிக்கும். தூங்கும் அம்மாவையே பார்த்துக் கொண்டிருக்கத் தோன்றும். என் வீட்டில் பண்டிகைக்கு அலட்டிக் கொள்வதில்லை. அம்மாவை உற்றுக் கவனித்து நான் மாறிவிட்டேன். நிறைய... என் வீட்டுப் பெண்களை அடுப்படியில் பட்சணம் செய்ய வேக வைப்பதில்லை. நல்ல கடையில் வாங்கி வருகிறார்கள்.

"கடைல வாங்கறதா...? என் கையால செய்தாதான் மாமி எனக்குத் திருப்தி" என்று இன்னும் சிலர் இருப்பார்கள்.

ஆனால் சமுதாயம் மாறி வருகிறது.
மகளிரின் பொறுப்பு மாறி வருகிறது.
பழக்கங்கள் மாறி வருகின்றன.
மரபுகள் வழித்தடம் தாண்டுகின்றன.
இன்னும் மாறும். வேகமாய் சகலமும் மாறும்.

இது நல்லதோ கெட்டதோ தெரியவில்லை.

கிருஷ்ணார்ப்பணம்... கிருஷ்ணார்ப்பணம்... கிருஷ்ணார்ப்பணம்!

---

புதிய காலண்டர்கள் வரும் சமயமிது. சுவாமி படம் உள்ள பழைய காலண்டர்களையும் அழகிய இயற்கைக் காட்சி உள்ள பழைய காலண்டர்களையும் பத்திரப்படுத்தி நேரம் உள்ளபோது ஃப்ரேம் போடலாம். பரிசாக மற்றவர்களுக்குத் தரலாம்.

- ஆர். சுந்தரி



# சிறு நீரகத்தில் கற்களா?

# தேவையில்லை அறுவை சிகிச்சை



★ மிக நவீனமான அதிர்வலை (LITHOTRIPSY) இதற்கு பதில் அளிக்கிறது.

★ மயக்க மருந்தின்றி எளிய முறையில் குழந்தைகள் முதல் முதியவர்கள் வரை அனைவருக்கும் மிகபாதுகாப்பான முறை.

★ நீரிழிவு (DIABETES), இரத்த அழுத்தம் உள்ளவர்கள் (BLOOD PRESSURE) இருதயநோய் (HEART PROBLEMS) உள்ளவர்களுக்கும் இது ஒரு வரப்பிரசாதமான முறை.

★ 1500க்கும் மேற்பட்ட நோயாளிகள் வெற்றிகரமாக சிகிச்சை பெற்றுள்ளார்கள்.

★ அன்றாட வேலை பாதிக்கப் படமாட்டாது.

★ மிகக் குறைந்த செலவில் (ரூ.9,000/-க்குள்).

★ சிறந்த சிறுநீரக வல்லுநர்களின் உதவியுடன் சிறுநீரக கற்கள் நீக்கப்படுகிறது.!

சிறு நீரகத்திலும் சிறு நீர்த்தாரை மற்றும் சிறுநீர் பையிலும் காணப்படும் கற்களை அதிர்வு அலைகள் மூலம் குணப்படுத்தும் முறை புதுமையானது. இம்முறையில் உடலில் எந்த விதமான கீறலோ, துளைகளோ இல்லாமல் கற்களை துகள்களாக்கி விடலாம். சிறு துகள்கள் தானாகவே சிறுநீரில் வெளிவரும் இந்த சிகிச்சை முறைக்கு, பெரும்பாலும் சில மணி நேரங்களே தங்க வேண்டியிருக்கும். சிறுநீர்த்துறை வல்லுநர் களாலே நடத்தப்படும் இம்மையத்தில் அதிர் வலைகளால் தகர்க்க முடியாத கற்களுக்கு வேற்றுமுறை சிகிச்சை செய்யவும் உரிய ஆலோசனை அளிக்கப்படுகிறது. அதிர்வு அலை சிகிச்சையின் செலவு அதிகமாக இருக்குமோ என அஞ்சத் தேவையில்லை. மத்திய தர தனியார் மருத்துவமனைகளில் வேற்றுமுறை கல் சிகிச்சைக்கு ஆகும் செலவை விட இது குறைவாகவே இருக்கும்.

**Directors :**

**Dr. C. Chinnaswami,** M.S., M.Ch., F.R.C.S.
(Vijaya Hospital, Vadapalani, Madras - 600 026.)

**Dr. R. Jayachandran,** M.Ch., F.R.C.S. (Eng)
Guest Hospital, (Near Ega Theatre)
782, P.H. Road, Madras - 600 010.

**Dr. D. Thanikachalam,** M.S., M.Ch., F.I.C.S.
Amar Hospital 154, P.H. Road,
(Opp. Sangam Theatre) Madras - 600 010.

**Dr. V. Shankaran,** M.S., M.Ch., F.I.C.S.,
24/25, Madley Road, (Opp. T.Nagar Bus Stand)
Madras - 600 017.

**Dr. R. Sarvothaman,** M.S., M.Ch., F.I.C.A.,
Venkateswara Hospital, Salem.

For Further details contact



**Tamil Nadu Urological Research Centre**

No.50, "D" Block, 3rd Street,
Annanagar East,
Madras - 600 102. Phone: 619769, 613736
Fax: 044-613929

# புடைவைகளுக்கு ஏற்ற ரவிக்கைகள் - 2

"எல்லா ரகப் புடைவைகளோடும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது பிளெயின் புடைவைகள் ஆர்ப்பாட்டமோ அமர்க்களமோ இல்லாமல் மிக சாந்தமான அழகை வெளிப்படுத்தக் கூடியன. பொதுவாக எல்லா உருவ அமைப்பு கொண்டவர்களுக்கும் பிளெயின் புடைவைகள் தனி அழகை ஏற்படுத்தும். இதில் நாம் கவனிக்க வேண்டியதெல்லாம் நம் உடல் நிறத்தைத் தான். நம்முடைய சருமத்தின் நிறத்திற்கேற்ப புடைவையைத் தேர்ந்தெடுக்கலாம். ப்ளெயின் புடைவைகளுக்குப் போடும் ரவிக்கைகளைப் பொறுத்து புடைவைகள் அழகாக மாறிவிடும்!" என்கிறார் வள்ளுவர் கோட்டம் ஹைரோட் சுதந்திர தினப்பூங்கா பஸ் ஸ்டாப் அருகிலுள்ள ஆத்ரேயா கார்மெண்ட்ஸ் உரிமையாளர் வசந்தா ராஜ கோபாலன். இந்த இதழில் ப்ளெயின் புடைவைகளுக்கு ஏற்ற ரவிக்கைகளைப் பற்றிக் கூறுகிறார் இவர்.




## இதுதாம்மா புதுசு!

தற்போது பிளெயின் புடைவைகளை அதிகம் பேர் விரும்பி உடுத்துவதாகத் தெரியவில்லையே?

"அப்படியெல்லாம் இல்லை. பிளெயின் புடைவைகள் உடுத்தும் வழக்கம் இப்போது அதிகமாகியிருக்கிறது என்றே சொல்லலாம். மற்ற எல்லாப் புடைவைகளையும்விட பிளெயின் புடைவைகளின் சிறப்பு



என்னவென்றால் அதனோடு சேர்த்து அணியும் ரவிக்கைகள் விசேஷமாகக் கண்ணில் பட்டுக் கொண்டேயிருக்கும்.''

ப்ளெயின் என்றால் நைலான் புடைவைகளை மட்டும்தான் சொல்கிறீர்களா?

ஏன், பட்டுப் புடைவைகளில் கூட ப்ளெயின் உண்டே. மைசூர் சில்க், காட்டன், ஆர்கண்டி, கார்டன் பிளெயின், ஜக்கார்ட் பிளெயின், மார்பிள் ஷிஃபான், மெட்டல் ஷிஃபான், அக்கோபா போன்ற எல்லா வகைகளையும் பிளெயின் புடைவை வரிசையில் சேர்த்துக் கொள்ளலாமே?''

இவற்றிற்கு என்ன விதமான ரவிக்கைகள் பளிச் சென்று இருக்கும்?''

''பொதுவாக இரண்டாகப் பிரிக்கலாம். அதாவது டார்க் கலர்ஸ் மற்றும் லைட் கலர்ஸ். லைட் கலர் புடைவைகளுக்கு பிரிண்டெட், மிரர் வொர்க், எம்பிராய்டரி, ஆத்ரேயா டீலக்ஸ், ஆத்ரேயா ஸ்பெஷல் போன்றவையும், டார்க் கலர் ப்ளெயின் புடைவைகளுக்கு அந்தக் காலத்து படங்களில் எம். எஸ். சுப்புலக்ஷ்மி போட்டிருப்பாரே டபுள் பஃப் ரவிக்கைகள் அந்த மாதிரி பாந்தினி, செல்ஃப் டிசைன் ரவிக்கைகள் லாங் ஸ்லீவ், பின் கழுத்துப் பகுதியில் ரோப் வைத்தும் அணியலாம்.''

பாந்தினி பிரிண்டுகள் பிளெயின் புடைவைகளுக்குப் பொருந்துமா?

''ஓ... ஜோராக இருக்கும். பெரும்பாலும் பெண்கள் தங்கள் புடைவை கலெக்ஷனில் குறைந்தது ஒரு நான்கு புடைவைகளாவது ப்ளெயினில் வைத்திருப்பார்கள். அவற்றில் ஒரு புடைவைக்கு பாந்தினி ரவிக்கை அணியட்டுமே. நன்றாக எடுபடும். பாந்தினி ப்ளவுஸில் படிந்திருக்கும் பிரிண்ட் அழகானது. இவற்றை லாங் ஸ்லீவாக இல்லாமல் முழங்கைக்கும் மேலே இருக்கும்படி அணிந்து கொள்ளலாம்...''

ப்ளெயின் புடைவைகளுக்கு அதே நிற ப்ளெயின் ரவிக்கைகள் எடுபடுமா?

''புடைவையின் நிறம் போலவே ரவிக்கை போட்டுக் கொண்டால் யூனிஃபார்ம் போல இருக்கும் அல்லவா? புடைவையை அழகாக வெளிப்படுத்த வேண்டுமென்றால் நிச்சயமாகப் புடைவையிலிருந்து மாறுபடும் நிறங்களில் அதாவது டோட்டல் காண்ட்ராஸ்ட் நிற ரவிக்கைகள் அல்லது புடைவையைவிட டார்க் நிற ரவிக்கைகள் அணியலாம். ப்ளெயின் ரவிக்கைகளில் கழுத்து கைப்பகுதிகளில் புடைவையில் உள்ள கலரைப் போல் பைப்பிங் வைத்துப் போட்டுக் கொண்டால் மிக அழகாக இருக்கும். புடைவையின் நிறத்தைப் போலவே ரவிக்கை



• ஆத்ரேயா வேல்ஸ்

அணிவதென்றால் ஆத்ரேயா வேவ்ஸ், ஆத்ரேயா ப்ரீமியர், ஆத்ரேயா கிளாசிக் போன்ற டிசைன் ப்ளவுஸ்களையும் அணியலாம்'' என்கிறார் வசந்தா ராஜகோபாலன்.

மாநிறம் கொண்டவர்களுக்கு ப்ளெயின் நிறப் புடைவைகள் எடுபடுமா?

''நிஜமாகச் சொல்ல வேண்டுமென்றால் மாநிறம் கொண்டவர்களுக்கு மிக அழகாக இருக்கும். இவர்கள் லைட் ஷேட் புடைவைகளைத் தேர்ந்தெடுக்கலாம். பேபி பிங்க், ஸ்கை ப்ளு, லைட் லேவண்டர், லைட் கிரீன், லைட் எல்லோ, சந்தன நிறம் இப்படி உடுத்தலாம். லைட் கலர் புடைவைகளுக்கு டார்க் எம்பிராய்டரி அதிகமாக மிரர் ஒர்க் செய்யப்பட்ட ப்ளவுஸ்களும் பொருந்தும்.''

ப்ளெயின் புடைவைகளுக்கு வேறு என்ன விதமான ரவிக்கைகளைப் பரிந்துரை செய்வீர்கள்?

''சின்னச் சின்ன பிரிண்டுகள் ஹேண்ட் எம்பிராய்டரி ரவிக்கைகள் நன்றாக இருக்கும். உயரமானவர் ஆழக் கழுத்து வைத்தும் அணியலாம். லாங் ஸ்லீவ் இவர்களுக்கு எடுபடும். மற்றொன்று 'ஸ்வீட் ஹார்ட்' ப்ளவுஸ்களில் நாங்கள் ஆத்ரேயா ஸ்பெஷலாக கைப்பகுதிகளில் மட்டும் பின் டெக் மாடலை வைத்தும் தயாரிக்கிறோம்.''

ஆத்ரேயா ஃபேக்டரிக்குள் சென்று பார்வையிட்டபோது விறுவிறுப்பாக ஹேண்ட் எம்பிராய்டரி ப்ளவுஸ்களைத் தயாரித்துக் கொண்டிருந்தார்கள்.

அந்தப் பெண்களில் ஒருவர் சொல்கிறார்: ''மிரர் ஒர்க், எம்பிராய்டரி ஒர்க் ரவிக்கைகளைப் பெரும்பாலும் பிளெயின் புடைவைகளுக்காகத்தான் தயாரிக்கிறோம். மிஷின் எம்பிராய்டரியைவிட ஹேண்ட் எம்பிராய்டரியின் வேலைப்பாட்டில் முழுமையைத் துல்லியமாக உணர முடியும். ஒருவர் ஒரு நாளைக்கு நிதானமாக மூன்று ரவிக்கைகளைத் தயாரித்து விடுகிறோம்.''

பிளெயின் புடைவைகளுக்கு இதுவரை சொல்லாத மிக்ஸட் கலரில் டிசைன் ரவிக்கைகளைத் தயாரிக்கும் எண்ணம் உண்டா?

''ஓ... தயாரித்து வருகிறோமே. உதாரணத்துக்கு ஒரு லைட் ரோஸ் புடைவையை எடுத்துக் கொள்ளலாம். இதற்கு என்ன ப்ளவுஸ் அணியலாம்? கறுப்பும் போடலாம். டார்க் பிங்க் கலர் ப்ளவுஸும் போடலாம். நாங்கள் அந்த இரண்டு நிறங்களையும் இணைத்து முதுகுப் பகுதியில் பாதியாகப் பிரித்து மேல் பகுதியில் பிங்க் நிறமும், கீழ்ப்பகுதியில் கறுப்பு நிறமும் உள்ள துணிக்கு பின்டெக் மாடலும் உண்டு. வேறு எங்கும் கிடைக்காத புதிய பாணியில் இதனை வடிவமைத்து இருக்கிறோம். இந்த 'ஆத்ரேயா ஸ்பெஷல்', 'ஆத்ரேயா டீலக்ஸ்' இரண்டும் லேட்டஸ்ட் டிசைன்கள்'' என்று வெற்றிப் பெருமிதத்துடன் முடிக்கிறார் வசந்தா ராஜகோபாலன்.

— மலர்விழி

**சகோதரிகளே! உங்கள் வீட்டு வேலைக்காரியிடம் அன்பும் அக்கறையும் கொண்டு இருங்கள். ஆனால் அலட்சியமாய் இருக்காதீர்கள். ஏதாவது ஒரு பொருள் உண்மையாகவோ, பொய்யாகவோ காணோம் என்றால் அதற்கு முதல் குற்றவாளி நீங்கள்தான். அடுத்ததுதான் அவள்.**

**- மஞ்சுளா கிருஷ்ணன்**



# ஒரு பெண்ணுக்கு முதல் வாழ்த்து இன்னொரு பெண்ணிடமிருந்து வர வேண்டும்!

இன்று பெண்கள் பிரகாசிக்காத தொழிலே இல்லை. அவற்றில் ஒன்று டி.வி. சானல்களிலே பளிச்சிடும் பெண்கள். திரைப்பட நட்சத்திரங்களுக்கு இணையாக இவர்களுக்குப் புகழ் கிடைத்து வருகிறது. ஆனால் திரைப்பட நடிகைகளின் பிரச்னைகள் இவர்களுக்கு உண்டா? இவற்றை வென்று எப்படிச் சமாளிக்கிறார்கள்? கேட்கலாமே இவர்களை -

• உமா

**இ. மாலா : (சன் டீ.வி. புகழ் மாலா)**

"நான் எம்.காம் பட்டதாரி. நான் பிறந்து வளர்ந்து படித்தது எல்லாம் சென்னையில்தான். சிறு வயதிலேயே தந்தையை இழந்து விட்டேன். ஒரே ஒரு தம்பி மட்டும் உண்டு. முதலில் தூர்தர்ஷனில் 'நலவாழ்வில்' மருத்துவர்களை பேட்டி காணும் வாய்ப்பு பெற்றேன். பின்பு வானொலியில் ஃப்ரி லான்ஸ் அறிவிப்பாளரானதுடன், இளையபாரதம் பகுதியில் நிகழ்ச்சி தயாரிப்பிலும் பங்கு கொண்டேன். 65 நிகழ்ச்சிகள் தயாரித்தேன். அழகுக் கலையிலும் 6 மாதங்கள் (சென்னை தரமணியில்) பயிற்சி பெற்றேன். நான் 'அழகு நிலையம்' துவங்க விரும்பினேன். அதற்கு என் அம்மா சம்மதம் தரவில்லை. இடையில் சன் டீ.வியில் 'ஸ்கிரிப்ட் ரைட்டராக' பணிபுரியத் துவங்கினேன். பின்பு அறிவிப்பாளராகவும், நிகழ்ச்சித் தயாரிப்பாளராகவும் பணிபுரியத் துவங்கினேன். பலதரப்பட்ட நிகழ்ச்சிகள். முதலில் 'சமையல் கலை'. இதில் கன்னிமரா ஹோட்டலின் தலைமை சமையல்காரர் தந்த குறிப்புகளின்படி உணவு தயாரிப்புகள் பெண்களை மிகவும் கவர்ந்த நிகழ்ச்சி. பெண்களிடையே எனக்குப் பெரும் வரவேற்பு. பின்பு 'மலரும் மொட்டும்' குழந்தைகள் பங்கு பெற்ற நிகழ்ச்சி. தாயாரைத் தவிர அடுத்தவர்களிடம் நெருங்க மறுக்கும் 5 வயதுக்குட்பட்ட குழந்தைகள் இடம் பெற்ற நிகழ்ச்சி என்னிடம் ஒட்டிக் கொண்ட பல குழந்தைகள். குழந்தைகளின் மனதிலும் என் பெயர் இடம் பெறக் காரணமானது இந்த நிகழ்ச்சி. வறுமைக் கோட்டிற்குக் கீழே உள்ள பெண்களின் பிரச்னையை 'மகளிர் மன்றம்' நிகழ்ச்சி வெளியில் கொண்டு வரும் முயற்சியானது. நரிக்குறவர்கள், பிச்சைக்காரர்கள் இப்படி பல தரப்பட்டவர்களையும் சந்தித்தேன். நரிக்குறவர்களிடையே பேசும் போது அவர்களின் சில பழக்கங்கள் தெரியவர வியந்தேன். மாப்பிள்ளை வீட்டார் நிறைய பணம் செலவு செய்ய வேண்டும் என்பதால் ஆண் சிசுக்களைக் கொன்று விடுவார்களாம்; அதே போல முதல் மனைவியை விவாகரத்து செய்தவர்களுக்கு அடுத்து ஒரு பெண் தரவும் மாட்டார்களாம். இது போன்ற

• இ. மாலா

நிகழ்ச்சிகள் மேலும் என்னைப் பிரபலமாக்கின. சூற்றுவாளிகளாக நம் சமூகத்தில் உலவியவர்கள் பற்றிய நிகழ்ச்சி அலசல். இது என் பாப்புலாரிட்டியை மேலும் கூட்டியது. என் தலையைக் கண்டவுடனேயே 'என்னைப் பற்றியும் அலசலில் சேர்த்துக் கொள்ளுங்கள்' - என கேட்டவர்கள் பலர்.

நீங்கள் சொல்வது போல மற்ற பெண்களைப் போல தெருவில் நடந்து செல்வது, கடைகளில் நின்று பொருட்களை வாங்குவது - பஸ்களில் பிரயாணம் என்பவை கொஞ்சம் கஷ்டமாகத்தான் உள்ளது. என் போன்ற டி.வி. பிரபலங்களைக் கண்டதும் மக்கள் அதிகம் தொல்லை எதுவும் தருவது கிடையாது. ஓரிரண்டு வார்த்தைகள் பேசிவிட்டுச் சென்று விடுவர்.

சில சமயம் சௌகார் ஜானகி போன்ற





பிரபல நட்சத்திரங்களே கூட கடைகளில் நின்று காய்கறிகளும் பழங்களும் வாங்குவதுண்டே! கிடைக்கும் புகழும், பாப்புலாரிட்டியும் சினிமா நட்சத்திரங்களுக்கு தான். ஆனால் அந்த அளவு வருமானம்....? நிச்சயம் கிடையாது. அதனால்தான் ஆறு மாதங்களுக்கு முன்னால் சொந்தமாக 'மாஸ்டர் சேனல்' என்னும் எடிடிங் ஸ்டுடியோவைத் தொடங்கினேன். என் பத்து வருட அனுபவம் கை கொடுக்கிறது. தற்போது 'சங்கே முழங்கு' - என்னும் பல இல்லத்தரசிகள் பங்கு பெறும் நிகழ்ச்சியைத் தயாரித்து வருகிறேன். இவை வெளியூர்களில் நடை பெறும் மேடை நிகழ்ச்சிகளே. இதற்காக இந்தியா முழுவதும் பயணம் செய்ய இருக்கிறேன்.

என்னதான் ஆண்களும், பெண்களும் கலந்து பணிபுரிய வேண்டிய தொழில் என்றாலும் தங்களின் எல்லை புரிந்து பணி செய்பவர்களுக்குத் தொல்லை ஏதும் வராது. இத்துறையில் 75 சதவிகிதம் ஆண்கள்தான். தினமும் அவர்கள் 15 மணி நேரம் பணிபுரிந்தால் பெண்கள் 20 மணி நேரம் உழைக்க வேண்டும்" என்றார் இ. மாலா.

**செல்வி உமா மகேஸ்வரி : (தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்குபவர் - விளம்பரப்படங்களில் நடிப்பவர்)**

"கல்லூரியில் பி.காம் இறுதியாண்டு படிக்கும் போதே மாடலிங் செய்ய வந்தேன். கல்லூரியில் பேச்சு, பாட்டுப் போட்டிகளில் நிறைய கலந்து கொண்டு பல பரிசுகள் வாங்கியிருக்கிறேன். முதலில் சூரத் புடைவைகளுக்கு மாடலிங் செய்தேன். 'நீ ஏன் டி.வியில் நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்கக் கூடாது?' என எங்களின் குடும்ப நண்பர் ஒருவர் கேட்க - செய்யலாமே என்று எனக்கும் தோன்றியது.

சென்னை தொலைக்காட்சியில் "வாருங்கள் வாழ்ந்துவோம்" நிகழ்ச்சியை 'காம்பியர்' - தொடர்ந்து 40 வாரங்கள் செய்தேன். பின்பு ஜெமினியின் திரை விமர்சனம் நிகழ்ச்சியில் பங்கு கொண்டேன். பெப்சி வழங்கும் 'உங்கள் சாய்ஸ்' நிகழ்ச்சியினை சன் டி.வியில் 80 வாரங்களுக்கு மேல் தொடர்ந்து தொகுத்து வழங்கி வருகிறேன். இதற்கு நல்ல ரெஸ்பான்ஸ். தற்போது 'ஜெ ஜெ டி.வியில்' 'சாடிலைட் ஷாப்பிங்' என்னும் நிகழ்ச்சியைத் தொகுத்துத் தருகிறேன். இதற்கும் மக்களின் பெரும் வரவேற்பு உள்ளது

ஒரு சினிமா நட்சத்திரத்திற்கு ஈடான பெயரும் புகழும் என்னைப் போன்றவர்களுக்கு நிச்சயம் இருக்கத்தான் செய்கிறது. நான் விளம்பரப் படங்களிலும் இடம் பெறுவதால் என்னை பார்ப்பவர்கள் உடனே 'டக்' என அடையாளம் கண்டு கொள்வர். 'ஹாய்' சொல்பவர்களுக்கு 'ஹாய்' - 'ஹலோ' சொல்பவர்களுக்கு 'ஹலோ', 'உமா' என என் பெயர் சொல்லி அழைப்பவர்களுக்கு ஒரு புன்சிரிப்புடன் கரம் குவித்தல் - இப்படி நான் செய்து விடுவதால் எனக்கு எந்தப் பிரச்னையும் இல்லை.

இரவு பகல் என இல்லாமல் வேலை பார்க்க வேண்டிய தொழில் தான் இது. ஆனாலும் ஒரு நேரக்கட்டுப்பாட்டை வைத்துக் கொண்டு இருக்கிறேன். இரவு 9 மணிக்கு மேல் நான் கூடுமானவரை படப்பிடிப்புகளைத்

தவிர்த்து விடுவேன். ஆண் பெண் என வித்தியாசம் பாராமல் பழகும் தொழில்தான் இது. ஆனாலும் என்னைப் பொறுத்தவரை நான் யாருடனும் அனாவசியமாக - அதிகமாக பேசமாட்டேன். நிகழ்ச்சிகளுக்காக; கேமரா வின் முன் பேசுவதுதான் அதிகம். என் வேலை முடிந்து விட்டால் மறுபடி என்னை அழைக்கும் வரை ஏதாவது படித்துக் கொண்டு ஓரிடத்தில் உட்கார்ந்து இருப்பேன். தேவையில்லாத அனாவசியமான பேச்சுக்கள்தான் வீண் வம்புகளை அழைக்கும் என்பதை நன்றாகவே அறிந்தவள் நான். வருமானத்தைப் பொருத்தவரை ஒரு சினிமா நட்சத்திரம் அளவு இல்லையென்றாலும் - குறை சொல்லும்படி இல்லை; நல்ல வருமானம்தான்."

**திருமதி ஸ்ரீமதி : (ஜெஜெ டீவியில் நிகழ்ச்சித் தயாரிப்பாளர் - தொலைகாட்சிக்கு டாகுமென்ட்ரி படங்கள் எடுப்பவர்.)**

"நான் என் 'கேரியரை' துவக்கியது ஒரு காவல் துறை அதிகாரியாகத்தான். வடாற்காடு மாவட்டத்தின் முதல் பெண் போலீஸ் அதிகாரி நான். என்னைப் பற்றி அப்போது செய்தித்தாள்களில் நிறைய எழுதினர். பின்பு இந்தத் துறைக்கு வந்தேன். சமூகத்திற்கு விழிப்பு உணர்ச்சி தரக்கூடிய டாகுமென்ட்டரி படங்கள் பலவற்றை டெல்லி தூர்தர்ஷனுக்காக எடுத்துக் கொடுத்திருக்கிறேன். தவிர கம்பெனிகள் பலவற்றுக்கு அவைகளைப் பற்றிய - அவைகளின் செயல்பாடுகள் பற்றிய படங்களை எடுத்துத் தருகிறேன். திரையில் சில நிமிடங்களே ஓடக்கூடிய இந்தப் படங்கள் குறிப்பிட்ட அந்த நிறுவனம் பற்றி விளக்கமாக எடுத்துரைக்க வல்லவை.

'சாட்டிலைட் ஷாப்பிங்' என்னும் நிகழ்ச்சி ஒன்றை ஜெஜெ டீவியில் தயாரித்துக் கொடுத்து வருகிறேன். சந்தைக்குப் புதியதாக வரும் பொருட்கள் பற்றிய விவரங்கள் இந்த நிகழ்ச்சியில் இடம் பெறும். ஜெஜெ டீவியில் நான் அளித்த 'அசத்தல் ஆண்கள்' - மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றது. என்னை மக்களிடையே நன்கு அறிமுகப்படுத்தியது. விரைவில் திரு. தேவாரம் அவர்கள் தரும் 'உண்மைக் கதை'களை வைத்து 'போலீஸ் டைரி' என்னும் டீ.வி. தொடர் ஒன்றையும் தயாரிக்க இருக்கிறேன். தமிழ்ப் புத்தாண்டிலிருந்து இது ஒளிபரப்பாகும்.

உண்மையான திறமையும் அயராத முயற்சியும் இருந்தால் எந்தத் துறையிலும் தனித்தன்மையுடன் 'பளிச்'சிட முடியும் என்பது என் நம்பிக்கை - உண்மையும் அதுதானே?!

வெளியில் வரும் போது மக்கள் என் போன்றவர்களை அடையாளம் தெரிந்து கொண்டு விசாரிப்பது மிகவும் மகிழ்ச்சி தரும் விஷயம்தான். அதுவும் நான் தயாரித்த நிகழ்ச்சிகள் பற்றியும் கூட சிலர் நின்று விமர்சனம் செய்வது உண்டு. நானும் நின்று கேட்டுவிட்டுச் செல்வேன். அவர்கள் தரும் வரவேற்பினால் தானே என் போன்றவர்கள் நல்ல பல வெற்றிகளைப் பெற முடியும்? அவர்களின் விமர்சனங்கள் உண்மையிலேயே டானிக்தான்!

இரவு பகல் எனப் பாராமல் பணிபுரிய வேண்டியதுதான். ஆனாலும் உடன் பணிபுரிபவர்கள் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு ஒரு குடும்பம் போல பழகுவதால் எந்த பிரச்னையும் எழுவாய்ப்பில்லை. செய்கின்ற வேலையை நன்கு முடித்துத் தர வேண்டுமே - மற்றவர்கள் பாராட்டுதலைப் பெறும்படி அது அமைய வேண்டுமே என்ற எண்ணம் மட்டுமே மனத்தில் ஓங்கியிருந்தால் மற்ற எண்ணங்களுக்கோ, பிரச்னைகளுக்கோ ஏது இடம்? வருமானம் சில சமயம் மிகவும் நன்றாக இருக்கும். சில சமயம் ஏதோ இருக்கும். வருமானம் அதிகம் பெறும் நேரம் 'ஆத்ம திருப்தி' சற்று குறையலாம். மனத் திருப்தியுடன் முடிக்கும் வேலைகளுக்கு வருமானம் குறையும். இதிலும் சினிமா போலத்தான். 'ஆர்ட் பிலிம்' சில உண்டு.

பெண்கள் எந்தத் துறையிலுமே திறமையும் முயற்சியும் உழைப்பும் கொண்டு சிறந்து விளங்குவார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் பெண்களுக்குப் பெண்களேதான் எதிரி என்பதில் சந்தேகமில்லை. முன்னேறி வரும் பெண்களைப் பார்த்து - வீண் வம்பு பேசி விஷம் தோய்ந்த அம்பான வார்த்தைகளை வீசி அவர்களை நோக வைத்து.... இந்த நிலை மாறுவது நம் கையில்தான் இருக்கிறது. பெண்ணுக்குப் பெண்ணே எதிரி என்ற நிலை மாறி வெற்றி பெறும் பெண்ணுக்கு முதல் வாழ்த்து இன்னொரு பெண்ணிடமிருந்துதான் என்ற நிலை வர வேண்டும்" என்கிறார் ஸ்ரீமதி.

**— வைதேசி தேசிகன்**

**திருமணமாகி வந்த தங்கை தம்பதியினருக்கு கண்கவர் வண்ணத்தில் உயர்ரக பெட்ஷீட் இரண்டு வாங்கித் தந்தோம். அவர்களுக்கு ஏக மகிழ்ச்சி. இது போல் வித்தியாசமாய் ஷால், டீ கிட், டவல் செட் என்று ப்ரசண்ட் செய்யலாமே!**

**— கி. மஞ்சுளா**

# கண்ணாடி கூரை கீழ் வாழும் இன்றைய பெண்கள்!

சமீப காலமாக உலக நாடுகளின் கவனம் முழுவதும் நம் இந்தியா பக்கம் திரும்பியுள்ளது என்பது பெருமைக்குரிய விஷயம். இதைக் கவனித்த அமெரிக்க நாட்டைச் சேர்ந்த 'வால்ஸ்ட் ஸ்ட்ரீட் ஜர்னல்' நிறுவனத்தின் டெலிவிஷன் அமைப்பு இன்றைய இந்தியாவின் மாறிவரும் சமூக அமைப்பைப் பற்றி ஒரு நிகழ்ச்சியே எடுக்கச் செய்து இருக்கிறது!

நடன அரங்கில் புகழ்பெற்ற அனிதா ரத்னம்தான் இந்நிகழ்ச்சியைத் தயாரித்து அளித்திருக்கிறார்.

"அந்த அனுபவம் எனக்கு மறக்க முடியாதது. நான் பல்லாண்டுகள் வெளிநாட்டில் இருந்துவிட்டு இந்தியா திரும்பி இந்நிகழ்ச்சியைத் தயாரித்த போது இந்த மாற்றங்களைக் கண்டு பிரமித்துத்தான் போனேன்" என்கிறார் அனிதா.

"புருஷ்" போன்ற அருமையான நாட்டிய நாடகங்களைத் தயாரித்த அனிதாவே மாறிவரும் பெண்களுக்கு ஓர் உதாரணம் எனலாம். நம் மண்ணின் கலாசாரத்தை நாட்டியங்களின் மூலம் பரப்புவதையே தன் இலட்சியமாகக் கொண்டிருக்கும் அனிதா, மரபு மாறாத அனிதா இன்றைய நிலைக்கு ஏற்ப நாட்டிய களன்களை, நடைமுறையினை மாற்றியிருக்கிறார். விறுவிறுப்பு வேகம், மேலை நாட்டினரின் தியேட்டர் கலாசாரம் இவற்றினை நம் பழம் பெரும் பரதநாட்டியத்தில் இணைத்து வெற்றிகண்டு இருக்கிறார். 'பாம்பே டெலிவிஷன் நெட்வொர்க்' எனும் அமெரிக்க நிறுவனத்தில் டெலி கம்யூனிகேஷன் துறையில் பயின்று பயிற்சி பெற்றுப் பல நவீன சிந்தனைகளைத் தன்னுள் கொண்டிருக்கிறார்.

"அதனால்தான் நம் இந்தியாவின் சிறப்பை அமெரிக்க டெலிவிஷனில் எடுத்துக்காட்ட எனக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தபோது மிகவும்



மகிழ்ச்சியாக இதை ஒத்துக் கொண்டேன்.

அதனால் இன்றைய இந்திய மக்களை எனக்குப் புரிந்து கொள்ளும் சந்தர்ப்பமும் கிடைத்தது. நம்முடைய நாட்டில் நடுத்தர வர்க்கம் இப்போது வேகமாக வளர்ந்து வருகிறது. இதனால் உலகச்





சந்தையில் பல பெரும் கம்பெனிகள் இந்தியாவிற்குள் வந்து தங்கள் வியா பாரத்தைப் பெருக் கப் போட்டி போடு கின்றன. ஏனெனில் மக்கள் தொகை மிகுந்த நாடல்லவா நம்முடையது!

அதேசமயம் நம்முடைய உற்பத்தித் திறனும் யாருக் கும் குறைந்ததல்ல. ஹரியானா வில் உலகத்தின் மிகப் பெரிய குடை தயாரிக்கும் தொழிற்சாலைக்குப் போயிருந்தேன். உலகத் தரம் வாய்ந்த பொருட்களைத் தயாரிக்கும் நிறுவனங் கள் பெங்களூர் போன்ற ஊர்களில் எல்லாம் உள்ளன. அங்கெல்லாம் சென்று இந்நிகழ்ச்சிக்காகப் பேட்டிகள் எடுத்தேன். எத்தனையோ நடுத்தர குடும்பத்து அங்கத் தினர்களுடன் என்னுடைய உரையாடல் மறக்க முடியாதது..."



அதே சமயம் விஞ் ஞான ரீதி யாக ஒரு நிகழ்ச்சி தயா ரிப்பது என் றால் அதை எப்படித் திட்ட மிட வேண் டும், எப்படித் தயாரிக்க வேண்டும் என்பதை யெல்லாம் வெளி நாட்டினர் திட்டமிட்டு நடத்து வதைப் பார்த்துப் பிரமித்தேன். இந்தியா உள் ளிட்ட நான்கு வளரும் நாடுகளில் இந்த நிகழ்ச்சி தயாரிக்கப்பட்டது. எந்த நாடு, எந்த ஊருக்குப் போக வேண்டும், எங்கெங்கு என்ன சிறப்புக் கள் இருக் கின்றன என மிகத் துல்லிய மாகத் திட்டமிடுகிறார்கள். இவற்றை யெல்லாம் பார்த்து நாம் நிறையக் கற்றுக் கொள்ள வேண்டும்..." என்று உற்சாகமாகச் சொல்லிக் கொண்டு போன அனிதாவை இடைமறித்து...

"பெண்கள்... பெண்கள் பற்றி இந்தத் தயாரிப்பிலே என்ன சொல்லி யிருக்கிறீர்கள்? அவர்களைப் பற்றிப் புரிந்து கொண்டதென்ன...?" என்றதும் சிரித்தார். "அதை விடமாட்டீங் களே...?" என்றவர் உடனே முகம் மாறினார்.

"இந்தியா மட்டுமல்ல; உலகம் முழுக்க பெண்கள் மிகவும் இக்கட் டான காலகட்டத்தில்தான் வாழ்ந்து கொண்டு இருக்கிறார்கள். முன்பெல் லாம் அவர்களுக்கு ஒன்றுமே தெரி யாது. அறியாமை நிறைந்த குழந்தை யாக அடுப்படியோடு வாழ்ந்துவிட்டார் கள். இப்போது வெளியே வந்திருக்கும் பெண்கள் எல்லாவற்றையும் உணர ஆரம்பித்து இருக்கிறார்கள்.



லாம் இல்லையா...?'' என மீண்டும் உற்சாகமான அனிதா, ''நிச்சயம் அந்தக் கண்ணாடிக் கூரையின் வழி திறக்கும். அப்போது நம் பெண்கள் வானம் வரை உயர்வார்கள்...'' என்றவர்,

''இன்றைய கலாசாரம் வேகமாக மாறி வருவதைப் பற்றிக் கூட அநேக பயங்கள் உண்டு. ஆனால் நம் இளம்பெண்கள் மிகவும் புத்திசாலிகள். நிச்சயமாக நம் கலாசார வேரை யாரும் அகற்ற முடியாது. 'சமர்த்தாய் இரு!' என அக்காலத்துத் தாய்மார்கள் சொல்வார்கள். சமர்த்தாய் என்றால் அடக்கமாக, எதிலும் விட்டுக் கொடுத்தே, பெண் என்றாலே கொஞ் சம் அசமஞ்சமாக இருக்க வேண்டும் என்ற அர்த்தம். ஆனால் இன்றைய பெண்கள் அப்படி இல்லை.

பெரியவர்கள் முன் அடக்கமாகப் போலி வேஷம் போட்டு, புடைவையைப் போர்த்திக் கொண்டு இருந்து விட்டு பின்னால் போய் புறம் பேசுவது அல்ல அடக்கம். அவர்களுடன் நன்றாகப் பேசலாம், விவாதிக்கலாம். ஆனால் அதில் வெறுப்பு அகங்காரம் இருக்கக் கூடாது. இவற்றையெல்லாம் நவீன பெண்கள் நன்கு உணர்ந்து இருக்கிறார்கள். போலி வேஷம், இரட்டை வேஷம் போடுவதை அவர்கள் விரும்புவதில்லை. அதேசமயம் நம் கலாசாரம் பண்பாட்டோடு நவீன நாகரீகத்தையும் மிக அழகாக 'மிக்ஸ்' செய்கிறார்கள். இவர்களின் இந்த வளர்ச்சி எனக்கு மிகவும் பிடிச்சிருக்கு. உண்மை கவே சமர்த்து என்றால் இதுதான் சமர்த்து!'' என்று முடிக்கிறார் திருமதி அனிதா ரத்னம்.

வெளிநாட்டில் மிக அழகாக இதற்கு ஒரு வார்த்தை உண்டு. 'க்லாஸ் ஸீலிங்' (glass ceiling)கின் கீழ் இன்று பெண்கள் வாழ்கிறார்கள்.

கண்ணாடி வழியாக வானம் வரை எல்லாம் கண்ணுக்குத் தெரிகிறது. ஓரளவு அந்தக் கண்ணாடிக் கூரை வரை வேண்டுமானால் அவர்கள் போகலாம். அதற்குமேல் போக முடியாது. அதை உடைத்துக் கொண்டு வெளியேறுபவர்களுக்கு உடம்பெல்லாம் கீறல்கள், காயங்கள் கண்டிப்பாக இருக்கும்.

அந்தத் தைரியம் இல்லாதவர்கள் கண்ணால் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு அதைப் பற்றிய கற்பனைகளுடனும், கனவுகளுடனும், அடைய முடியாத துக்கத்துடனும்தான் வாழ வேண்டும். இப்படி அனைத்தையும் தெரிந்து கொண்டு அந்த உயரத்திற்குப் போக முடியாத சோகம்தான் இன்றைய பெண்ணின் வாழ்க்கை...''

அனிதா இதைச் சொன்ன போது நெஞ்சம் கனத்துப் போனது. எத்தனை நிதரிசனமான உண்மை. இப்படி இன்றைக்குக் கைகூடாத கனவுகளோடு வாழ்ந்து கொண்டிருக்கும் பெண்கள் தான் எத்தனை பேர்! ஒரு நிமிடம் எல்லோருமே மௌனமாகிவிட்டோம்!

''ஓ... ஸாரி, இந்த நிலை நிச்சயமாக மாறும். அதற்கு உதாரணம் நாமெல்

**- பவித்ரா**

# கருப்பை நோய்க்கு / கட்டிக்கு சித்த மருத்துவமே !

**INDIAN EXPRESS** MADRAS
SUNDAY JANUARY 7 1996

## AN ALTERNATIVE MEDICINE

Siddha has opened a door of hope for women ailing from many gynaecological disorders, hormonal imbalance starting from the age of puberty and a variety of other disorders which do not respond to medicines and result in the urgent need for hysterectomy. These serious disorders have been proved to respond well to Siddha medicines.

Medicinal preparations combining natural herbs like aloes, Daemea eclipta and colocinth are successfully used for correcting irregularities in the menstrual flow.

Pomegranate leaves and bark of mango, Asoka and jambolunum trees and juices of white pumpkin and plantain flower have wonderful potential in this regard.

Since uterine fibroids can be treated well with Siddha medicines, there is no need for hysterectomy.

A combination of some 23 herbs with similar curative potentials has been very effective in gradually resolving the fibroidal growth in the uterus from the seeding level up to full-size mass.

The treatment period varies from 2-6 months depending on the resistance and assimilating power of the patient on the one hand, and the site and size of the mass, on the other. The fibroid may be growing secretly without pain or bleeding.

This Siddha combination therapy is effective for fibrous adenoma of the breast, cystic growth in ovaries and a few other lesions also. For malignant tumour, an admixture of a few more herbs and this is found effective i several cases.

The surprising fact about the process of resolution of fibroids is that there is not much bleeding because the styptic principle in the preparation arrests the blood flow, while the active principles erode and resolve the mass which is discharged by the cervix in bits which the patient can notice.

– **Dr. S. Jayaraman**
Navodhaya Siddha Medical
Research Centre.

✆ Clinic : 4940662
Res : 8551258

Advt.



• லக்ஷ்மி

இன்றைய இளைஞர்கள் தினமும் டி.வி. முன் செலவிடும் நேரம் தோராயமாக ஒன்றிலிருந்து மூன்று மணி நேரம் என்று கணக்கெடுக்கப்பட்டிருக்கிறது. இது விடுமுறை நாட்களில் இன்னும் இரட்டிப்பாக அதிகரிக்கக்கூடும். இளசுகளின் உணர்வினை கண்டு விட்டு, தூண்டி விடக்கூடிய வகையில் கதைகளும், பாடல்களும், பாஷன் ஷோக்களும் டி.வியில் வருவது சர்வசாதாரணமாகி விட்டது. ஒரு காலத்தில் 'என்னைத் தொந்தரவு பண்ணாமல் டி.வி. பார்த்துக் கொண்டிரு' என்று விஸ்ராந்தியாக இருந்த பெற்றோர்கள் இன்றைக்கு இவ்வகை நிகழ்ச்சிகளைக் கண்டு 'என்ன செய்வது' என்று கையைப் பிசைந்து கொண்டு நிற்கிறார்கள்.

80களில் வெறும் பொழுதுபோக்கிற்காக ஒலியும் ஒளியும் மட்டும் தான் என்று நைஸாக வீட்டினுள்ளே நுழைந்த இந்த டி.வி. இன்று பல சானல்களை குட்டிகளாக ஈன்று இளைய சமுதாயத்தின் தலையெழுத்தையே நிர்ணயிக்கக்கூடிய அளவிற்கு வல்லமை படைத்ததாய்



• சுநந்தா

# ட்ரெண்டை மாற்றும்



அசிங்கமாய் உள்ளது. எய்ட்ஸ் நோய்க்கு மருத்துவராய் பணிபுரியும் ஒருவர் கூறிய உண்மைச் சம்பவத்தை இங்கே கூற விரும்பு கின்றேன்.

ஸ்டார் டீ.வி.யில் படுக்கை அறை காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த தன் இளம் பையனை தாய் கண்டிக்க, அப்போது மௌன மாய் இருந்து விட்ட அவன் மறுநாள் தன் நண்பனிடம் அக் காட்சியில் பிறகென்ன ஆயிற்று என்று கேட்க அக் கும்பலில் இருந்த ஒரு வஸ்தாது பையன், அவன் ஆவலை மேலும் தூண்டி விட்டு ஒரு சிகப்பு விளக்குப் பகுதிக்கு அழைத்துப் போய் இன்றைக்கு அந்த இளஞ்சிறுவன் HIV+வால் தாக்கப்பட்டிருக் கிறான். எல்லா வீட்டிலும் இதுபோல் ஆவ தில்லை என்று இருந்தாலும் அதிநாகரீக ட்ரண்ட் இளையதலைமுறையினரை பெரிதும் மாற்றியுள்ளதை மறுப்பதற்கில்லை.

டீ.வி.யில் வரும் கதைகளில் இளம் காதலர் கள் தங்கள் தெய்வீகக் காதலுக்காக கையை அறுத்துக் கொள்வதும் காதல் கடித சாம்பலை முழுங்குவதுமாய் இருப்பதைப் போன்ற காட்சி களைக் காண்பித்து இளசுகளை உச்சுகொட்ட வைக்கிறார்களே தவிர, அவர்களே தங்கள் வாழ்வில் கலப்பு திருமணத்தாலோ, மாறுபட்ட திருமணத்தாலோ படும் அவஸ்தைகளை அந்த உண்மைக் கதைகளைக் காட்டுவதில்லையே.

பாரம்பரிய நிகழ்ச்சிகளில் கூட மாடர்ன் டிரஸ்ஸில் பவனி வருவதை பெருமையாக நினைக்கும் இளவட்டங்கள் இன்று அதிகம் 16 வயதுக்குரிய உணர்வுகள் எக்காலத்திலும் ஒன்றுதானே. தேவ் ஆனந்தை தெய்வமாய் காதலனாய் கனவு கண்டவர்கள் எங்களில் பல ருண்டு. ஆனால் அது எங்கள் வாழ்க்கையைப் பாதிக்கவில்லை. ஆனால் இன்று அந்த மென் மையான காதல் உணர்வுகள் எல்லாம் போய், உடல் அசைவுகள்தான் கண்ணில் நிற்கின் றன."

**கம்ப்யூட்டரில் எம்.சி.ஏ. பட்டம் பெற்று தனியார் நிறுவனத்தில் பகுதி நேர ஊழிய ராக பணிபுரியும் பரதக் கலைஞர் குமாரி சுநந்தா விஜயராகவன் :**

"மாறிவரும் ட்ரண்ட் என்று எடுத்துக் கொண்டால் விளைவு வரவேற்கக்கூடியதாகத் தான் உள்ளது. இந்த டீ.வி. யுகத்தில் ஜெனரேஷன்களுக்கிடையே உள்ள அபிப்ராய பேதங்கள் குறைந்து வருகின்றன என்பதை உணர முடிகிறது. தன் முன்னேற்றத்தைக் கருதி வரும் கதைகள், நாடகங்கள் மூலமாக பெண் இனம் இன்றைக்கு ஒரு வேகமான வளர்ச் சியைக் கண்டு வருகிறது. பல சங்கடங்களை, தடங்கல்களை மீறி முன்னேறிய பெண்களின் நேரிடை பேட்டி, விவாதங்கள் இளையதலை

## பரங்கிக்காய் துவையல்

***தேவையான பொருட்கள் :***

பரங்கிக்காய் - 200 கிராம்,
புளி - எலுமிச்சை அளவு,
மிளகாய் வற்றல் - 5
உளுத்தம் பருப்பு - 2 டீஸ்பூன்,
கடுகு, பெருங்காயம் - தாளிக்க தேவையான அளவு
உப்பு - தேவையான அளவு,
எண்ணெய் - 3 டேபிள் ஸ்பூன்.



***செய்முறை :***

ஒரு ஸ்பூன் எண்ணெயில் கடுகு தாளித்து, உளுத்தம் பருப்பு, மிளகாய் வற்றல், பெருங்காயம் சிவக்க வறுத்து எடுத்து வைத்துக் கொள்ளவும். பாக்கி எண்ணெயில், தோல் சீவி சிறு துண்டுகள் ஆக்கிய பரங்கிக்காயை நன்கு வதக்கவும். பின் அதை மிக்ஸியில்/அம்மியில் நன்கு அரைத்துக் கொள்ளவும். மசிந்தவுடன் பாக்கி வறுத்தவற்றை போட்டு அரைத்து எடுத்துக் கொள்ளவும். உளுத்தம் பருப்பு மட்டும் சற்று ஒன்று இரண்டாக அரைத்தால் நன்றாக இருக்கும். சாதத்துடன் மிகச் சுவையாக இருக்கும். சொன்னால்தான் பரங்கிக்காய் துவையல் என தெரியும்!

- ஜெயந்தி ஸ்ரீநிவாசன்

உப்புமா கொழுக்கட்டை செய்யும் போது ஒவ்வொரு கொழுக்கட்டைக் குள்ளும் ஒரு அச்சு வெல்லத் துண்டை சொருகி வைத்து ஆவியில் வேகவிடுங்கள். குழந்தைகள் சாப்பிட இனிப்பாக இருப்பதால் கூட இரண்டு கேட்டு வாங்கிச் சாப்பிடுவார்கள்.

— உமா

முறையினருக்கு ஒரு 'டானிக்காய்' விளங்குவதை மறுப்பதற்கில்லை. தங்கள் எதிர்காலத்தைப் பற்றிய ஒரு கணிப்பினை லட்சியத்தை சில நேர்காணல் நிகழ்ச்சிகள் இளவயதுப் பெண்களிடையே ஏற்படுத்தி வருகின்றன. விளம்பர மாடலிங் செய்வதை கௌரவக் குறைவாக நினைத்த காலம் போய் அதையே (திருமணத்திற்குப் பிறகும் கூட) ஒரு கண்ணிய வேலையாகக் கருதும் ஒரு மாறுபட்ட 'ட்ரெண்ட்' டீ.வி. மூலமாகத்தான் நமக்குக் கிடைத்தது.

எத்துறையை எடுத்துக் கொண்டாலும் கால்குலேட்டிவ்வாக, சுயநலமுள்ளவர்களாக இருக்க வேண்டியுள்ளது என்பது காலத்தின் கட்டாயமாக உள்ளது. ஸ்டார் டீ.வி.களால் சில குடும்பங்களில் நாகரீகம் என்கிற பெயரில் சில அபத்தங்கள் அவ்வப்போது தலைகாட்டினாலும், குடும்ப பந்தம் உறவு முறைகள் இங்கே இன்னும் வேரூன்றி கோலோச்சிக் கொண்டிருப்பதால் நாங்கள் இந்திய இளைய தலைமுறையினர்கள் என்று கூறிக் கொள்வதை பெருமையாகக் கருதலாம்.

"டீ.வி. ட்ரெண்ட் மாற்றமெல்லாம் கொஞ்ச நாள் ஈர்ப்புத்தான். அதிக சானல்கள் ஈர்ப்பைத் தர ஆரம்பிக்கின்றன. ஆனால் இன்றைய சூழலில் டைம் மானேஜ்மெண்ட் மிகவும் அவசியம். டீ.வி.யில் வரப் போகும் நல்ல நிகழ்ச்சிகளை முன்கூட்டியே குறித்துக் கொண்டு குடும்பத்தோடு பார்த்தால் பல நன்மைகள் விளைய வழியுண்டே! டீ.வி. தொடர்களை விடாமல் பார்க்க வேண்டும் என்கிற அவர்களுடைய ஆர்வம் அத்தகைய நாடகங்களில் வரும் உறவு முறை விசேஷங்களுக்குச் செல்வதை வேஸ்ட் என்று கூட நினைக்க வைக்கிறது."

*10-வது வகுப்பு படிக்கும் கவிதா படிப்பிலும் படுசுட்டி. பிலிப்ஸ் டாப் 10 விடாமல் பார்ப்பதிலும் படு கெட்டி.*

இது தவிர டென்னிஸ், லாண்டா பார் பரா, ஜி.ஈ.சி.யில் அந்தாதி என்று அவருக்கு விருப்பமான நிகழ்ச்சிகள் என்று அடுக்கிக் கொண்டே போகிறார். இத்தனை நிகழ்ச்சிகளையும் பார்த்து விட்டு படிப்பதற்கும் நேரத்தை ஒதுக்குகிறாரே எப்படி!

"பார்க்கும் நிகழ்ச்சிகள் அத்தனையையும் ஒரு impersonal ஆகத்தான் எடுத்துக் கொள்வேன். அதே நேரத்தில் பாடத்தைத் தவிர்த்து நிறைய பார்க்கிறோம் என்ற உணர்வு வரும் போது டீ.வி.யை டக்கென்று அணைத்து விட்டு படிக்க ஆரம்பித்து விடுவேன். என்னைப் போன்ற வயதுடையவர்களிடையே டீ.வி.யினால் உடைகள், பெற்றோர்கள், உறவு முறைகளில் ஆரோக்கியமான மாற்றம்தான் ஏற்பட்டுள்ளது. காஷுவலாக, கிளாமராக உடை அணிவதில் தவறு இருப்பதாக நான் கருதவில்லை. குடும்பத்தோடு சில படங்களைப் பார்க்கும் போது, சில வேண்டாத காட்சிகள், பாடல்கள் வரத்தான் செய்கின்றன. அதை கேஷுவலாக எடுத்துக் கொண்டு அடுத்த நிமிடமே மறந்து விடுகிறோம். மாறாக பாடல்களில் உள்ள கிராமிய, கர்நாடக, புதுமையான மணதிற்கிசைந்த ட்யூனை, பிரமாண்டமான காட்சி அமைப்புக்களை ரசிக்கிறோம். இதை ஏன் நீங்கள் தவறாகக் கருதுகிறீர்கள். டீ.வி.யில் மகாபாரதத்தை விடாது நீங்கள் பார்க்கும் போது எங்கள் வயதிற்குரிய விஷயங்களை நாங்கள் பார்ப்பதில் தவறு ஏதுமில்லை. போட்டிக் களமாக உள்ள இவ்வுலகில் அவசியமில்லை என்று எதையும் ஒதுக்கி விட முடியாது. மாறி வரும் ட்ரெண்டில் நாங்கள் நல்லதை மட்டும்தான் கிரகித்துக் கொள்வோம் என்பதிலே நம்பிக்கை வையுங்கள்."

**தொகுப்பு : கீதா மோஹன்**



சில ஆண்டுகளுக்கு முன், விம்பிள்டன் வீராங்கனைகள் சிலர் வழக்கத்துக்கு மாறாக மிகக் குட்டையான உடைகளை அணிந்து ஆடினார்கள். விளையாட்டுத் துறையில் இப்படிப்பட்ட உடைகள் சர்வ சகஜம். ஆனால் சமீபத்தில் நடைபெற்ற தெற்காசிய விளையாட்டுகளில் வேறு மாதிரிக் காட்சி ஒன்றைக் காண நேரிட்டது. பாகிஸ்தானைச் சேர்ந்த வீராங்கனை ஒருவர் சுரிதார் அணிந்து கொண்டு டென்னிஸ் விளையாடினார். இது பலருக்கும் வித்தியாசமான காட்சியாகத் தென்பட்டது. தங்களது மத நெறிகள் பெண்கள் பொது இடங்களில் அரை குறை உடை அணிவதை அனுமதிப்பதில்லை என்ற விளக்கம் தரப்பட்டது பாகிஸ்தான் அணியினரிடமிருந்து. நீச்சலில் சுரிதார் போன்ற உடையோடு பங்கு

# தடை தாண்டி விளையாடுகிறார்கள்



• ஜெயலட்சுமி

கொள்வது நடைமுறை சாத்தியமும் இல்லை, விதியின் படி அப்படி அனுமதியும் இல்லை என்பதால் பாகிஸ்தான் மற்றும் பங்களாதேஷ் ஆகிய நாடுகளைச் சேர்ந்த பெண்கள் - நீச்சல் பிரிவில் பங்கெடுத்துக் கொள்வதில்லை.

ஆனால் விளையாட்டு என்றில்லை, பொதுவாகவும் ஆண்களுக்கு (முக்கியமாக விளையாட்டுகளில்) எந்த வித உடைக் கட்டுப்பாடுகளும் விதித்ததாகத் தெரியவில்லை. அதே போல் விளையாட்டு வீரர்களின் உடைகளைப் பற்றி யாரும் கிண்டலடித்ததாகவும் நினைவில்லை.

இங்கிலாந்தையும், பாகிஸ்தானையும் விடுங்கள். நம் நாட்டிலேயே கூட விளையாட்டுத் துறையில் ஒரு பெண் முன்னேறுவதென்றால் சுலபமல்ல. திறமை, சக போட்டியாளர்களை விட சிறந்து ஆடுதல் இவை மட்டும் போதாது. வேறு பல தடைக் கற்களையும் தாண்டித்தான் வர வேண்டியிருக்கிறது.



• மீனாட்சி

சமீபத்தில் ஷைனி வில்சனை சந்தித்த போது, "இந்தத் துறையில் நிச்சயம் சாதனை படைக்க முடியும். பெண்களுக்கு ஸ்டாமினா குறைவு என்பார்கள். ஆனால் பல விஷயங்களை ஜீரணித்துக் கொண்டு, சிலவற்றை எதிர்த்து நின்று பல தடைக்கற்களைத் தாண்டித்தான் பெண்களால் இங்கு முன்னணிக்கு வர முடிகிறது. ஆக எங்களுக்குத்தான் ஸ்டாமினா அதிகம் என்றாலும் விடாமுயற்சி நிச்சயம் வெற்றியைத் தரும்" என்றார் அந்த வீராங்கனை. தன்னம்பிக்கையையும், விடா முயற்சியையும் பற்றி கருத்துச் சொல்ல நிச்சயம் தகுதி



உண்டு அவருக்கு. குழந்தை பிறப்புக்குப் பிறகும் ஆசிய ரெகார்டை (இரு நிமிடங்களுக்கும் கீழ்) 800 மீட்டர் ஓட்டப் பந்தயத்தில் உண்டாக்க முடிந்திருக்கிறதென்றால் சும்மாவா?

விளையாட்டுத் துறையில் பெண்கள் சாதனைக்கு முன் சந்தித்த சோதனைகளை அறிய வேறு சில பெண்களை சந்தித்துப் பேசினோம்.

லிஸி, மீனாட்சி ஆகிய கிரிக்கெட் வீராங்கனைகளை இணைப்பது தென்னக ரயில்வே. அங்குதான் இருவரும் வேலை செய்கிறார்கள். சமீபத்தில் நியூஸிலாந்துக்கெதிராக நடைபெற்ற பெண்கள் கிரிக்கெட் போட்டியில் இந்தியாவின் சார்பில் கலந்து கொண்டவர் லிஸி. தென்னக ரயில்வேயில் பெண்கள் கிரிக்கெட் குழுவுக்குத் தற்போது தலைமையேற்றிருப்பவர் மீனாட்சி.

• ஹரிப்ரியா






• லிஸி

**லிஸி :** "வீட்டிலே கிரிக்கெட் விளையாட ஊக்கம் கொடுத்தாங்க. முக்கியமாக என் அண்ணன் சஜீத். தாம்பரத்திலுள்ள கிறிஸ்ட் கிங் பள்ளியிலே படிக்கும் போதே பையன்களோட கிரிக்கெட் ஆடுவேன். எங்க ஏரியாவிலே நான் ரொம்ப ஃபேமஸ் சின்ன வயசிலிருந்தே."

**மீனாட்சி :** "என் விஷயமே வேறே. ரொம்ப ஆசாரமான குடும்பப் பின்னணியிலே வந்ததாலே வீட்டிலே தயங்கினாங்க. திருத்தணி கலைக் கல்லூரியிலே படிக்கும் போதுதான் கிரிக்கெட் ஆர்வம் அதிகரிச்சது. முதலிலே டேபிள் டென்னிஸ்தான் ஆடிக்கிட்டிருந்தேன். இப்போ அதிலே சாம்பியனா இருக்கிற மைதிலியின் அப்பா எங்க குடும்ப நண்பர். அந்த விளையாட்டைத் தொடரச் சொன்னார். ஆனா கிரிக்கெட் ஆசை அதிகமாயிடுச்சு."

**லிஸி :** "ஸ்போர்ட்ஸினாலே எங்க கண்ணோட்டம் ரொம்ப விசாலமாகியிருக்கு. எதையுமே ஆக்கபூர்வமாக எடுத்துக்க முடியுது. குறுகிய வட்டத்திலிருந்து வெளியே வர முடிஞ்சது."

**மீனாட்சி :** "இப்ப நீங்க பேட்டின்னதும் சகஜமா பேச முடியுதுன்னா, இந்த அனாவசியமா வெட்கப்பட்டுக்காத நேர் பார்வையை எனக்குக் கொடுத்திருப்பது ஸ்போர்ட்ஸ்தான்."

**லிஸி :** "எங்களுக்கான கிரிக்கெட் போட்டிகளுக்கு முன் ப்ராக்டிஸ் செய்யத் தனியிடம் கிடையாது. சேப்பாக்க மைதானம் கிடைக்காது. அடையாரிலுள்ள சிஷ்யா பள்ளி மைதானத்தில் ப்ராக்டிஸ் செய்வோம்.

**மீனாட்சி :** "நல்ல வேளையாக பெரம்பூரிலுள்ள ரயில்வே மைதானம் ஒண்ணு இப்போ தினம் ப்ராக்டிஸ் செய்யக் கிடைச்சிருக்கு. ஆண்கள் கிரிக்கெட்டில் பணம் கொட்டுகிறது. அதேசமயம் எங்களுக்கு அளிக்கப்படும் தொகை மிகச் சொற்பம். விளையாட்டு காலகட்டத்தில் சத்துணவு சாப்பிடுவதற்கே அது சரியாகப் போய்விடும்."

**லிஸி :** "பெண்கள் கிரிக்கெட் தரம் குறைந்தது என்றால் ஒத்துக் கொள்ள மாட்டேன். ஸ்டாமினா எங்களுக்குக் குறைவாக இருக்கலாம். ஆனால் வேகம், சக்தி, ஸ்டைல் ஆகியவற்றில் நாங்கள் சளைத்தவர்கள் அல்ல. கிரிக்கெட் விளையாட்டில் எனக்குப் பிடித்தவர்கள் யாரென்று கேட்டால் பந்துவீச்சில் ஸ்ரீகாந்த்தையும், பேட்டிங்கில் சச்சின் டெண்டுல்கரையும்தான் சொல்வேன்."

**மீனாட்சி :** "தொடக்கத்தில் ரவி சாஸ்திரியின் பந்து வீச்சு பிடித்திருந்தது. பிறகு கபில்தேவ். ஃபீல்டிங்கைப் பொறுத்தவரை அசாருதீன்."

*(ஏனோ இருவருமே எந்த கிரிக்கெட் வீராங்கனையின் பெயரையும் குறிப்பிடக் காணோம்.)*

**லிஸி :** "கல்யாணம் செய்துக்கச்

சொல்லி வீட்டிலே சொல்லிக் கிட்டிருக்காங்க. ஆனா வரப் போற கணவன் என் கிரிக்கெட் விளையாட்டைத் தொடர அனுமதிக்கணு மேன்னு கவலையாக இருக்கு. நானும் அவரும் யோசித்து இது பற்றி ஒரு முடிவெடுப்போம். இதைப் பற்றி இன்னமும் கூட யோசிக்க வேண்டியிருப்பதால் வரன் பார்ப்பதைக் கொஞ்சம் தள்ளிப் போடச் சொல்லியிருக்கேன்.''

**மீனாட்சி :** ''வீட்டில் நான் ஒரே மகள். இப்போது சகஜமாகக் கள்ளமில்லாமல் மற்றவர்களோடு ஆண்கள் உட்பட - பழகுகிறேன். விளையாட்டுத் துறையில் இது சகஜம். இதை என் வருங்காலக் கணவர் இயல்பாக எடுத்துக் கொள்ளவாரா என்று சந்தேகம் தோன்றத்தான் செய்கிறது. அதே சமயம், வீட்டுப் பொறுப்பு, விளையாட்டு இரண்டையுமே சரிவர சமாளிக்க முடியுமா என்பதையும் யோசிக்க வேண்டியிருக்கிறது. பார்ப்போம்.''

***ஜெயலட்சுமி, ஹரிப்ரியா இருவருமே வாலிபால் வீராங்கனைகள். மாநில அளவில் பங்கேற்றிருக்கிறார்கள். ஹரிப்ரியா எத்திராஜில் எம்.ஏ. படிக்கிறார். ஜெயலட்சுமி வைணவக் கல்லூரியில். இருவரும் சைதாப்பேட்டையிலுள்ள ஜி.கே.என் க்ளப்பில் வாலிபால் பயிற்சி செய்கிறார்கள்.***

**ஹரிப்ரியா :** ''வித்யோதயா பள்ளியில் படிக்கும்போதே தடகளப் போட்டிகளில் ஆர்வம் இருந்தது. உயரமாக இருந்ததால் நீளம் தாண்டும் போட்டிகளில் பரிசுகளை வாங்கினேன். கோச் குருநாதன்தான் வாலிபால் ஆடச் சொல்லி யோசனை கூறினார்.''

**ஜெயலட்சுமி :** ''சீனியர் லெவலில் ஜம்மு காஷ்மீர் அணியோடு ஆடி மூன்றாவது இடத்தைப் பெற முடிந்தது சமீபத்தில். பன்னிரண்டு வருடங்களுக்குப் பிறகு சென்னை பல்கலைக் கழகத்திற்கு இந்த கௌரவம் கிடைத்திருக்கிறது. நானும் வித்யோதயாவில் படித்தவள் தான். விளையாட்டு ஆசிரியை விக்டோரியா சந்திரன்தான் எனக்கு நிறைய ஊக்கம் கொடுத்தார்.

**ஹரிப்ரியா :** ''விளையாட்டுப் போட்டிகளின் போது சிலர் கிண்டல் செய்யத்தான் செய்வார்கள். முக்கயமாக ஆண்கள். செய்யட்டுமேன்னு விட்டுடுவேன். சொல்லப் போனா பெண்கள் வாலிபால் பந்தயங்களுக்கு ஆண்களுடையதை விடக் கூட்டம் அதிகம் இருக்கும்.''

**ஜெயலட்சுமி :** ''சமீபத்திலே காது ஆபரேஷன் செய்துக்கிட்ட காரணத்தால் தலைமுடியை வெட்டிக்க வேண்டி வந்தது. ''பையனை யாருடா இந்த டீமிலே விட்டது?''ன்னு கூட சில பையனுங்க கேலி செய்தாங்க. கிண்டல் தானே அடிச்சுட்டுப் போகட்டுமே. பாவம் அவங்களும் என்ஜாய் செய்யணுமில்லையா! உண்மையிலே என் மனதை வாட்டும் ஒரு விஷயமே வாலிபாலில் - முக்கியமாக பெண்கள் பிரிவில் புகுந்து விளையாடும் பாரபட்சமான நிலை. மாநில, தேசிய அணிகளுக்கானவர்களைத் தேர்ந்தெடுக்கும் போது திறமையை விட சிபாரிசுக்கு அதிக இடம் கொடுக்கிறார்கள். அஃபென்ஸ், டிஃபன்ஸ் இப்படிப் பல கோணங்களில் ஏதாவதென்றால் யாருமே கொஞ்சம் பலவீனமாகத்தான் இருப்பார்கள். அந்தக் காரணத்தைச் சொல்லி திறமையானவர்களைக் கூட தட்டிக் கழிச்சுடறாங்க.''

**ஹரிப்ரியா :** ''வேலைவாய்ப்பு ரொம்பக் கம்மியாக இருக்கிறது. தென்னக ரயில்வேயில் மட்டும்தான் பெண்கள் வாலிபால் குழு இருக்குது. மற்றபடி ஒரே ஆணாதிக்கம்தான்.''

**ஜெயலட்சுமி :** ''முதல் தடைக்கல்லாக பெற்றோர்களைத்தான் சந்திக்க வேண்டியிருந்தது. பழமையானவங்க. எப்பவும் படிப்பு படிப்புன்னுவாங்க. இத்தனைக்கும் நான் படிப்பிலே சோடை போனதில்லே.''

**ஹரிப்ரியா :** ''எங்க வீட்டிலேயும்தான். விளையாட்டிலே அதிகமாக ஈடுபட்டா கெட்ட சகவாசம் உருவாகிடும்னு அனாவசியமா முதல்லே பயந்தாங்க. அவங்க மனசிலே நம்பிக்கை உண்டு பண்ண நாளாச்சு.''

**— ஜி. எஸ். எஸ்.**



ஒரு முறை என் சித்தியுடன் உறவினர் ஒருவர் வீட்டுக்குச் சென்றபோது அவர்களின் நான்கு வயது வாண்டு, ''அம்மா, 'பங்கஜி' வந்திருக்கா'' என்றதும் ஒரே ஷாக். அறுபது வயதைத் தாண்டிய சித்தி முகம் சுளித்தார். குழந்தைகள் எதிரில் நாம் பேசும்போது, பெயரின் கூடவே உறவையும் வைத்துத்தான் பேச வேண்டும். இல்லாவிட்டால் பெயரில் மட்டுமல்ல, நிஜத்திலும் உறவு 'கட்'தான்.

- கி. மஞ்சுளா

# ஜிங்லர்ஸ்.
# உங்கள் அருமைக் குழந்தையின் பட்டு மேனிக்கு இதமான, விசேஷ மெத்தை.



உங்கள் குழந்தைக்கு சிறப்பான கவனம் தேவை. இதை மனதில் கொண்டு, முழு ஈடுபாட்டுடன் தயாரிக்கப்பட்ட ஜிங்லர்ஸ் மெத்தையை உங்கள் குழந்தைக்கு அளிக்கிறோம். மென்மையான ஜிங்லர்ஸ் குழந்தை-மெத்தை பல ஒப்பற்ற சிறப்பம்சங்கள் கொண்டது.



• எளிதில் துவைக்கலாம், விரைவில் உலரும் • சர்வதேச தொழில் நுட்பம் • மென்மையான பாலிஃபைபர் கொண்ட உட்புறம் • 100% பருத்தியினாலான மேல்பாகம் • காற்றுப்புகும் அமைப்பு உள்ளதால் வெப்ப எரிச்சல், தடிப்பு ஏற்பட வாய்ப்பே இல்லை • உட்புறம் ஈரத்தினால் கெட்டியாகாமல் மென்மையாக இருக்கும் • பல அளவுகளில், மனதிற்கினிய வண்ணங்களில் கிடைக்கிறது.



ஜிங்லர்ஸ் — உங்கள் அரவணைப்புக்கு ஈடான அழகிய மெத்தை.




*India's first real washable baby bed*



**Utility Textiles,**
P.B. No. 6858
Madras - 600 040
Phone : 6211974

Insight-UT-1876-R

**DISTRIBUTOR FOR MADURAI, ANNA, TRICHY, THANJAVUR, QUIDE-E-MILET, PUDUKKOTTAI, RAMNAD, V.O.C. & KANYAKUMARI DISTRICTS:** M/S. Better & Co. No.25-A, Arasamaram Pockara St, West Avani Moola Street, Madurai - 625 001. Ph: 520516.

**DISTRIBUTOR FOR PERIYAR, SALEM, COIMBATORE, NILGIRIS DISTRICTS:** M/s Jayaram Agencies, Shri Vilas Building, 1st Floor, Cross cut Road, Coimbatore - 641012, Ph: 4349231..

**ALSO AVAILABLE AT MADRAS :** Children Choice, Luz:London Stores, Mylapore/Purasawalkam/Mount Road, Murugan Dresses, T. Nagar : Naidu Hall, T. Nagar/Anna Nagar/Mylapore: Witco, Anna Nagar/ T. Nagar, Vitan Luz: Lucky Dresses, Tambaram : Garments Centre, Mylapore; Milan, Poonamallee; Mummy Daddy, Kilpauk: Seematti, Padi; Saravana Dresses, Ashok Nagar, Yeses Super Market, Anna Nagar; Shabnam, Aminjakarai, Sekar Emporium, Kodambakkam; Kids Crazy, Anna Nagar.

**PONDICHERRY :** Shabnam, Crowns; Kiddies Centre;

**VELLORE:** Shabnam; Sarkar Readymades; Milan.

**VILLUPURAM :** Bagya's Sarees.

**KRISHNAGIRI:** New Rani Dresses : Krishnapriya Agencies, Dharmapuri : Kamadhenu Agencies.

**HOSUR:** Gokuls Readymades: Radhas Readymades : Royal General Agencies

# ஸ்ரீமதி சிட்பண்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்

வாடிக்கையாளர்களே உங்கள் ஆதரவால் எங்கள் நிறுவனம் 10வது ஆண்டின் நிறைவு நாளை நோக்கி நடைபோடுகிறது. ஒவ்வொரு ஆண்டும் வாடிக்கையாளர்களின் நன்மதிப்பை பெற்று அவர்களின் எண்ணிக்கை அதிகமாகின்றது. உங்களின் ஒத்துழைப்பால் எங்கள் நிறுவனத்துடன் வளர எங்களுடைய சீட்டு திட்டங்கள்.

## சீட்டு திட்டங்கள்

| குரூப் | சீட்டுக் காலம் | மாதாந்தா சந்தா (ரூ) | மொத்த தொகை (ரூ) | அதிகபடி தள்ளுபடி |
|---|---|---|---|---|
| SX | 60 | 5000 | 3,00,000 | 30% |
| SL | 50 | 2,000 | 1,00,000 | 30% |
| SJ | 50 | 1,000 | 50,000 | 30% |
| SR | 50 | 600 | 30,000 | 30% |
| SA | 40 | 500 | 20,000 | 30% |
| SB | 40 | 250 | 10,000 | 30% |
| SC | 40 | 125 | 5,000 | 30% |
| SP | 25 | 2,000 | 50,000 | 20% |
| SK | 25 | 1,000 | 25,000 | 20% |
| SI | 30 | 500 | 15,000 | 20% |
| SF | 25 | 400 | 10,000 | 20% |
| SS | 25 | 200 | 5,000 | 20% |

எங்கள் திட்டத்தில் சேரும் நபர்க்கு பரிசும், கூடுதல் 2 நபர்களை சேர்த்தால் ஒரு கவர்ச்சியான பரிசும் உண்டு.

1996-இந்த புத்தாண்டில் உங்கள் கனவுகளை நிஜமாக்க அனுபவம் வாய்ந்த வல்லுநர்களால் நடத்தப்படும் எங்கள் சீட்டு நிறுவனம் உங்களை அழைக்கிறது.

தேவை

டெலிமார்க்கெட்டிங் நபர்கள் - பெண்கள்

ஏஜெண்டுகள் - ஆண்/பெண்

நேரிலோ அல்லது தபால் மூலமாகவோ உடனடியாக அணுகவும்.

**ஸ்ரீமதி சிட்பண்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்**

பதிவு அலுவலகம்
34-B நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை,
சென்னை 600 034.
போன்: 8250770.

பரிசுக்காக கூப்பன் வந்து சேர வேண்டிய தேதி 10-02-96.

நான் உங்கள் சீட்டு திட்டத்தில் சேர விரும்புகிறேன். விண்ணப்பத்துடன் விவரம் அறிய வேண்டுகிறேன் நான் தேர்வு செய்த சீட்டு. SI ☐ SJ ☐ SR ☐ SA ☐ SS ☐ SB ☐ SC ☐ SP ☐ SK ☐ SI ☐ SF ☐

பெயர் : ..............................

முகவரி : ..............................

.............................. Pin..............

முதலில் வரும் 25 கூப்பன்களுக்கு ஒரு கவர்ச்சிகரமான பரிசு

**சிறப்பு நிலைக்கு விடாது முயற்சி செய்.**
**கடின உழைப்புக்கு இணை ஏதுமில்லை.**
**கடமையின்றி உரிமை இல்லை!**

இதெல்லாம் என்ன என்கிறீர்களா?

கோவையின் சிறப்புக்களில் ஒன்றான வேளாண்மைப் பல்கலை கழகத்தில் ஆங்காங்கே எழுதப்பட்டிருக்கும் வாசகங்கள். இங்கு பாதிக்குப் பாதி பெண்கள் படிக்கிறார்கள். செடியிலிருந்து காய்த்த பருத்தியை எடுத்துக் கொண்டிருந்த சில மாணவிகளைச் சந்தித்தேன்.

**விமலா ரமணி :** இப்படி பீல்ட் ஒர்க் என்று வெயிலில் காய்கிறீர்களே? கஷ்டமாக இல்லையா?

காக்கி யூனிபார்ம் போட்டுக் கொண்டு வெடித்த பருத்திச் செடியிலிருந்து வெள்ளைவெளேர் என்ற பருத்தியை எடுத்துக் கொண்டிருந்த அந்த மாணவிகள் 'பளீர்' என்று சிரித்தார்கள். பருத்தி மட்டும் தான் வெடிக்குமா? இவர்களும் வெடித்தார்கள்.

"உழைப்பு என்று வந்து விட்டால் அதற்காக கணக்கக் கூடாது. செய்யும் தொழிலே தெய்வம். இந்தத் துறை நாங்களாக விருப்பப்பட்டு ஆர்வத்துடன் தேர்ந்தெடுத்த துறை. இதில் உடல் உழைப்புத்தான் முக்கியம். எனவே வெயிலோ, மழையோ, சகதியோ, தண்ணீரோ நாங்கள் அஞ்சுவதில்லை."

# பவர் ட்ரில்லரும் ஓட்டுவோம்!

**கேள்வி :** "எத்தனையோ துறைகள் இருக்க இந்த வேளாண்மையை ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்?"

**ஜெயந்தி :** "இதில் தான் பியூர் மெரிட்டுக்கு சீட் கிடைக்கிறது. வேலை வாய்ப்புகள் இருக்கின்றன."

**அனிதா :** "இயற்கைச் சூழ்நிலையில் ரம்யமான இந்த வயல் வெளிகளில் ப்ராக்டிகல் கிளாஸுக்கு வருவதே மகிழ்ச்சியான அனுபவம்."

கே : "வேலை வாய்ப்பு என்றால் எப்படி?"

"செல்ப் எம்ப்ளாய்மெண்டுக்கு ஸ்கோப் இருக்கிறது. வங்கிகளில் விவசாய ஆபீஸராக பணிபுரிய வாய்ப்பு இருக்கிறது. மாடுகள் வாங்க, விவசாயம் பண்ண இப்படி வங்கிகள் நிறைய கடன் தருகின்றன. கிட்டத்தட்ட பத்து லட்சம் வரை தருகிறார்கள். எல்.ஐ.ஸி. போன்ற ஸ்தாபனங்களிலும் 'அக்ரி கிராஜுவேட்ஸுக்கு', நிறைய வேலை வாய்ப்பு வசதிகள். இருக்கின்றன. இதைத் தவிர தனிப்பட்ட முறையில் நாமே காளான் வளர்ப்பு போன்ற பணிகளில் ஈடுபட்டு பணம் சம்பாதிக்கலாம்."

இதே கருத்தைத்தான் அங்கு 'பீல்டில்' இருந்த புவனேஸ்வரி, அருணா, கீதா, அன்ன பூர்ணி, லலிதா ஆகிய அனைவரும்



வலியுறுத்தினார்கள்.

அங்கு இருந்த உளவியல் துறை உதவிப் பேராசிரியை திருமதி ஜெயந்தி கூறினார்,

"வரவர மாணவிகள் இந்த வேளாண் மைத் துறையை மிக ஆர்வத்துடன் தேர்ந் தெடுக்கக் காரணம், விஞ்ஞான வளர்ச்சி யுடன் மண் வளம் பார்த்து சிறப்பாகப் பணிபுரிய முடியும் என்கிற நம்பிக்கை இன்றையப் பெண்களுக்கு நிறைய வந்திருக் கிறது. வேலை செய்யும் போது ஆண், பெண் என்கிற பேதங்கள் இங்கு யாரும் பார்ப்பதில்லை. அனைவரும் 'பீல்ட்வொர்க்' செய்கின்றனர்."

ஒருபுறம் அழகிப் போட்டிகளும், அழகுக் குறிப்பு சாதனங்களும், சூரிய வெளிச்சத்தி லிருந்து பாதுகாக்க ஏகப்பட்ட 'ஸன்டேன் கிரீம்களும்'... இன்னொரு பக்கத்தில் வெயி லையும் பொருட்படுத்தாமல் களத்தில் இறங்கி விவசாயம் செய்யும் மாணவிகள்.

பண்ணை இயந்திரவியல் கட்டடத்தில் நுழைந்தபோது சற்று தூரத்தில் வயல்வெளி யில் காக்கி யூனிபார்ம் அணிந்த மாணவி ஒருவர் 'டிராக்டரை' ஓட்டிக் கொண்டிருந் தார். அவர் பெயர் சுப்புலட்சுமி. இறுதி யாண்டு இன்ஜினியரிங் பயிலும் மாணவி. சமீபத்தில் சிம்ப்ஸன் க்ருப்பின் 'TAFE' நடத்திய ஒருமாத 'ட்ரெயினிங் கோர்ஸை' முடித்துவிட்டு வந்திருக்கிறார்.

சிரித்தபடி டிராக்டரைவிட்டு இறங்கிய சுப்புலட்சுமியிடம்,

"இது போன்ற ஹெவி வெஹிகில் ஓட்டு வது சிரமமாக இல்லையா?" என்றதற்கு,

"நிச்சயமாக இல்லை. எங்கள் அக்ரி பாடத் திட்டத்தில் டிராக்டர் ஓட்டுவது பற்றிய பயிற்சி ஒரு செமஸ்டர் முழுவதும் இருக்கிறது. அது கட்டாயப் பாடம். எனவே இந்த இயந்திரத்தைக் கையாளுவது சிரமமாக இல்லை."

"அது சரி... அகடமிக் குவாலிபிகேஷன் அதிகமாக அதிகமாக ரிசர்ச் ஒர்க்கில் போய் விடுவீர்கள். டாக்டர் பட்டம் பெறுவீர்கள். அப்புறம் எங்கே டிராக்டர் ஓட்டுவது?"

"என்ன அப்படிச் சொல்லிட்டீங்க? குடும்பத் தலைவி ஒரு சிறந்த நிர்வாகியாக, சமையல் கலைவல்லுனராக இருந்தால்தான் வேலைக்காரர்களை சரியாக வேலை வாங்க முடியும். குடும்பத்தை நிர்வகிக்க முடியும். அதே போல்தான் இதுவும். இதில் பயிற்சி இருந்தால்தான், இந்த டிராக்டரைப் பற்றிய முழு அறிவும் இருந்தால்தான் இதை மற்ற வர்கள் கையாளும் போது அது பற்றி குறை, நிறைகளை அறிந்து கொள்ள முடியும்.

சொல்லிக் கொடுக்க முடியும்."

"இப்போது டாஃபே நடத்திய சர்டிபிகேட் கோர்ஸிலே கலந்து கொண்டதால் என்ன பயன்?"

"இப்போது நிறைய 'ரிசார்ட்ஸ்' வருகின்றன. புதுப்புதுத் திட்டங்களும் வருகின்றன. இந்த சர்டிபிகேட் கோர்ஸினால் வேலை வாய்ப்புக்கு வசதிகள் அதிகம் இருக்கின்றன. ஆனாலும் 'ரிசார்ட்ஸ்' போன்றவற்றை நடத்தும் பெரிய பெரிய நிறுவனங்கள் பெண்களை நம்பி முழுப் பொறுப்பையும் தரத் தயாராக இல்லை. ஆயிரம் ஏக்கர் நிலத்தை இந்தப் பெண்கள்



கண்காணித்து நிர்வகிக்க முடியுமா என்கிற பயம்... இதை நாங்கள் மாற்றிக் காட்டுவோம்..."

'பவர் டிரில்லரை' ஓட்டியபடி இன்னொரு மாணவி கவிதா (இன்ஜினியரிங் இறுதியாண்டு) வருகிறார். இந்த பவர் டிரில்லர் ஒரு மினி டிராக்டர். இதில் விதைகள், பயிர்கள், உரங்கள் முதலியவற்றை எடுத்துக் கொண்டு நிலத்துக்குப் போகலாம். இவர் எங்கே போகிறார்?

பண்ணை இயந்திரவியல் கட்டடத்தில் ஏகப்பட்ட மிஷின்கள். இதன் பொறுப்பாளர் ப்ரபசர் ரங்கசாமி. நமக்கு அங்குள்ள மிஷின்களைக் காட்டியபடி இந்த மிஷின்களால் பெண்களின் வேலைப் பளு குறைகிறது என்கிறார். நெல் கதிர் அறுவடை செய்யும் மிஷின். கதிரடிக்கும் மிஷின். விதை விதைக்கும் மிஷின். களை எடுக்கும் மிஷின். நெல்களை தரம் பிரிக்கும் மிஷின். வரிசையாக மிஷின்கள். மிஷின்கள்... மிஷின்கள்....

ஆனால் ஒன்று இந்த மிஷின்கள் கதிரடிக்கும் போது பாட்டுப் பாடாது! குலவையிடாது... தெம்மாங்கு பாடாது. அதெல்லாம் வேலைப் பளு தெரியாமல் இருக்க அந்தக் காலத்தில் பாடிய பாட்டுக்கள்! கையாண்ட யுக்திகள்! இது நவீன யுகம். நவ நாகரீகம். பெண்கள் நவீனமாக, மிஷின் களின் மூலம் விஞ்ஞான முறையில், எளிமையாக விவசாயம் செய்யக் கற்றிருக்கிறார்கள்.

இப்போது பாட்டு தேவை இல்லை. பாடங்கள் போதும். இதைப் பற்றி பதனம் செய்துறையைச் சார்ந்த விஸ்வநாதன், டாக்டர் ஸ்ரீ நாராயணன் ஆகியோர் உற்சாகமாக விவரித்தனர்.

"இப்போது பெண்கள் முந்தி மாதிரி இல்லை. துணிவாக எல்லா துறைகளிலும் கால் பதிக்கிறார்கள். அறுவடைக்கு அப்புறம் வீணாகும் பொருட்களை (கிட்டத்தட்ட 10%) மறுபடியும் பயன்படுத்துவதன் மூலம் நாங்கள் பல அரிய சாதனைகள் செய்துள்ளோம். 'போஸ்ட் ஹார்வெஸ்ட் எக்யுப்மெண்ட்கள்' மூலம் எந்த ஒரு சிறு பொருளும் வீணாவ தில்லை. 'ரீ சைக்கிலிங்' முறையில் அவைகளை பயன்படுத்தி காகிதக் கூழ் தயாரித்து பைல்கள், கவர்கள், இப்படிச் செய்கிறோம். இவைகளுக்கு கச்சாப் பொருட்கள் செலவில்லாததால், ஒரு பைலின் விலை 5 ரூபாய்க்குள் அடக்கம். ஒரு மாணவி 100 பைல் செய்தால் அதற்கு அவருக்கு அன்பளிப்பாக ஒரு பைலுக்கு 1½ ரூபாய் வீதம் ரூ 150 தந்துவிடுகிறோம். இப்படி 'Earn while you learn' என்கிற திட்டத்தையும்

## வேர்க்குரு பவுடர், முகப்பரு க்ரீம், ஆன்டிஸெப்டிக் லோஷன், பொடுகு ஷாம்பூ, பியூட்டி சோப்...

# அதெல்லாம் மறந்துவிடுங்கள்.



மறக்காமல் ஒரு ஆயுர்வேத குளியல் தினசரி எடுத்தால் போதும். 18 மூலிகைகள் கலந்த பரிசுத்த தேங்காய் எண்ணெயில் தயாரான மெடிமிக்ஸ் ஆயுர்வேத பாத் சோப் வாங்குங்கள் விலை ரூ. 6.50* மட்டுமே.

**வேர்க்குருவை மறந்துவிடுங்கள்** - மெடிமிக்ஸ் சோப்பிலுள்ள கஸ், ஆனந்த மூல் மற்றும் தனியா வேர்க்குருவை எதிர்க்கின்றன.

**முகப்பருவை மறந்துவிடுங்கள்** - மெடிமிக்ஸ் சோப்பிலுள்ள சித்ரக் மற்றும் தாரு-ஹரித்ரா முகப்பருவை தடுக்கின்றன.

**செப்டிக்கை மறந்துவிடுங்கள்** - மெடிமிக்ஸ் சோப்பில் சருமத்தை பாதுகாக்க சிறந்த இயற்கை ஆன்டிஸெப்டிக் குக்கல், தேவதாரு மற்றும் நிம்பா துவக் உள்ளன.

**பொடுகை மறந்துவிடுங்கள்** - மெடிமிக்ஸ் சோப்பிலுள்ள வாச்சா, பாகுச்சி மற்றும் யஷ்டிமது பொடுகை எதிர்த்து போராடுகின்றன.

**அழகு சாதனங்களை மறந்துவிடுங்கள்** - மெடிமிக்ஸ் சோப்பிலுள்ள குடஜா, ஜீரா, வாயுவிடங்க, ஜ்யோதிஷ்மதி, மகாபாரிவாச்சா, ஆரன்யஜீரகா மற்றும் மதுஸ்னுஹி ஆகியவை வியர்வை நாற்றத்தை அகற்றுவதுடன் சருமத்திற்கு அழகூட்டுகின்றன.

**பக்க விளைவுகளை மறந்துவிடுங்கள்** - ஆயுர்வேதத்தில் நம்பிக்கை வையுங்கள். உங்கள் குடும்பத்தினருக்கு கேசம் முதல் பாதம் வரை முழுமையான பராமரிப்பை மெடிமிக்ஸ் ஆயுர்வேத பாத் சோப் மூலம் தினசரி அளியுங்கள்.

* Per 75g. pack



செயல்படுத்துவதன் மூலம் மாணவ, மாண விகளுக்குப் படிக்கும் போதே வருவாயும் கிடைக்கிறது.

இங்கு 23 ஆண்டுகளாக பேராசரியை யாகப் பணிபுரியும் திருமதி நிர்மலா மூர்த்தி யும், டாக்டர் ஜெயலட்சுமியும்,

"இன்ஜினியரிங்கில் 20% பெண்கள், பி.எஸ்ஸி. அக்ரியில் 50% பெண்கள் படிக் கிறார்கள் என்றால் பெண்களின் விழிப் புணர்வு புரியும். இந்த உயர்வுக்காக அவர் கள் எந்தக் கடினப் பணிக்கும் தயாராக இருக்கிறார்கள். ஸோ... பெண்களுக்கு ஏற்ற துறை இந்த வேளாண்மை துறைதான்" என்கிறார்கள்.

மண்வளம் மற்றும் தண்ணீர் (soil & water) துறையில் 'எம்.ஈ.' முடித்த பேபி மீனாட்சி,

"சொட்டு நீர்ப் பாசனத்துறை பெண் களுக்கு ஏற்ற பணி. வெயில் காலத்தில் கூட பயிர்கள் வாடாமல் இருக்க உதவுகிறது. வெளியூர் சென்றால் கூட தோட்டத் துக்குத் தண்ணீர் ஊற்றவில்லையே என்ற கவலை தேவை இல்லை. இந்தத் துறையில் தேர்ச்சி பெற்றால் எங்கிருந்தாலும் பயிர் களை வாழவைக்க முடியும். வருவாய் பெற முடியும். பசுமைப்புரட்சி நிகழ்த்திக் காட்ட முடியும். 'கிரீன் ஹவுஸ்' நிர்மாணிப்பதின் மூலம் எந்த 'க்ளைமேட்டிலும்', எந்தச் சூழ்நிலையிலும் பயிர்கள் வளரும். கிச்சன் கார்டன் கூட அமைக்கலாம்" என்கிறார்.

"பெண்களுக்கென்றே ஜாம், பட்டர் தயாரிப்பது பற்றி, காளான் வளர்ப்பு பற்றி பல வெகேஷனல் கோர்ஸ் இந்தக் கழகம் நடத்து கிறது. இதனால் குடும்பப் பெண்கள் பயனடைகின்றனர். வீட்டில் இருந்த படியே சம்பாதிக்கவும் வழி செய் கிறது இது போன்ற திட்டங்கள்...." என் கிறார் பத்மகுமாரி.

உயிர் சக்தித் துறையில் பணியாற்றும் லலிதா,

"புதுப்பிக்கப்பட்ட எரிசக்தி, அல்லது மாற்று எரி சக்தி மூலம் அதன் வீரியத்தை அதிகப்படுத்தும் வழிமுறைகளை நாங்கள் ஆராய்கி றோம். சூரிய ஒளியில் சூரிய அடுப்பு, வாட்டர் போன்றவை குறைந்த செலவில் நமது தேவைகளைப் பூர்த்தி செய்யும். இவைகளை புகை இல்லாத அடுப்பு, மேம்படுத்தப்பட்ட அடுப்பு என்போம். 'அல்ட்ரா வயலட் கதிர் கள்' மூலம் பப்பாளியி லிருந்து பால் எடுத்து உலர்த்தி அதனை மருத்துவ சக்தி மிக்கதாக மாற்றுகிறோம். தோல் பதனிடும் செயலுக்கு இந்தப் பொருள் மிகத் தேவை. பதப்படுத்தப்பட்ட பப்பாளி விதைகள் கிலோ 200 ரூபாய் வரை விலை போகிறது" என்கிறார்.

"நான் எஸ்.எஸ்.எல்.சி. தான் படித்திருக் கிறேன். ஆனால் இந்த வேளாண்மை பல் கலைக் கழகத்தில் சேர்ந்து விவசாயக் கல் லூரி துறை, மனையியல் துறை, பொறியியல் துறை என்று படிப்படியாக உயர்ந்து இந்த 23 வருடத்தில் நான் இன்று ஒரு 'சூப்ரண் டெண்டாக' இருக்கிறேன். இங்கு பயிலும் மாணவ, மாணவிகள் நவீன யுகப் பெண் களாக இருந்தாலும் நமது கலாசாரத்தை மறந்து விடவில்லை. இங்கு வாசலில் ஞான விநாயகர் கோவில் இருக்கிறது. எங்கள் மாணவிகள் தனது ஓய்வு நேரங்களை டி.வி. பார்ப்பதில் செலவிடுவதில்லை. ஞான விநாயகரை வழிபடுகிறார்கள். ஆன்மீகப் பயிற்சி பெறுகிறார்கள்" என்கிறார் லலிதா.

ஒட்டுமொத்தமாக அனைவரின் கருத்தும் தொலைக்காட்சி நிலையம் வேளாண்மைத் துறையின் வல்லுனர்களை வைத்து 'வயலும் வாழ்வு' நிகழ்ச்சி நடத்த வேண்டும் என்பது தான். வேளாண்மையில் முறைப்படி முது நிலைப் பட்டம் பெற்ற பெண்கள் இந்த வயலும் வாழ்வும், மற்றும் கிராமிய நிகழ்ச்சி களில் பங்கு பெறுவதில்லை. இதைத்



இதோ, புத்தம் புதியதொரு தன்னம்பிக்கை... நாள் முழுதும்.

# அறிமுகம் – புதிய ரெக்ஸோனா டியோடரன்ட்

இதோ, புதியதொரு தன்னம்பிக்கை... உடல் துர்நாற்றத்திலிருந்து முழுமையான பாதுகாப்பைப் பெற முடிவதால் — புதிய ரெக்ஸோனா டியோடரன்ட். இனி, நிச்சயமாக, உடல் துர்நாற்றம் ஒருபோதும் உங்களை ஒதுக்கிவிடாது.

**உடல் துர்நாற்றமா? எனக்கா?**

பகல் முழுதும் நேரம் செல்லச் செல்ல, நம் அனைவரின் உடலிலும் துர்நாற்றம் ஏற்படத்தான் செய்யும். நண்பர்களை நெருங்கவே தயக்கமும் மனவருத்தமும் உண்டாகலாம். குளிப்பது மற்றும் பவுடர் போட்டுக் கொள்வதன் பலன் சிறிது நேரத்திற்குத்தான். நாள் முழுதும் நிலைத்திருக்கும் பாதுகாப்பைப் பெற முடியாது.

**புதிய ரெக்ஸோனா டியோடரன்ட். உடல் துர்நாற்றத்தை எதிர்க்கக் கூடிய இணையற்ற பாதுகாப்பு**

. புதிய ரெக்ஸோனா டியோடரன்டில் மட்டுமே பிரத்தியேகமாக உள்ளது — டியோஸ்ட்டரால். இது உடல் துர்நாற்றத்தை எதிர்த்து நாள் முழுதும் — மற்றவற்றை விட அதிக நேரம் — பாதுகாப்பு அளிக்கிறது. நீங்கள் தேர்ந்தெடுக்க வசதியாக மூன்று வகை சர்வதேச வடிவங்கள் — ஸ்டிக், ரோல்–ஆன் மற்றும் ஸ்பிரே குளித்துத் துவட்டிக் கொண்ட பிறகு தினமும் கைகளுக்கு அடியில் புதிய ரெக்ஸோனா டியோடரன்ட்டை நேரடியாகப் பயன் படுத்துங்கள்.

நாள் முழுதும் நிலைத்திருக்கும் புத்தம் புதிய தொரு தன்னம்பிக்கையைப் பெற்று மகிழுங்கள்.




புதிய
**Rexona®**
DEODORANT
துணை வருமே, எப்போதும்!

தொலைக் காட்சியினர் கவனிக்க வேண்டும் - என்றார்கள்.

கடைசியாக இந்த விவசாயப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தர் டாக்டர் சங்கரனைச் சந்தித்த போது -

"பெண்கள் இப்போது நிறையவே மாறி விட்டார்கள். பி.ஜி. கோர்ஸில் பெண்கள் எண்ணிக்கைதான் அதிகம். நாலைந்து மாண வர்கள் 'அம்போ' என்று அமர்ந் திருப்பதைப் பார்த்தால் எனக்கே பரிதாப மாக இருக்கும். பெண்களில் ஆட்டோ ஓட்டுனர்கள், பஸ் ஓட்டுனர்கள், ஏன் பெட் ரோல் பங்குகளில் கூட இரவு நேரங்களில் பணிபுரிபவர்கள் இருக்கிறார்கள். இப்போது இவர்கள் டிராக்டரும் ஓட்டுகிறார்கள். 'பவர் ட்ரில்லரும்' ஓட்டுகிறார்கள்.

பழைய பத்தாம் பசலித்தனமான கண் ணோட்டங்கள் மறைந்து உழவும், தோட்ட மும், தூரவும் பெண்களுக்கும் ஏற்றதுதான் என்கிற முடிவுக்கு இவர்கள் வந்துள்ளார் கள். கி.பி. 2000 த்தில் இன்னும் அதிகப் பெண்கள் இத்துறைக்கு வருவார்கள். காரணம் சுய தொழில், வேலை வாய்ப்புகள் இவைகள் சம்பந்தப்பட்ட 17 பாடத் திட்டத்தை நாங்கள் அறிமுகப் படுத்தியுள் ளோம். இத்திட்டங்களுக்கு இந்தியன் வங்கி பண உதவி செய்கிறது.

விளை பொருட்களை அப்படியே விற் பதைவிட அதை மாற்று உரு அமைத்து விற் பதின் மூலம் வருவாயை அதிகப்படுத்திக் கொள்ளலாம். பருத்தியை அப்படியே விற்றால் ஒரு ரூபாய் கிடைக்கும். அதை நூலாக்கி விற்றால் இரண்டு ரூபாய் வருவாய் கிடைக்கும். இதையே ஆடையாக மாற்றும் போது ஐந்து ரூபாய் வருவாய் கிடைக்கும். இதுதான் உழைப்பின் வெற்றி. இந்த வெற்றி பெண்களுக்கு மிகச் சுலபமாக வருகிறது. ஏனெனில் இந்த மண்ணின் வளத்தில் பெண்மையின் பொறுமையும், பெருமையும், பொறுப்பும் வளம் பெற்று நிற்கிறது. இந்த வேளாண்மையில் பெண்கள் அதிக அக்கறை காட்டுவதின் ரகசியம் இதுதான்" என்கிறார்.

கூடவே உறு துணையாக இருந்து, அத் தனை இடங்களுக்கும் எங்களை அழைத்துப் போய், அவ்வப்போது ஆங்கில வார்த்தை களுக்கு அழகான தமிழ்ச் சொற்களைத் தங்கு தடையின்றிச் சொன்ன டாக்டர் பழனிச் சாமிக்கு 'தமிழ் என்சைக்ளோப் பீடியா மன்னன்' என்று பட்டம் கொடுத்தால் என்ன?

சந்திப்பு, கட்டுரை : **விமலாரமணி**

புகைப்படங்கள் : **பிரசன்னா எஸ்.ஆர்.வி.**

மங்கையர் மலரும், செண்பகம் சில்க்ஸும் இணைந்து ஒரு கட்டுரைப் போட்டியினை அறிவித் திருந்தோம். புடவை சம்பந்தமாக பெண்களுக்குப் பல்வேறு சம்பவங்கள் வாழ்க்கையில் நடந் திருக்கலாம். அந்த உணர்வுகளையே ஒன்பது பிரிவாகப் பிரித்து ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு உணர்வு வெளிப்படுவதாகப் போட்டிகளை அறிவித்து வருகிறோம்.

முதல் மாதப் போட்டியில் ரூ. 5,000/- மதிப்புள்ள பட்டுப் புடவை பரிசுபெறும் கட்டுரையை இவ்விதழில் பிரசுரித்து இருக்கிறோம். அது தவிரவும் சுவையான சில் கட்டுரைகளையும் தேர்ந் தெடுத்து பிரசுரித்துள்ளோம். அவை வழக்கமான மங்கையர் மலர் சன்மானத்தைப் பெறுகின்றன.

சரி, மூன்றாவது மாதப் போட்டிக்கான தலைப்பு —

# வருத்தம்

புடவை சம்பந்தமாக உங்கள் வாழ்க்கையில் வருத்தம் ஏற்படுத்திய நிகழ்ச்சியை, அல்லது உங்களுக்குத் தெரிந்தவர் வாழ்க்கையில் வருத்தம் ஏற்படுத்திய நிகழ்ச்சியை எழுதி அனுப்புங்கள்.

போட்டிக்கான நிபந்தனைகள் —

- *வாழ்வின் வண்ணங்கள் போட்டியில் இது மூன்றாவது மாதப் போட்டி. மொத்தம் ஒன்பது மாதங்கள் நடைபெறும்.*
- *ஒவ்வொரு மாதமும் போட்டிக்கு வரும் கட்டுரைகளில் மிகச் சிறந்த ஒன்றைத் தேர்ந் தெடுத்து ரூ.5000/- பெறுமானமுள்ள 'செண்பகம் சில்க்ஸ்' பட்டுப்புடவை பரிசாக அளிக்கப்படும்.*
- *இந்தப் போட்டிக்கான கட்டுரை ஒரு பக்கத்திற்கு மிகாமல் இருக்க வேண்டும்.*
- *கட்டுரையின் முடிவில் உங்களுடைய பெயர், முகவரியைத் தெளிவாக எழுதவும்.*
- *தபால் கவரின் மேல் **வாழ்வின் வண்ணங்கள் கட்டுரைப் போட்டி — 3** எனத் தவறாமல் குறிப்பிடவும்.*
- *இம்மாதக் கட்டுரைகள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி 20.2.'96.*
- *கட்டுரைகளைத் தபாலில் மங்கையர் மலர் முகவரிக்கோ அல்லது தபாலிலோ (அ) நேரிலோ செண்பகம் சில்க்ஸ், 30-பி, லஸ் அவின்யூ (நாகேஸ்வரராவ் பார்க் பின்புறம்) மைலாப்பூர், சென்னை — 600 004 என்ற முகவரிக்கோ அனுப்பவும். இரண்டு இடத்திற்கும் ஒரே கட்டுரையைப் பிரதி எடுத்து அனுப்ப வேண்டாம்.*
- *கட்டுரை சம்பந்தமான கடிதப் போக்குவரத்தோ, திருப்பி அனுப்புவதோ கிடையாது.*
- *கட்டுரை சம்பந்தமான விதிகளை திருத்தவோ மாற்றவோ ஆசிரியருக்கு உரிமையுண்டு.*
- *பரிசு பெறும் கட்டுரைகளைப் பொறுத்தவரை ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.*

## மங்கையர் மலர் & செண்பகம் சில்க்ஸ்

வழங்கும்

# வாழ்வின் வண்ணங்கள்

கட்டுரைப் போட்டி : 3.

## முதல் பரிசுக் கட்டுரை

# வாழ்வின் வண்ணங்கள் — ஆச்சர்யம்!

என் கணவர் கொஞ்சம் வித்தியாசமானவர். குழந்தைகளின் படிப்பு, குடும்பத்தினரின் உணவு, உடல்நலம் இவற்றிற்கெல்லாம் பார்த்துப் பார்த்துச் செலவு செய்ய அஞ்சாதவர். எனது வேலைகளை எளிதாக்க மிக்ஸி, கிரைண்டர், ஃபிரிட்ஜ், வாஷிங் மெஷின், வாக்வம் க்ளீனர் எல்லாம் முகம் சுளிக்காமல் வாங்கித் தந்திருக்கிறார். கன்னியாகுமரி முதல் டெல்லி வரை எல்லா இடங்களுக்கும் குடும்பத்தினரை அழைத்துச் சென்றிருக்கிறார். ஆனால் புடைவை, துணிமணி வாங்க வேண்டும் என்ற பேச்சு வந்தால் போதும் ஆளே மாறிவிடுவார். தேவையின்றி உடைகள் வாங்குவது தவறு என்று நினைப்பவர். மதிப்பும் மரியாதையும் உடையால் வருவதல்ல என்று வாதிடுவார். எனக்கு அவர் குணம் பழகிவிட்டது என்றாலும் எங்கள் மகளுக்கும்,

வேண்டும்? ஒரு விசேஷத்திற்கு இரண்டு செட் வாங்குவது அனாவசியம்' என்று அடித்துச் சொல்லிவிடுவார். கொள்கையளவில் இவர் கருத்தை நான் ஒப்புக் கொண்டாலும், நானும் பெண்தானே! அடி மனதில் இந்தக் குறை அடிக்கடி தலைதூக்கும் - மூன்றாண்டுகளுக்கு முன்பு வரை. எத்தனையோ இடையூறுகளுக்கிடையே நான் எம்.எஸ்ஸி பாஸ் செய்த போதுதான் அந்த அற்புதம் நிகழ்ந்தது.

"வேலைக்கும் போய்க் கொண்டு, வீட்டையும் கவனித்துக் கொண்டு, இந்த வயதில் எம்.எஸ்ஸி. - அதுவும் முதல் வகுப்பில் பாஸ் பண்ணியிருக்கிறாய் என்றால் உண்மையிலேயே அதைப் பாராட்ட வேண்டும். அதனால்தான் உனக்குப் பிடித்தமான பரிசாக வாங்கி வந்தேன்."

என்று அட்டைப் பெட்டியை அவர் என் கையில் தந்தபோது, ஆச்சரியத்தால் விரிந்த என் கண்களின் முன் பச்சை நிறத்தில், ஜரிகை வேலைப்பாடு கொண்ட மென்மையான பட்டுப்புடைவை பளபளத்தது. தேர்வில் பாசான மகிழ்ச்சியோடு, ஆச்சரியத்தில் பேச்சற்றுப் போனேன்.

- **திருமதி சங்கரன், திருமங்கலம்.**



ரோஸ் கலரில் மிக மாடர்னாகப் பூ வேலைப் பாடு செய்த ஜார்ஜட் புடைவை! அல்ட்ரா மாடர்னாகப் புடைவை கட்டும் பழக்கம் நமக்கில்லை என்று தெரிந்த அக்கா இப்படி அனுப்பியது ஆச்சரியமாக இருந்தது. சரி, வெளி நாடு சென்ற அக்கா, தன் தங்கையை அதிநாகரிகமாக ஆக்க ஆசைப்படுகிறார் போலிருக்கிறது என்று எண்ணிக் கொண்டு, புடைவை கிடைத்த விவரத்தை அக்காவுக்கு எழுதினேன். அடுத்த ஆச்சர்யம், தான் புடைவையே அனுப்பவில்லை என்ற பதில் இருபது நாட்களில் வந்து சேர்ந்தது. வார்ட னிடம் தெரிவித்தேன். இனிஷியல், வகுப்பு, ரூம் நம்பர் எல்லாமே விலாசத்தில் தெளிவாக இருந்ததே. வேறு யார் அனுப்பியிருப்பார்கள் என்று கூறினாலும், மற்ற ராஜேஸ்வரிகளை யும் விசாரித்தார். யாருக்கும் அப்படி யாரும் அனுப்ப வாய்ப்பில்லையாம். என் நெருங்கிய தோழியே ராஜேஸ்வரிதான். ராஜேஸ்வரி² (square) என்றுதான் எங்களைக் குறிப்பிடுவார் கள். அவள் உறவி னர் அனைவரும் அதே ஊரில் இருப்பவர்கள். ஆனாலும், தன் சித்தப்பா அடிக்கடி சென்னை செல்பவர் அனுப்பினாரா என்று கேட்பதாகக் கூறி விசா ரித்து எழுதினாள். அவர் தான் அனுப்ப வில்லையென்றும், சென்னை செல்லும்போது விசாரிப்பதாகவும் கூறி விலாசம் வாங்கிச் சென்றார். அனுப்புனர் விலாசத்தில் பெய ரில்லை. K.R.R. No. 1 ஹபிபுல்லா ரோடு, சென்னை என்றுதான் இருந்தது (இனிஷியல், கதவு எண்ணெல்லாம் அவ்வளவு தெளிவாக இப்போது நினைவில்லை. இப்படித்தான் நினைவுக்கு வருகிறது) அதே மாதிரி விலாசம் எழுதி ஒரு கடிதம் எழுதினேன். பதிலில்லை. மறுபடி ஒரு கடிதம். ஊஹூம், பதிலே யில்லை. ஆச்சர்யம்தான்!

ஹாஸ்டலில் என் தோழிகளெல்லாம் அந்தப் புடைவையை வாங்கிப் பார்ப்பதும், ஆளுக்கொரு ஐடியா கொடுப்பதுமாக இருந் தார்கள். "ஏண்டி, உனக்கு முறை மாப்பிள்ளை யாராவது அனுப்பியிருப்பார்களோ?" என்றும் கிண்டல் செய்வார்கள்.

இச்சமயத்தில், ராஜேஸ்வரியின் சித்தப்பா விசாரித்துக் கூறிய தகவல், ஆச்சர்யமானது! அது சினிமா நடிகை சாவித்திரியினுடைய வீட்டு விலாசம் என்பதுதான்!' கடிதத்துக்கே பதிலில்லை என்கிறாய், அந்த வீட்டுக்கெல் லாம் நான் எப்படி அம்மா போக முடியும் என்று கூறிவிட்டார். சாவித்திரிக்கு உங்கள் விசிறி நான் என்று கூட நான் எழுதியதில் லையே! உடனே தோழிகள் தீர்ப்பு "நாலைந்து பிச்சைக்காரர்களுக்கு வஸ்திர தானம் செய்வதாய் வேண்டியிருப்பார். உன் பெயர் அந்த லிஸ்டில் இருந்திருக்கும்" என்று.

ஒரே ஆச்சர்யமும், குழப்பமும், அச்சமு மாக நாட்கள் சென்றது. இவ்வளவு அழகான புடைவை இப்படி அனாதையாகக் கிடக் கிறதே என்று கூறி வருந்தும் என் தோழி சாந் திக்குத் தேர்வு முடிந்தபின் திருமணம் என்று நிச்சயிக்கப்பட்டது. அவளுக்கே இதைப் பரிசாகக் கொடுத்துவிட்டேன்.

நடிகை சாவித்திரியோடு தொடர்புடைய யாருக்காவது இப்படித் தெரியாதவர்களுக்குப் பரிசு அனுப்பும் வழக்கம் அவருக்கு உண்டா என்று தெரிந்திருக்கலாமோ? சாவித்திரிக்கு உடல் நலமில்லாத செய்தி, இறந்த செய்தி யெல்லாம் பேப்பரில் பார்க்கும்போது வருத் தத்தோடு, இந்தப் புடைவையின் நினைவும் சேர்ந்து வரும் எனக்கு.

எப்படித்தான் வந்ததோ அந்தப் புடைவை!

- நா. ராஜேஸ்வரி, மதுரை - 625 014.

## இன்றும் தொடரும் இனிய உறவு

அப்பொழுது நான் கல்லூரியில் வேலைக் குச் சேர்ந்து இரண்டு மாதங்களே ஆகியிருந் தன. கல்லூரி ஸ்தாபகர் தின விழாவும் ஆண்டு விழாவும் சிறப்பாக அவ்வருடம் நடக்க இருந்தது. விழாவிற்கு எங்கள் டிபார்ட் மெண்ட்டில் எல்லா ஆசிரியைகளும் பட்டுப் புடைவை கட்டிக் கொண்டு வரவேண்டும் என்று தீர்மானித்தார்கள். அதே கல்லூரியில் படித்து முடித்து வேலைக்குச் சேர்ந்திருந்த எனக்கு அவர்களிடம், "என்னிடம் ஒரு பட்டுப் புடைவை கூட இல்லை" என்ற உண்மை யைக் கூற வெட்கமாக இருந்தது.

என்ன செய்வது என்று தெரியாத குழப் பம். நான் ஒருத்தி மட்டும் பட்டுப்புடைவை யில் இல்லாமல் இருந்தால் வித்தியாசமாகத் தெரியுமே என்று தவிப்பு. யாரிடமும் எதுவும்




பார்க்கிங் செய்ய வசதியான இடம் என்று
பெருமையடித்துக் கொள்ளும் சின்க்!



இரவல் கேட்டு வழக்கமுமில்லை. புதிதாக ஒன்று வாங்கிக் கொள்ளலாம் என்றால் வீட்டுப் பொருளாதாரம் பயமுறுத்தியது. பேசாமல் லீவு போட்டு விடலாம் என்றால் மிக முக்கியமான விழா - வேலைக்குச் சேர்ந்த புதிது. கல்லூரியில் நல்ல மதிப்பெண்கள் பெற்றுத் தேர்ந்தமைக்கு மேடையேறிப் பரிசு வேறு வாங்க வேண்டியிருந்தது.

நாட்கள் நெருங்க நெருங்கப் பட்டுப் புடைவையை நினைத்து உறக்கமேயில்லை. என்னிடம் இருந்ததோ தினப்படி கல்லூரிக்கு உடுத்திச் செல்லும் அரை டஜன் காட்டன் புடைவைகளும், மூன்று நான்கு நைலக்ஸ் புடைவைகளும்தான். விழாவிற்கு இன்னும் இரண்டு நாட்களே இருந்தன. என்னுடன் பள்ளியில் ஒன்றாகப் படித்த தோழியும் அதே கல்லூரியில் வேலைக்குச் சேர்ந்திருந்தாள். பணப் பிரச்னை என்பதே தெரியாமல் வளர்ந்த வீட்டின் செல்லப் பெண் அவள். மாலையில் இருவரும் பேசியவாறு ஒன்றாக வீடு திரும்புவது வழக்கம். ஆருயிர்த் தோழியிடம் கூடப் பிரச்னையைக் கூறி உதவி கேட்கத் தயக்கம் - கௌரவம் தடுத்தது.

அன்று காலை கல்லூரிக்கு வந்தவுடன் முதல் மணி வகுப்பு முடிந்து அப்பொழுதுதான் என் இடத்தில் வந்து உட்கார்ந்தேன். திருத்துவதற்கு நோட்டுப் புத்தகங்கள் எடுக்க மேஜை இழுப்பறையை இழுத்தேன். மேலாக, வித்தியாசமாக ஓர் அட்டைப் பெட்டி! வியப்புடன் திறந்து பார்த்தேன். நீலமும் அரக்குக் கலரும் கலந்த லேசான ஜரிகை பார்டருடன் கூடிய ஒரு மிக அழகிய பட்டுப் புடைவை! புடைவையுடன் ஒரு சிறு குறிப்பு மட்டும் - **"From thy ownself"** ஏனோ கண்களில் கண்ணீர் வந்தது. கையெழுத்து காட்டியது அன்புத் தோழியின் பரிசு என்று. வகுப்பு எடுக்கச் சென்ற அவள் வந்தவுடன் என்னைப் பார்த்துப் புன்முறுவலித்தாள். "என்னிடம் நீ சொல்லாவிட்டால் என்ன? உன் மனம் எனக்குத் தெரியாதா" என்பது போல.

மாலையில் வீடு திரும்பும்போது, "இந்தப் புடைவைக்கு நான் செலவு செய்தது வெறும் 50 ரூபாய் மட்டுமே. அதனால் நீ பெரிதாகக் கவலைப்படாதே! புடைவைச் சீட்டு சேர்ந்த பொழுதே நினைத்தேன். குலுக்கலில் சீட்டு விழுந்தால் புடைவையை உனக்கு வாங்கித்தர வேண்டும் என்று. உன் அதிர்ஷ்டம் இரண்டாவது மாதமே சீட்டு விழுந்தது! வாங்கித் தந்தேன்' என்று கூறிச் சிரித்தாள். வருடங்கள் பல சென்றுவிட்ட போதிலும் அந்தப் புடைவை தந்த வியப்பு என் மனத்தை விட்டு நீங்காத நினைவு. எங்கள் நட்பு இன்றும் தொடரும் இனிய உறவு.

**- மாதவி பிரபாகரன், கோவை - 1.**

## மனதை மாற்றிய புடைவை!

**நா**ன் பாண்டிச்சேரி மருத்துவக் கல்லூரியில் பயின்று அங்கு பணிபுரிபவள். இந்தியாவின் எல்லாப் பகுதி மக்களும் கூடியிருக்கும் 'காஸ்மோபாலிடன்' சூழ்நிலை அது. என் எண்ணங்களும், விருப்பங்களும் அந்தப் பண்பாட்டிலே ஊறியவை. எனக்குத் திருமணம் ஆனதோ அரியலூரை அடுத்த குக்கிராமத்தில். என் கணவர் அந்தக் கிராமத்தின் அப்போதைய ஒரே போஸ்ட் கிராஜுவேட். புகுந்த வீட்டினரின் டேஸ்ட் மீது எனக்கு நம்பிக்கை இல்லை. அவர்களும் திருமணப் புடைவை,



நிச்சய தாம்பூலப் புடைவை யாவற்றையும் எங்களையே எடுக்கச் சொல்லி விட்டார்கள். அப்புறம் கூட வீட்டு விசேஷங்கள், திருமண நாட்கள் எல்லாவற்றிற்கும் என் தேர்வுதான். அவர் ஒப்புக்கு வந்து நிற்பார். அவர் அபிப் பிராயம் கூட நான் கேட்டதில்லை.

ஒரு திருமண நாள் சமயம் அவர் சென்னை யில் மேற்படிப்புக்குச் சென்றிருந்தார். எனவே லீவ் எடுத்துக் கொண்டு முதல் நாள் மாலை வருவதாகவும், புடைவை தான் எடுத்து வருவ தாகவும் எழுதியிருந்தார். கிராமத்துப் பச்சை, மிட்டாய் ரோஸ், அடிக்கிற மஞ்சள், கத்திரிப்பூ கலரில் பெரிய பெரிய பூக்கள் எல்லாம் என் கண் முன்னால் நிழலாடின. சரி போகிறது. மாலை, அவர் வந்தவுடன் கடைக்குப் போய் வேறு எடுத்துவிடலாம் என்றிருந்தேன்.

அவரும் வந்தார். புடைவையைக் காண் பித்தார். அவ்வளவு ஆவலின்றிப் பார்த்தேன். பக்கத்தில் என் பத்து வயது மகள் 'வாவ்! ப்யூட்டிபுல்!' என்றாள். என்ன ஓர் ஆச்சர்யம்! இராமர் ப்ளூ உடலில் இருபக்கமும் நேவி ப்ளூ பார்டர். பார்டரில் அழகான போச்சம் பள்ளி டிசைன். உடலெங்கும் புள்ளிகளினால் பிரிக்கப்பட்ட கட்டங்கள். கட்டங்களில் சின்னச் சின்ன டிசைன்கள். உடல் பூராவும் ∴ என்ற வடிவத்தில் புள்ளிகள். வழுவழுப் பான, தரமான பட்டுப் புடைவை கண்ணைப் பறித்தது. உடுத்திச் சென்றபோதோ எல்லோர் நெஞ்சையும் பறித்தது. 'கிரேட்யா உங்க ஹப்பி' என்று சொல்ல வைத்தது.

அது தந்த ஆச்சரியத்தைவிட, என் நட வடிக்கைகளில், கருத்துக்களில் அது ஏற்படுத் திய ஆச்சரியமான மாற்றம் இருக்கிறதே, அதற்காகவே அதை நான் நேசித்துப் போற்றி வருகிறேன். கிராமத்து ஜனங்கள் என்ற என் அலட்சியத்தை அடியோடு களைந்தது மட்டு மின்றி கணவரிடம் என் அணுகுமுறையிலும் மிகுந்த மாற்றத்தை ஏற்படுத்தியது. இப்போ தெல்லாம், டில்லி, பாம்பே, ஆமதாபாத் எங்கு போனாலும் அவர் செலக்ஷன்தான்!

- ராதா ராமனாதன்,
பாண்டிச்சேரி - 8.

## மடிசார கட்டிண்டு....

நான் அப்போது பூனாவில் எம்.ஏ. படித் துக் கொண்டிருந்தேன். என்னுடன் 'க்ளாடிஸ்' என்று ஒரு கென்யா நாட்டுப் பெண் படித்துக் கொண்டிருந்தாள். என்னுடைய சிறந்த தோழி அவள்தான்.

கல்லூரியில், ஒவ்வொரு வருடமும் Traditional Day என்று ஒருநாள் கொண்டாடு வார்கள். அதாவது, ஏதாவது ஒரு பாரம் பரியத்தைச் சார்ந்த உடையை அணிந்து வர வேண்டும். ரொம்ப கோலாகலமான திரு நாள் அது. சில சமயம் மாணவர்கள் மாப் பிள்ளை போல் அலங்காரம் செய்து கொண்டு மாட்டு வண்டியில் வந்திறங்கு வதும் உண்டு.



அதுவரை சேலை அதிகம் கட்டியிராத நான் பட்டுச் சேலை கட்டுவதென முடி வெடுத்தேன். தோழி க்ளாடிஸுக்கும் பட்டுச் சேலை கட்டக் கொடுக்கலாம் என நினைத்து, என் கல்யாணத்திற்கு வாங்கிய ஓர் அருமை யான பட்டுப் புடைவையையும் அவளுக்காக எடுத்து வைத்தேன். அவளுக்குக் கட்டத் தெரி யாததால், அவளை என் வீட்டிற்கே வரச் சொல்லி போன் செய்தேன்.

க்ளாடிஸும் வந்தாள். என் வீட்டுக் கதவைத் தட்டினாள். திறந்தால்... ஆச்சர்யம்... க்ளாடிஸ் புடைவையில், அதுவும், கட்டுவ தற்குக் கஷ்டமான காஞ்சி காட்டன் புடை வையில். ஆச்சரியம்தான்!

கிடுகிடுவென இயல்பான நடையில் உள்ளே வந்த க்ளாடிஸ் சொன்னாள். 'இந்தி யாவில் மொத்தம் 57 புடைவை கட்டும் முறை இருக்கு. ஒவ்வொரு Traditional Day யின் போதும் ஒவ்வொரு முறைல கட்டுவது எனக் குப் பிடிக்கும். உங்கள்ள கல்யாணம் ஆன வங்க கட்டற முறைக்குப் பேரு மடிசார். அதுக்கு உண்டான நீளமான புடைவை உன் கிட்ட இருந்தா கொடு. உனக்குக் கட்டிவிட றேன்..." என்று படபடத்தவள் எனக்கு மடி சார் கட்டிவிட ஆரம்பித்தாள்! நான் ஆச்சரி யத்தில் திறந்த வாயை மூடவில்லை. நீங்கள்...?

ஹன்ஸா, பாளையங்கோட்டை - 2.

திருமண நகைகளுக்காகவே ஒரு கண்காட்சி என்றால் வியப்பாகத்தான் இருந்தது. திருமணத்திற்கான நகைகளே ஒரு கண்காட்சியாகத்தான் மணமகள் கழுத்தில், கையில் மாட்டப்படுகிறது என்னும் போது தனியாக ஒரு கண்காட்சியா? அதில் என்ன விசேஷம் எனத் தலையை நீட்டி உள்ளே பார்த்த போது —

# கல்யாணப் பெண்ணிற்கு





"ஆமாம் விசேஷம்தான். இன்றைய நவீன உலகில் பலரும் தங்கள் பழக்க வழக்கங்களை அறியாமல் இருந்து விடுகிறார்கள். திருமணம் என வரும் போது தங்கள் வழக்கமான நகை என்ன என்று திண்டாடுகிறார்கள். "நீங்கள் தமிழ்நாட்டுக்காரரா? ஆந்திராவா? கர்நாடகாவா? கிறிஸ்தவரா? கேரளாவா? வடநாட்டவரா? குஜராத்தியா? முஸ்லீமா? உங்களுக்குத் தோதாக முகூர்த்த நகைகளை நாங்கள் செட்டாகத் தருகிறோம்" என்கிறார் 'பிரின்ஸ் ஜுவல்லரி'யின் உரிமையாளர் திரு பிரின்ஸ் ஜோஸ்.

"ஒவ்வொரு ஆண்டும் ஒவ்வொரு புதுமைகளைச் செய்து வரும் நாங்கள் இந்த ஆண்டில் - இந்தியாவில் உள்ள பல தரப்பட்ட மக்களுக்காக 'முகூர்த்த ஜுவல் கலெக்ஷன்'களை வித்தியாசமான முறையில் எக்ஸிபிஷனாக அமைத்திருக்கிறோம். இந்த எக்ஸிபிஷன் பிப்ரவரி 15 வரை தொடரும்."

மக்களுக்கும், மற்ற நகைக் கடைகளுக்கும் நிஜமாகவே இந்த 'முகூர்த்த நகைக் களஞ்சியம்' பொருட்காட்சி புதுமையான விஷயம்தான். இந்த ஐடியா எப்படி உரு



# ஒரு கலெக்ஷன்!

வானது? மக்களிடம் வரவேற்பு எப்படி இருக்கிறது?

''வரவேற்பு என்றால் மிக அதிக அளவில் இருக்கிறது. சென்னையில் பலதரப்பட்ட மாநிலத்தவர் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். ஒவ்வொருவருக்கும் அவரவர் கலாச்சாரம் - பாணி இவற்றில் அதிக ஈடுபாடு இருக்கும். பல மாநிலத்தவரும்; மொழியினரும், மதத்தினரும் எங்கள் கடையை முற்றுகையிடும் போது எங்கள் குஜராத்தி தாலி உங்களிடம் இருக்கிறதா? பெங்காலி வளையல் உண்டா? அஷ்ட லக்ஷ்மி ஒட்டியாணம் வேண்டுமே? தமிழ்நாடு தாலிக் கொடி வேண்டும் என கேட்பதுண்டு. ஒவ்வொரு நகைக்காகவும் அவரவர் சொந்த ஊருக்குப் போவது சாத்தியமில்லை. இப்படி ஒவ்வொருவருக்கும் அவரவருக்குத் தேவையான முகூர்த்த நகைகளைக் கேட்டு வரும் போது தான், 'முகூர்த்தக் கலெக்ஷனுக்காக' தனிப்பிரிவையும் அதையே கண்காட்சியாகவும் வைக்கலாமே என்று முடிவு செய்தேன்'' என்கிறார் தி.நகர் பனகல் பார்க் எதிரில் தன் கடையில் இப்படியொரு கண்காட்சியை ஏற்படுத்திய பிரின்ஸ் ஜோஸ்.



தமிழ்நாட்டுக்குரிய முகூர்த்த நகைக் கலெக்ஷன் பிரிவை நமக்குக் காட்டுகிறார். ''முதலில் தாலிக் கொடி. இதில் பார்த்தீர்கள் என்றால் தாலி வாழை சீப்பு, காசு, குண்டு, குழாய் எல்லாம் கோர்த்திருக்கிறோம். கல் அட்டிகை, கல் வளையல், தங்க வளையல், காசு மாலை, தங்கத்தில் ஒட்டியாணம், நெற்றிச்சுட்டி, மாட்டல், கைவங்கி இரண்டு, கம்மல் ஜிமிக்கி, வைரமூக்குத்தி, வைரத்தோடு, அதனுடன் சாவிக் கொத்து, கொலுசு, புடைவை பின் இவற்றையெல்லாம் தங்கத்தில் உருவாக்கி செட்டாக வைத்துள்ளோம். வெள்ளியில் ட்ரே, குத்து விளக்கு, ஊதுபத்தி ஸ்டாண்ட், குங்குமச்சிமிழ், சந்தனகிண்ணம், இதெல்லாம் முகூர்த்த கலெக்ஷன்'' என பிரம்மாண்டமான ஒவ்வொரு நகையையும் காட்டி பிரின்ஸ் அறிமுகப்படுத்திய போது - அவ்வளவு நகைகளையும் வாங்குவதற்கு ஆகும் பணச் செலவையும், குத்து மதிப்பாக கணக்கெடுத்துப் பார்த்துவிட்டு, கேட்டோம்.

**''ஐயா இந்த எக்ஸிபிஷன் கண்ணில் பார்ப்பதற்கும் கேட்பதற்கும் ரொம்ப ஜோர். சுவாரஸ்யமாக இருக்கிறது. இந்த முகூர்த்த கலெக்ஷனை வாங்குவதென்பது மிக வசதி படைத்த மக்களால் மட்டுமே சாத்தியம். உங்கள் முகூர்த்த எக்ஸிபிஷனுக்கு வந்து ஒரு சாதாரண நடுத்தர வர்க்கத்தினர் பார்த்து ஏங்குமளவிற்கு - வாங்குவதற்கு வழி இருப்பதாக தெரியவில்லையே?''**

''நிச்சயமாக வழியிருக்கிறது. நான் உங்களுக்குக் காட்டிய நகைகளை வைத்து அப்படியொரு முடிவுக்கு வராதீர்கள். நீங்கள் பார்த்த முகூர்த்த நகைகள் ஏறக்குறைய 60 சவரன் கொண்டது. ஒவ்வொருவர் பொருளாதாரத்துக்கும் ஏற்ப பிரித்து



வைத்திருக்கிறோம்.

குறைந்தது 10, 15, 20 சவரனி விருந்து- முகூர்த்தக் கலெக்ஷன் ஆரம்பமாகிறது. பலவிதமான பொருளாதார சூழ்நிலையில் உள்ளவர்கள் வருவதால் அவரவர்களுக்குத் தக்கவாறு வைத்திருக்கிறோம். அடிப்படைத் தேவையான நகைகளை மட்டும் செட்டாக்கியிருக்கிறோம்.''

**இவையெல்லாம் மணமகளுக்கான பிரத்தியேகமான நகைத் தயாரிப்புகளா?**

''நிச்சயமாக அப்படித்தான். நாளுக்குநாள் தங்க டிசைன்களில் புதுப் புது டிசைன்களை உருவாக்கிக் கொண்டேயிருக்க வேண்டியிருக்கிறது. காரணம் வருகிற வாடிக்கையாளர், மற்றவர்களை விட மணமகள் யாரும் அணியாத புது விதமான நகைகளை அணிய வேண்டும் என நினைக்கிறார்கள். அதனால் ஆசாரிகளும் வாடிக்கையாளர்களின் எண்ணம் அறிந்து நாங்கள் டிசைன் செய்து தரும் பேப்பர்களை வைத்து மிக நுணுக்கமான கலை வடிவம் கொண்ட நகைகளை உருவாக்குவதில் சளைக்காதவர்களாக இருக்கிறார்கள். பொதுவாக எங்களது இந்த முகூர்த்த கலெக்ஷன்களை இன்று வரை UK, US, கிழக்கத்திய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து கொண்டிருக்கிறோம். அங்குள்ள இந்தியர்கள் இந்த மாதிரி 'செட்' நகைகளுக்கு பெரிதான வரவேற்பு தருகிறார்கள்.''

**கேரளா நகைகளைப் பற்றிச் சொல்லுங்கள்?**

''தாலி சங்கிலி, தாலி - தங்கத்தில் நெக்லஸ், கைவங்கி, தங்கக் கொலுசு, லாங் ஆரம், லாங் செயின், பிளெயின் ஒட்டியாணம் கம்பி வளையல் குறைந்தது ஒரு 12, ஒரு தடி வளையல், குத்துவிளக்கு இவைகள்தாம். ஆந்திராவுக்கும் தமிழ்நாட்டுக்கும் கலாசாரம் ஏறக்குறைய ஒன்றுதான். தாலி மட்டும்தான் மாறுபடும். தமிழ்நாட்டுக்காரர்கள் தாலி சரடு, அல்லது தாலிக் கொடி போடுவார்கள். ஆந்திரக்காரர்கள் அவர்கள் தாலியோடு கறுகுமணி தாலிச் சங்கிலி அணிவார்கள்.''

**''இந்து மணமகளுக்கும் கிறிஸ்தவ மணமகளுக்கும் - அணிவிக்கும் நகைகளில் என்ன வித்தியாசம்?''**

''நிறைய வேறுபாடு உண்டு. கிறிஸ்தவர்கள் பெரும்பாலும் அடுக்கடுக்கான ஆரங்களை அணிய விரும்புவார்கள். கல்யாண நாளில் நிறைய ஆரம் வரிசையாக கழுத்தில் இருக்கும். முன்பெல்லாம் 24 வளையல்களையும் ஒரே டிசைனாக அணிந்து கொள்ளுவார்கள். இப்போது நான்கு நான்கு வளையல்களாகப் பிரித்து வெவ்வேறு டிசைன்களாக வாங்குகிறார்கள். கலெக்ஷனுக்குக் கலெக்ஷனுமாச்சு, வெரைட்டிக்கு வெரைட்டியுமாச்சு. கிறிஸ்துவர்களில் பெரும்பாலும் மூக்குத்தி அணிய மாட்டார்கள். வெட்டிங் ரிங் அவர்களுக்கு விசேஷமானது. அதே மாதிரி தாலியும் கணவரது இனிஷியலோடு தயாரித்து அணியவும், சிலுவை அடையாளமிட்ட தாலியும்







பெரும்பான்மையாக வாங்குவார்கள். கிறிஸ்தவர்களில் மாநிலத்துக்கு மாநிலம் மாறுபடுவதால் ஒவ்வொரு பிரிவினரும் லேசான மாற்றத்தோடு தேர்ந்தெடுப்பதுண்டு. முஸ்லிம் மதத்தினருக்கும் அவர்களுக்கென்று சில பாணி உண்டு. அதன்படியே அவர்களும் நகைகளைத் தேர்வு செய்வார்கள்.''

பேசிக் கொண்டிருக்கும் போது ஒரு குழந்தையை தூக்கி வந்து காது குத்திவிட சொல்ல, பிரின்ஸ் நொடிப்பொழுதில் காது குத்திவிடுகிறார். காது குத்தும் வேலையை மட்டும் பிரின்ஸ் தன்னைத் தவிர யாரிடமும் ஒப்படைப்பதில்லையாம். அப்பாயின்ட்மென்ட் வாங்கியவர்களுக்கு மட்டும் காது குத்துகிறார். இதற்கு அனுபவம் அதிகம் தேவை என்றும், இந்த 'கன் ஷூட்' எனும் நவீன முறையை டாக்டர்கள் பரிந்துரை செய்வதையும் குறிப்பிட்டார்.

**''பாரம்பர்ய பழைய நகைக் கலெக்ஷன் வகைகளும் உங்களிடம் அதிகமாக இருக்கிறது போலிருக்கிறது?''**

''ஆமாம் பலவிதமான 3, 4 தலைமுறைக்கு முந்தைய நகை டிசைன்களை வைத்திருக்கிறோம். நாகரீகமும் ஒரு வட்டம் தானே. பழையவற்றிலிருந்து தானே புதியவை உருவாகிறது. இப்போது நிறைய பேர் பாரம்பர்ய டிசைன் ஜுவல்லரியைக் கேட்டு வருகிறார்கள். அவர்களுக்காகவும் மீண்டும் புதுமையாக அறிமுகப்படுத்த வேண்டும் என்பதற்காகவும் இப்போது டிஸ்பிளே செய்திருக்கிறோம். கலைநயம் மிகுந்த அந்த நகைகளை அழகாக விமர்சித்து ரசித்து ரசனையோடு ஆர்டர் கொடுக்கும் பெண்களும் உண்டு.''

**அது சரி.... தங்க வியாபாரத்தில் எப்போது, எப்படி ஈடுபட்டீர்கள்?**

''நான் எனது 14 வயதிலேயே தங்க வியாபாரத்தைப் பற்றி அறிந்து கொள்ள என் தந்தை எனக்கு ஊக்கம் கொடுத்தார். நான் மூன்றாவது தலைமுறை. ஆனால் நகை. வியாபாரத்தில் எனது குடும்பத்தினர் நுழைந்தது வெகு சுவாரஸ்யமான விஷயம். 'பிரின்ஸ் ஜுவல்லரியின்' பின்னணியில் ஒரு பெண் இருக்கிறார். அவர் என் தந்தை வழிப் பாட்டி. பாட்டியின் நகை ஆர்வம்தான் பிரின்ஸ் ஜுவல்லரியை உருவாக்கியது. அந்தக் காலத்தில் என் பாட்டி தனக்கு வேண்டிய தங்க நகைகளுக்குரிய டிசைன்களை அற்புதமான ஓவியமாக வரைந்து ஆசாரியிடம் கொடுப்பாராம். ஆசாரியும் அவர் விரும்பியபடியே செய்து கொடுப்பாராம். அவர் அணியும் ஒவ்வொரு அணிகலன்களும் அண்டை வீட்டாரின் பாராட்டைப் பெற்றுத் தந்து கொண்டிருந்ததோடு, 'எனக்கும் ஒரு டிசைன் வரைந்து கொடு' என பாட்டியிடம் தங்கத்தைக் கொடுத்து செய்து தரச் சொல்லுவார்களாம். இப்படியே கொஞ்சம் கொஞ்சமாகப் பரவி பாட்டியின் ஆர்வத்தைப் புரிந்த தாத்தா அதையே ஏன் தொழிலாக எடுத்துக் கொள்ளக் கூடாது என யோசித்து எல்லா மாநிலங்களுக்கும் சப்ளை செய்ய ஆரம்பித்து மொத்த வியாபாரத்தில் இறங்கினார். பின்னர் அவர்களுக்கான சிறப்பான ஆசாரிகளால் வியாபாரம் பெருகியிருக்

# பட்டர்ஃபிளை காஸ் ஸ்டவ் இல்லாத சமையலறையா?

உங்களது சமையலறையில் பட்டர்ஃபிளை ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் காஸ் ஸ்டவ்வை அறிமுகப்படுத்துங்கள். சேலம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் செய்யும் அற்புதத்தையும் எரிபொருள் சிக்கனத்தின் மேன்மையையும் அனுபவியுங்கள். தவிரவும் பட்டர்ஃபிளை காஸ் ஸ்டவ்வுகள் துரு ஏறாத ஆற்றல் படைத்தவை. நீடித்து உழைப்பவை. நம்பகமானவை. அத்துடன் அழகான நான்கு மாடல்களில் கிடைக்கின்றன. நாற்பது வருடங்களுக்கும் மேலான அனுபவம் மிக்கவர்களால் உருவாக்கப்பட்டவை. பட்டர்ஃபிளை காஸ் ஸ்டவ்வுகள் தமது வலிமையாலும் பொலிவினாலும் உங்கள் சமையலறையை பளிச்சென்று பிரகாசிக்கச் செய்கின்றன.

IS:4246



Auto Ignition LPG Stove



Single Burner LPG Stove



Friendly LPG Stove



Regular LPG Stove

பிரபல கடைகள் அனைத்திலும் கிடைக்கும்




**பட்டர்ஃபிளை**

ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் காஸ் ஸ்டவ்

insight-1445

றது. அதற்குப் பிறகு அப்பா வியாபாரத்தை எடுத்துக் கொண்டார். அப்பாவுக்கு வெளிநாட்டுத் தொடர்பு அதிகம் என்பதால் வெளிநாடுகளுக்கும் நம்முடைய நகைகளை எக்ஸ்போர்ட் செய்யவும் ஆரம்பித்தார். இடைப்பட்ட காலத்தில் நகைக் கடையையும் நிறுவினார். அப்போதிலிருந்தே கேட்மியம் நகைகளையே வெளிநாடுகளுக்கு அனுப்ப வேண்டியிருப்பதால், பிரின்ஸ் ஜுவல்லரியில் அவ்வகை நகைகளைத்தான் பெரும்பாலும் வைத்திருக்கிறோம்.''

**''கேட்மியம் நகைகளின் விற்பனை நிலை மிக மந்தமாக இருப்பதாகவே கேள்விப்படுகிறோம். இதற்கு மக்களிடம் அதிக வரவேற்பு இருக்கிறதா?''**

''எங்களிடம் 100க்குத் 90 பேர் கேட்மியம் நகைகள் வாங்க வேண்டும் என்ற நோக்கத்தோடு தான் வருகிறார்கள். காரணம் பற்ற வைத்த நகைகளில் நிச்சயமாக மெல்டிங் லாஸ் அதிகமாக இருக்கும். இந்த நகைகளை ஓர் இடத்தில் வாங்கி மற்றொரு இடத்தில் விற்கப் போனால் கோல்டின் இம்ப்யூரிட்டி குறைந்து விடுகிறது. இதனால் தங்கத்தின் மதிப்பீடு குறைந்து பணத்தொகையும் குறைந்து மனக் கஷ்டப்படுவதைக் காட்டிலும் கேட்மியம் நகைகளைத் தேர்தெடுப்பதே நல்லது.''

''சில பெண்கள் யாரிடமும் இல்லாத புதுமையான கலெக்ஷன் தன்னிடம் மட்டும் இருக்க வேண்டும் என்பார்கள். அவர்களுக்காகவும் பிரத்தியேகமான டிஸைன்கள் செய்கிறேன்.''

***அது சரி, பாட்டியின் டிசைன் ஆர்வம்... பேரன் பிரின்ஸிடமும் இருப்பது சாத்தியம் தானே?***

''இந்த மாதிரியான புதிய கலெக்ஷன்களையே கடந்த வருடம் 'டிஸைனர்ஸ் ஜுவல்லர்ஸ் 95' என்று பொருட்காட்சிக்கு வைத்திருந்தோம்'' என்கிறார்.

நகையைப் பற்றி கேட்டுத் தெரிந்து நகரும் வேளையில், நம் கண்ணில் படுகிறார் ஒரு நங்கை.

''இவர் என் மனைவி திருமதி ஷீபா பிரின்ஸ். டிஸைன்களை செலக்ட் செய்வதிலும் கடையில் எனக்குத் துணையாகவும் வாடிக்கையாளர்களுக்கு நகை தேர்வு செய்து, டெலிவிரி கொடுத்து அனுப்பும் வரை உதவியாகவும் இருக்கிறார்.''

மாறிவரும் பெண்களில் - கணவருக்கு ஒத்தாசையாக உதவும் ஷீபா பிரின்ஸ் ஜோஸ் வரவேற்கத் தகுந்தவர்.

**— இலக்கியா**

# வீட்டிலேயே கைவைத்தியம் செய்து கொள்ளலாமே!

அடிக்கடி வாசகிகளிடமிருந்து உடல் நலம் சம்பந்தமாக நிறைய சந்தேகங்கள் கேட்டுக் கடிதங்கள் வருகின்றன. முன்பெல்லாம் பாட்டிமார்கள் அல்லது மூத்தவர்கள் சிறுசிறு நோய்களுக்கெல்லாம் கைவைத்தியமாகச் செய்வார்கள். சரியாகிவிடும். ஆனால் அந்த அரிய மருத்துவக்கலை இப்போது அநேகமாக மறைந்துவிட்டது. சிறிய வாய்ப்புண் என்றால் கூட டாக்டரிடம் போக வேண்டியதாக இருக்கிறது.

எனவேதான் அரிய அந்த வீட்டு வைத்தியக் கலைக்குப் புத்துயிர் அளிக்கும் வகையில் நம் வாசகிகளின் சந்தேகங்களுக்குப் பதிலளிக்குமாறு சித்த மருத்துவ நிபுணர் டாக்டர் கண்ணனிடம் கேட்டோம். ஆயிரக்கணக்கான நோயாளிகளைக் குணப்படுத்தியவர், பல்லாண்டுகளாக இத்துறையில் நிபுணர்; அனுபவசாலி; சித்த மருத்துவ வரலாற்றிலேயே முதன்முதலாக இந்திய ஜனாதிபதிக்கு கௌரவ சித்த மருத்துவராக நியமிக்கப்பட்டவர் எனும் பல பெருமைகளைக் கொண்ட இவர் வீட்டிலேயே எளிய கைவைத்திய முறையில் நோய்களைத் தீர்த்துக் கொள்ளும் முறைகளைச் சொல்ல சம்மதம் அளித்திருக்கிறார்.

இனி கேளுங்கள் டாக்டரை!

என் வயது இருபத்தைந்து. அடிக்கடி ஏதாவது ஒரு நோய் வந்து அவதிப்படுகிறேன். எனக்குப் பொதுவாக எந்த நோயும் வராமல் நல்ல தேக ஆரோக்கியத்துடன் வாழ இயற்கையான சில வழிமுறைகளைக் கூறுவீர்களா?

மதுமதி, திருநெல்வேலி.

பொதுவாக நமது மருத்துவ நூல்கள் மனிதன் நூறாண்டுகள் வாழலாம் எனக் கூறுகிறது. இந்த நூறாண்டுகள் வாழ்க்கையும் நோய் நொடியின்றி நல்ல ஆரோக்கியமான வாழ்க்கை வாழவும் வழிமுறைகளையும் கூறுகிறது. ஆகவேதான் "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என முன்னோர் கூறுகின்றனர்.

சித்தர்கள் நமது வாழ்க்கை



முறைகளையும், உணவு முறைகளையும் கூறும்போது 'ஒருவேளையுண்போன் யோகி'; 'இருவேளை உண்போன் போகி'; 'மூன்று வேளை உண்போன் ரோகி' என்றார்கள். நாம் உணவினை அளவாக உண்டு, அந்த அளவாக உண்பதையும், சத்தாக உண்டு உடலைக் காத்திட வேண்டும். அதேபோல் நீரை நன்றாகக் காய வைத்து அருந்துவதும், தயிராக உண்ணாமல், தயிரில் நன்றாக நீர் சேர்த்து மோராக உண்பதும் நல்லது. கூடிய வரையில் மலச்சலங்களை அடக்காமல் சீராகக் கழிக்கப் பழக்கிக் கொள்ள வேண்டும். ஆண், பெண் உடலுறவு அளவோடு இருத்தல் வேண்டும்.

இன்றைக்கு மருத்துவத் துறையில் முன்னேற்றம் ஏற்பட்டிருந்தாலும் சுற்றுப்புறச் சூழ்நிலை மாசுபட்டு வருகிறது. அந்த மாசினால் வரும் கேட்டிற்கு நாம் ஆளாகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். தற்கால எந்திர வாழ்க்கையினால் நமக்குப் பல்வேறு வகையான நோய்கள் ஏற்பட வாய்ப்புகள் உள்ளன. அவைகளிலிருந்து விடுபட்டு அமைதியான வாழ்க்கை வாழக் கற்றுக் கொள்ள வேண்டும்.

தற்காலத்தில் உடற்பயிற்சி இல்லாததே பலருக்குப் பல நோய்கள் தோன்ற அடித்தளமாக அமைகிறது. ஆகவே ஒவ்வொருவரும் அவசியம் உடற்பயிற்சி செய்ய வேண்டும். யோகப் பயிற்சியும் செய்ய வேண்டும்.

எல்லாவற்றையும் விட தற்காலத்தில் மனத்தைத் தீய வழியில் கொண்டு செல்ல பல வழிகள், சூழ்நிலைகள் இருக்கின்றன. ஆகவே இந்தச் சூழ்நிலைகளைத் தவிர்த்து மனச் சஞ்சலம் இல்லாமல் இருக்க வேண்டும். இவ்வாறெல்லாம் நடந்தால் நீங்கள் நோய், நொடியின்றி நீண்ட ஆரோக்கியமான வாழ்க்கை வாழலாம். உங்கள் வளமான வாழ்வும், ஆரோக்கியமும் உங்கள் கையில்தான் இருக்கிறது.

**டாக்டர் எனக்கு அடிக்கடி முதுகுவலி ஏற்படுகிறது. இதைத் தடுக்க சித்த மருத்துவ முறையில் சில வழி முறைகளைக் கூறுங்கள்.**

**விஜயகுமாரி, பம்பாய்.**

முதுகுவலி ஏற்படப் பல காரணங்கள் உண்டு. பெரும்பாலும் தற்காலத்தில் முதுகுவலி ஏற்பட முக்கிய காரணமாக இருப்பது - தவறான நிலையில் அல்லது முறையில் உட்காருவதே ஆகும். சாதாரணமாக தற்காலத்தில் நவீன நாற்காலி, சோபாக்களின் காரணமாகத் தவறான முறையில் சாய்ந்து உட்காருவதையும், படுப்பதையும் பார்க்கலாம். இதுவே பெரும்பாலான முதுகுவலிகளுக்குக் காரணமாக அமைகிறது.

இதைத் தவிர கயிற்றுக் கட்டில், அதிக கனமான நுரை மெத்தைக் கட்டில் ஸ்பிரிங் கட்டில் இவைகளில் படுப்பது, இடுப்பைச் சுற்றி இறுக்கமாக ஆடை அணிவது, குதிகால் பகுதியில் உயரமான காலணிகளை அணிதல், நீண்ட தூரம் கரடுமுரடான சாலையில் ஸ்கூட்டர் போன்ற இருசக்கர வாகனங்களை ஓட்டுதல், அதிக

---

***வாழைக்காய் வறுவல் செய்யத் தயார் செய்யும்போது மிளகாய்த்தூள் காலி. என்ன செய்வது? அவசரத்திற்கு வீட்டில் இருந்த ரசப்பொடியைப் போட்டு வறுவல் செய்தேன். ருசியும், மணமும் குணமுமாக வெகுஜோராக இருந்தது. அதுமுதல் வாழைக்காய் வறுவல் என்றால் ரசப்பொடிதான்.***

***- விஜயலட்சுமி***





# ஸ்ரீ கந்தசுவாமி

## பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1990

பதிவு அலுவலகம்: 60, சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2. ph: 848917

கிளை அலுவலகம்: 36, ஜீனிஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-600 015. போன்: 459569




### பிக்சட் டிபாசிட்

| 46 நாள் | 3 மாதம் | 6 மாதம் | ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%**

5 வருடங்கள்
ரூ.50,000/-
அதற்கு மேலும்

### PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. 25,000 | 60 மாதம் | ரூ. 70,000 |

### சொத்துக்கள் மீது கடன்

- ☐ வீடு / ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும்.
- ☐ மாத வட்டி ரூ. 1.85 மட்டுமே
- ☐ விரைந்த சேவை.
- ☐ சென்னை மாநகராட்சி எல்லைக்குள் இருக்க வேண்டும்.



### நகைக்கடன்

- ☐ குறைந்த வட்டிக்கு கிடைக்கும்
- ☐ 10 கிராமுக்கு ரூ.3000 வழங்கப்படும்.
- ☐ R.D. கட்டத் தேவையில்லை
- ☐ எந்த சார்ஜும் வசூலிப்பதில்லை



**பாதுகாப்புப் பெட்டக வசதியும் உண்டு.**

## பென்ஷனர் நலத்திட்டம்

**20% P.a** ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேலும் காலம் 1 ஆண்டு வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.



சேர்மன்:
**P. பாலசுப்பிரமணியம்,** B.Sc.,
முதன்மை அறங்காவலர்,
கந்தகோட்டம்,
சென்னை-600 003.
நிர்வாக இயக்குனர்:
பார்க் டவுன் பெனிபிட்
பண்டு லிட்.

இயக்குநர்கள் குழு
R.விவேகானந்தன் B.Com.,
(Chairman : Park Town Benefit Fund Ltd.)
A.சுப்பிரமணியன்
V.சண்முகவடிவு B.A.,
V.விஜயகோபால் B.Com., D.C.P.
M.ராஜேந்திரன்
P.ஏகாம்பரம்

பங்குதாரர்களுக்கு மட்டும்

H.O. Friday Holiday (It is a P.B. Group Concern) B.O. Tuesday Holiday

**புது வருடக் காலண்டர்கள் வந்து விட்டன. பழைய மாதக் காலண்டர்களை ஒரே ஆணியில், ஒன்றன்மேல் ஒன்றாக மாட்டிவிடுங்கள். யாருக்காவது ஏதாவது பொட்டலம் கட்டிக் கொடுக்க, ஒவ்வொன்றாகக் கிழிக்க வசதியாயிருக்கும்.**

**- பார்வதி**



பாரங்களைத் தூக்குவது, சில சமயங்களில் முள்ளந்தண்டில் ஏற்படும் நோய்களாலும் முதுகுவலி ஏற்படும். பொதுவாக முதுகுவலி வராமல் தடுக்க, முறையாக நிற்கவோ, உட்காரவோ பழகிக் கொள்ள வேண்டும். முதுகுவலி உள்ளவர்கள் சமமான தரையில் படுப்பதே நல்லது. படுக்கும்போது ஒருபக்கம் ஒருக்களித்துப் படுக்க வேண்டும். உடலுக்கு அதிர்வு உண்டாக்கக் கூடிய இரு சக்கர வாகனங்கள், ஆட்டோ முதலியவைகளில் பயணம் செய்வதைத் தவிர்க்க வேண்டும். இதைத் தவிர முள்ளந்தண்டில் ஏதேனும் நோயிருந்தால் அதைக் கண்டுபிடித்து அதற்குச் சிகிச்சை செய்து வரவேண்டும். சாதாரணமாக முதுகில் ஏற்படும் வலிகளுக்குச் சித்த மருத்துவ தயாரிப்புகளான பிண்ட தைலம், வாத நாராயண தைலம், மயன தைலம் இவைகளை வெளிப்பிரயோகமாகப் பயன்படுத்த நல்ல குணம் தரும்.

**நான் கல்லூரியில் படிக்கும் பதினெட்டு வயது மாணவி. எனக்கு அடிக்கடி வாயில் புண் ஏற்படுகிறது. இதற்கு நல்ல வீட்டு மருத்துவ ஆலோசனை கூறுங்கள் டாக்டர்?**
**மங்கையர்க்கரசி, நாகர்கோவில்.**

வாய்ப்புண் ஏற்படுவது ஒவ்வாமையின் அறிகுறியே. சில மருந்துகளில் பின்விளைவுகளாலும், வாயின் உட்பகுதியில் உறுத்தலை உண்டாக்குகின்ற மது குடித்தல், புகைபிடித்தல் மற்றும் புகையிலை பாக்கு முதலியவை அடிக்கடி போடுவதனாலும் ஏற்படலாம். இவைகளைத் தவிர சுகாதாரமற்ற உணவு, அதிகக் காரமுள்ள உணவு, ஊட்டச் சத்துக் குறைவு மற்றும் தொற்றுக் கிருமியினாலும் ஏற்படலாம்.

நாம் வாய்ப்புண்ணை அலட்சியமாக நினைக்கக் கூடாது. ஏனெனில் வாய்ப் புண் நீண்ட காலம் ஆறாமல் இருந்தால் அதனை உடனடியாகக் கவனிக்க வேண் டும். நீங்கள் கல்லூரி விடுதியில் தங்கிப் படிக்கிறீர்களா எனத் தெரியவில்லை. ஏனெனில் பெரும்பாலும் கல்லூரி விடுதிகள், ஓட்டலில் சாப்பிடுகிறவர் களுக்கு வாய்ப்புண் அதிகமாக வரலாம்.

வீட்டு மருத்துவ முறையில் அகத்திக் கீரையை ஒரு கைப்பிடி அளவு மென்று தின்றால் சாதாரண வாய்ப்புண் ஆறும். இதே அகத்திக் கீரையைச் சமையலில் உணவாகச் சேர்த்து வந்தாலும் நல்ல பயன் தரும். இதைத் தவிர மணத்தக்காளிக் கீரை, பசலைக் கீரை, பழங்கள், பச்சைக் காய்கறிகள், பால், மோர் இவைகளை அதிகமாகச் சேர்த்து வந்தால் வாய்ப்புண் வராமல் தடுக்கலாம்.

மேலும் வாய்ப்புண்ணுக்கு தேங்காய்ப் பால், இளநீர் இவைகளை அருந்தி வரலாம். வயிற்றில் கிருமிகள் இருந்தால் அவற்றை நீக்கத் தக்க மருந்துகளை அருந்த வேண்டும். புண் சிறிது காலம் நீடித்தால் சித்த மருத்துவ முறையில் தயாரிக்கப்பட்ட சில மருந்துகளையும் குக்கில் வெண்ணெய் என்ற மருந்தைப் புண்ணில் தடவி வரலாம். தங்களுக்கு ஏற்பட்ட வாய்ப்புண்ணின் காரணமறிந்து அதற்கேற்றாற்போல் சிகிச்சை செய்து கொள்ளவும்.

# பொங்கித் தழைக்கும் உறவு!
# ஓங்கிச் செழிக்கும் வளமை!

எமது சிறப்பு டெபாசிட் சேகரிப்பில்
முதலீடு செய்வீர்
(15.1.96 முதல் 13.4.96 வரை)



வாடிக்கையாளர்களை மையமாகக் கொண்ட
ஷாஸன் ஃபைனான்ஸின் திட்டங்கள் :

**குமுலேடிவ் டெபாசிட் திட்டம்**

| காலம் | ஆண்டு வட்டி | ரூ.2000/- முதலீட்டுக்குத் திரும்பக் கிடைக்கும் தொகை | வருமானம் (%) |
|---|---|---|---|
| 12 மாதங்கள் & 1 நாள் | 15% (மாதாந்திரக் கூட்டு வட்டி) | 2322/- | 16.07 |
| 24 மாதங்கள் & 1 நாள் | | 2695/- | 17.37 |
| 36 மாதங்கள் | | 3128/- | 18.80 |
| 48 மாதங்கள் | | 3631/- | 20.38 |
| 60 மாதங்கள் | | 4215/- | 22.14 |

**ஃபிக்ஸட் டெபாசிட் திட்டம்**

| காலம் | ஆண்டு வட்டி | குறைந்த பட்ச டெபாசிட் தொகை (ரூ.) | வட்டி வழங்கும் கால இடைவெளி |
|---|---|---|---|
| 12 மாதங்கள் & 1 நாள் | 15% | 2000/- | காலாண்டு |
| 24 மாதங்கள் & 1 நாள் | | 5,000/- | மாதா மாதம் |
| 36 மாதங்கள் | | | |
| 48 மாதங்கள் | | | |
| 60 மாதங்கள் | | | |

## எமது டெபாசிட் திட்டங்களின் சிறப்பம்சங்கள்

- பணம்/விண்ணப்பம் எங்களிடம் வந்து சேர்ந்த நாள் முதலாக வட்டி அளிக்கப்படும்.
- ரூ.5000மும் அதற்கு மேலாகவும் உள்ள டெபாசிட்களுக்கு மாதாந்திர வட்டிக்கான வார்சோலைகள்.
- முன்னதாகவே வழங்கப்படுகின்ற, பின் தேதியிட்ட ஒரு முழு நிதியாண்டிற்கான வட்டி வாரன்டுகள்.
- டிராஃப்டின் மீதான கமிஷன் தொகை திருப்பியளிக்கப்படுதல்.
- வெளியூர் முதலீடுகள் திருப்பியளிக்கப்படும்போது டிராஃப்டாகக் கொடுக்கப்படுதல்.

*ஷாஸன் ஃபைனான்ஸிற்கு வருகை தாருங்கள். பங்கு வெளியீட்டின் தேவையைப்போல் 59 முறை கூடுதலாக மக்களின் ஆதரவைப் பெற்றது ஷாஸன் ஃபைனான்ஸ். அசலைத் திருப்பிக் கொடுப்பதிலும் உரிய நேரத்தில் வட்டி வழங்குவதிலும் போதிய பாதுகாப்பிற்கு CARE நிறுவனத்தாரின் சான்று மதிப்பீடு பெற்றுள்ளது.*



## ஷாஸன் ஃபைனான்ஸ் லிமிடெட்

**நிர்வாக அலுவலகம் :** 31, வெங்கடநாராயணா ரோடு, பழனி டவர்ஸ், 3வது மாடி, தி.நகர், சென்னை – 600 017. போன் : 4344849, 4348972, ஃபேக்ஸ் : 4346349.
**கிளை அலுவலகம் :** 2A, மாளவியா சாலை, ராம் நகர், கோயம்புத்தூர் – 641 009.
**டெபாசிட் மையம் :** 2, துரைசாமி ரோடு, தி.நகர், சென்னை – 600 017. போன் : 4348930, 4348931.

Image: 1453

**வாடிக்கையாளரின் திருப்தியே எமது முயற்சியின் குறிக்கோள்**

சட்டபூர்வமான ஃபிக்ஸட் டெபாசிட் விளம்பரம் 11.1.96 தேதியிட்ட 'பிசினஸ் லைன்' பத்திரிகையில் வெளியிடப்பட்டுள்ளது.



வழங்குகின்றோம் சஹேலி♥. பக்க விளைவுகளிலிருந்து முழு பாதுகாப்பு தரும். பெண்களுக்கான முதல் நான்ஸ்டீராய்டல் கருத்தடை மாத்திரை. வாரம் ஒருமுறை பயன்படுத்தும் எளிய முறை. குமட்டல், தலைவலி மற்றும் எடை கூடுதல் ஆகிய கவலைகளிலிருந்து உங்களுக்கு விடுதலை தரக்கூடிய மாத்திரை.

ஏன் பக்க விளைவுகளை உண்டாக்குவதில்லை?

கருத்தடை மாத்திரையான சஹேலி, கடந்த 22 ஆண்டு காலமாக ஆராய்ச்சியில் ஈடுபட்ட லக்னோவில் உள்ள 'சென்ட்ரல் டிரக் ரிசர்ச் இன்ஸ்டிடியூட்'டின் (Central Drug Research Institute) தயாரிப்பாகும்.

சஹேலி நான்ஸ்டீராய்டல் என்பதால் உடலை பாதிப்பதோ அல்லது எந்தவித மாற்றத்தை ஏற்படுத்துவதோ இல்லை. இது செனைப்படுத்தப்பட்ட பெண் கருவானது, கருப்பையில் தங்கி கருத்தரிப்பு நடைபெறுவதை தடுக்கின்றது. சஹேலி, உங்களுக்குத் தேவையான அனைத்து பாதுகாப்புகளையும், பக்க விளைவுகள் இல்லாமலேயே தருகின்றது.

# கவலையில் இருந்து விடுதலை




வாரம் ஒருமுறை மட்டும்தானா?"

முதல் மாத்திரை மாதவிலக்கின் முதல் நாளில் உட்கொள்ளப் படவேண்டும்.

* முதல் மூன்று மாதங்களுக்கு சஹேலி வாரம் இருமுறை உட்கொள்ள வேண்டும். நான்காம் மாதத்திலிருந்து வாரம் ஒருமுறை உண்டால் போதும். மருந்து உட்கொள்ளுவதற்கான முறை குறிப்புகளை படித்து, இதனை எளிதாக பின்பற்றலாம்.

குழந்தை வேண்டும் என நீங்கள் முடிவு செய்யும்போது, சஹேலி பயன்படுத்துவதை நிறுத்தி விடவும். எனவே நீங்கள் எப்போது விரும்புகிறீர்களோ, அப்போது கர்ப்பம் தரித்துக் கொள்ளலாம். மேலும், நீங்கள் விரும்பும் வகையில், இடைவெளி விட்டு குழந்தைகள் பெற்றுக் கொள்ளலாம்.

சஹேலி — பெண்ணின் மிகச்சிறந்த தோழி.

மேலும் விபரங்களுக்கு அணுகவும்:

மெடிக்கல் புராடக்ட்ஸ் டிவிஷன்
**இந்துஸ்தான் லேடெக்ஸ் லிமிடெட்**
தபால் பெட்டி எண் 1164,
கிண்டி, சென்னை - 600 032.




♥ சஹேலியில் உள்ள மருந்தின் பெயர்

சென்ட்குரோமன்
வாரம் ஒரு முறை*

# ஒற்றைத் தலைவலி குணமாகுமா?

**நரம்புக் கோளாறுகளை, சில சமயம் பேச முடியாமல் போவதையும் கூட ஹோமியோபதி மருத்துவத்தால் குணப்படுத்த முடியும் என்கிறார் டாக்டர் ஞானசம்பந்தம்–**

**? எந்த மாதிரியான நரம்புக் கோளாறுகளை ஹோமியோபதி மருந்திலே குணப்படுத்தலாம்?**

! சிலருக்கு முகத்தின் ஒருபக்கம் செயல் இல்லாமல் போகலாம். கைகால்கள் இயங்காமல் இருக்கலாம். கண் இமையை மேலே தூக்க முடியாமல் இருக்கலாம். பேசமுடியாமல் போகலாம். இந்த வாத நோய்கள் குணமாகும். ஒற்றைத் தலைவலி, முகவலி, ஜன்னி, கழுத்து வலி, இடுப்பு வலி போன்ற பெயர் சொல்லத் தெரியாத வலிகள் கூட குணமாகும். நரம்புத் தளர்ச்சியினால் ஏற்படுகிற கைகால் நடுக்கம், இளமையில் முதுமை போன்றவற்றிற்கும் நல்ல குணம் கிடைக்கும்.

**? முகவாதம் ஏன் ஏற்படுகிறது?**

! முக நரம்பு பாதிக்கப்பட்டால் முகத்தில் ஒரு பக்கம் இயங்காமல் போய்விடும். சிலர் பஸ், கார், இரயில்கள் பயணம் செய்யும் போது ஜன்னல் ஓரமாக அமர்ந்திருப்பார்கள். குளிர்ந்த காற்று வேகமாக முகத்தில்படும் போது முக நரம்பு பாதிப்பு ஏற்பட்டு முகவாதம் ஏற்படலாம். மழையில் நனைந்தாலோ, இரவில் மொட்டை மாடியில் படுத்தால் கூட சிலருக்குத் தோன்றி இருக்கிறது. முகநரம்பில் ஏற்படும் சிறு கட்டிகள் நோய் கிருமி தாக்குதலினால் கூட ஏற்படலாம்.

முகம் ஒருபக்கமாக இழுத்துக் கொண்டுவிடும். மரத்துப்போய் எந்த உணர்ச்சியும் இல்லாமல் இருக்கும். எச்சில் தானாக ஒழுகும், சாப்பாடு ஒருபக்கமாக தள்ளிக் கொண்டு விடும் கண் இமையை மூடமுடியாது. கண்களில் நீர் வடியும்.

முகவாதம் (BELL'S PALSY) ஏற்பட்டவுடன் சிகிச்சை பெற்றால் ஓரிரு வாரங்களில் குணமாகும். நாட்பட்ட முகவாதம் குணம்பெற சில மாதங்கள் ஆகும்.

**? சிலருக்குக் கைகால்கள் இயங்காமல் போய் விடுகிறது? இதை குணமாக்க முடியுமா?**

! பக்கவாதம் (HEMIPLEGIA) ஏற்பட்டால் உடம்பின் ஒருபக்கம் செயல் இல்லாமல் போகும். கை கால்கள் இயங்காது. மூளையில் கட்டி, இரத்தக் கொதிப்பு, தலையில் அடிபடுதல் ஆகியவை பக்கவாதம் ஏற்படக்காரணம்.

மூளைகட்டிகளால் ஏற்படும் பக்கவாதம் மெதுவாக ஆரம்பிக்கும் கை கால்களில் மரமரப்பு, செயலாக்கமின்மை படிப்படியாக தோன்ற ஆரம்பிக்கும். ஆனால் இரத்தக் கொதிப்பால் ஏற்படும் பக்கவாதம் திடீரென்று ஏற்படும். இரத்த கொதிப்பு இருப்பவர்கள் திடீரென்று மயக்கம் போட்டு விழுவார்கள். மயக்கம் தெளிந்த பின் கை கால்கள் இயங்காமல் போகலாம். மூளையில் உள்ள இரத்தக் குழாய்கள் வெடிப்பதால் அல்லது கொழுப்புக்



கட்டிகள் அடைப்பதால் இரத்த ஓட்டம் தடைபட்டு பக்கவாதம் ஏற்படுகிறது. உடனடி அவசர சிகிச்சை ஆங்கில மருத்துவத்தில் தான் உள்ளது. ஆனால் மீண்டும் நரம்புகளின் செயலாக்கம் முழுமையாக பெற்று நடக்க ஹோமியோபதி மருந்துகள் ஆச்சர்யப்படத்தக்க வகையில் குணம் தரும். சில நாட்கள் படுக்கையில் தங்க வேண்டியிருக்கும்.

நாம் நாற்பது வயதுக்குப்பின் மருத்துவரிடம் காட்டி இரத்த அழுத்தம் சீராக இருக்கிறதா என்று பார்த்துக் கொள்வது நல்லது. இரத்தக் கொதிப்புக்குக் காரணமான புகை பிடிக்கும் பழக்கம், மதுப்பழக்கம் போன்றவைகளை அறவே நீக்க வேண்டும்.

மீன் முட்டை..., மாமிசம் எண்ணெய்ப் பதார்த்தங்கள் குறைக்க வேண்டும், சர்க்கரை நோய் இருந்தால் "எனக்கு எந்தத் தொந்தரவும் இல்லையே" என்று அலட்சியப்படுத்தக் கூடாது. நன்கு சிகிச்சை பெற வேண்டும்.



• சிகிச்சைக்குமுன்...



• சிகிச்சைக்குப்பின்....

சிலருக்குக் இமை மூடியபடி (PTOSIS) இருக்கும். சிலரால் குரல்வளை நரம்பு பாதிப்பினால் (VOCAL CORDPARALYSIS) பேச முடியாது. முழுங்க முடியாது. சிறுநீரை சிலரால் கன்ட்ரோல் செய்ய முடியாது. இது போன்றவைகளும் குணமாகும்.

**? சிலருக்கு எப்போதும் ஒற்றைத் தலைவலி, ஆயிரம் சிகிச்சை செய்தும் பலனளிக்காது. இது ஏன்?**

! ஒற்றைத் தலைவலி (MIGRAINE) ஏற்பட முக்கிய காரணம் மூளைக்குச் சரியானபடி இரத்தம் கிடைக்காமல் போகலாம். நரம்புக் கோளாறுகளால் கூட ஏற்படலாம். சிலருக்கு முகத்தில் எப்போதும் வலி ஏற்பட்டு தலைவலிக்கலாம். சிலருக்குக் காரணம் ஏனென்று தெரியாத தலைவலியைக் கூட குணப்படுத்தி இருக்கிறேன். தலைவலி இருப்பவர்கள் மதுப்பழக்கம், பொடிப் பழக்கம், வாசனை திரவியங்கள் தவிர்ப்பது நல்லது.

**? சிலர் கழுத்திலே 'காலர்' போட்டு இருக்காங்க. இது ஏன்?**

! நமது கழுத்து எலும்புக்கு இடையிலிருந்து தான் கைகளுக்கு நரம்புகள் வருகின்றன. எலும்புத் தேய்மானம், சவ்வுத் தேய்மானம் போன்றவை நரம்பை அழுத்திப் பிடிக்க ஆரம்பித்து முதலில் கழுத்து வலி (CERVICLE SPONDYLISIS) அல்லது கைகளில் வலி தோன்றுகிறது. வலி மின்சாரம் பாய்வது போல் இருக்கும். குத்தல் குடைச்சலும் ஆரம்ப காலத்தில் இருக்கும்.

**? சிலர் எப்போதும் இடுப்பு வலி இருக்கின்றது என்று சொல்கிறார்கள் இது ஏன்?**

! இடுப்பு வலி, மலச்சிக்கல், வெள்ளைபடுதல் போன்ற தொந்தரவுகள் இருந்தால் இருக்கலாம். கழுத்து எலும்பைப் போலவே, முதுகு எலும்பும் நரம்பை அழுத்திப் பிடித்தால் இடுப்பு வலி எப்போதும் இருக்கும். சில சமயங்களில் எலும்புகளுக்கு இடையில் உள்ள குருத்தெழும்பு விலகி (DISCPROLAPSE) நரம்பை அழுத்திப் பிடிக்கும். உள்ளங்கால் வரை கூட வலி செல்லும்.

**? சிலர் நன்றாக சாப்பிட்டேன் ஆனால் எப்பவும் அசதியாக இருக்கு நரம்புத் தளர்ச்சி என்று சொல்கிறார்கள், இது ஏன் ஏற்படுகிறது?**

# சிலைவடிவம் பேசுதடி...
# என் சிந்தை மயங்குதடி

தில்லை விளாகம் ஸ்ரீ கோதண்டராமர் திருக்கோயில். நாகப்பட்டினம் ஜில்லா திருத்துறைப்பூண்டி அருகே உள்ள எளியதோர் சிறு கிராமம். அதன் வடக்கே வேதாரண்யமும் வங்காள விரிகுடாவும் அமையப் பெற்ற தலம் இது. பஞ்ச லோகத்தினாலான ஸ்ரீ கோதண்ட ராமரின் திருமேனி, சீதா பிராட்டியார், தம்பி இலக்குவன், அநுமன் ஆகியோருடன் நின்ற திருக்கோலத்தில் அற்புதமாக வடிக்கப்பட்டுள்ளது. விக்கிரகங்களின் வனப்பு காண்போரை செயலிழக்க வைக்கும் ஒரு புதிய அனுபவம். உயிருள்ளவையோ என்று வியக்கும் வகையில் மனித உடற்கூறுடன் ஒத்திருக்கும் இந்த விக்கிரகங்கள் அற்புதமான அழகு படைத்தவை. ஸ்ரீராமர், பிராட்டியார், இலக்குவன், அநுமன் ஆகியோரது கையிலும் காலிலுமுள்ள பச்சை நிற நரம்புகள், விரலிலுள்ள ரேகைகள், கைகால் நகங்கள், மற்றும் ரோமம் படிந்த அநுமனின் படிவம் அனைத்துமே சிற்பத்திறனின் சிறப்பிற்குச் சான்றாக அமைந்துள்ளன. கைகால் விரல்கள் தீர்க்கமாகவும் தனித்துத் தெரியும்படியும் செதுக்கப் பட்டுள்ளன. ஒவ்வொரு விக்கிரகத்தின் முகபாவத்திலும் சிற்பியின் கலைநயம் மிளிர்கிறது. ஸ்ரீராமன் கானகம் செல்லுமுன் அவனது தாய் கௌசலை இடது மணிக்கட்டில் கட்டிய ரக்ஷாபந்தன், இடது முட்டின் கீழே கட்டப்பட்டுள்ள ரக்ஷை, எழுத்துக்களுடன் கூடிய வில் முதலியன காண்போர் மனத்தைக் கொள்ளை கொள்கிறது. இலக்குவனின் முகத்தில் அலுப்பு தெரிகிறது. அநுமன் மெலிந்து அரிதாகக் காணப்பெறும் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகிறார். பதினான்கு வருட வனவாசத்தின்போது பட்ட துன்பக் கணங்களையும் தான் வடித்த சிலையிலே படிய வைக்கவே சிற்பி இவ்வாறாக அமைத்தான் போலும். ராமன் மஹாவிஷ்ணுவின் அவதாரமாக இருந்த போதிலும் தன்னிடமிருந்த தெய்வ சக்தி எதையும் பிரயோகிக்காமல் மனிதனைப் போன்றே வாழ்ந்தார் என்ற உண்மையை சிற்பத்தில் கொண்டுவர மிகுந்த சிரத்தை எடுத்துக் கொண்டுள்ளார் சிற்பி. வாழ்க்கைப் போராட்டத்திலே மனிதனுக்கு வேண்டுவது தர்மமெனும் ஆற்றலே என்ற கருத்தை மனிதனுக்கு எடுத்துரைப்பதே இது. 1860 ஆம் ஆண்டில் இந்தச் சிலைகள் அம்பலக் குளம் என்ற இடத்தில் கண்டெடுக்கப்பட்டன. 1892ஆம் ஆண்டு அதே இடத்தில் ஒரு வனப்பு மிக்க நடராஜர் சிலையும் கண்டெடுக்கப்பட்டு அதற்கென ஒரு தனிக் கோயிலும் கட்டப்பட்டது. இவ்வாறாக, ராமர் கோயிலும் நடராஜர் கோயிலும் ஒன்றையொன்று நோக்கிய வண்ணம் அமையப் பெற்று சிதம்பரத்தைப் போன்ற தனிச் சிறப்பைப் பெறுகிறது தில்லை விளாகம். கால ஓட்டத்திலே இத்தகைய முக்கியமான கோயில்கள் பராமரிப்பற்றுப் போய்விட்டாலும் இன்றைக்கும் என்றைக்கும் ஏற்புடையதாக இருக்கின்றன. ஹார்வெஸ்ட் தன்னலமற்ற வழியிலே இவற்றை வெளிக் கொணரும் பணியினைச் செய்து வருகிறது. இது போன்ற வரலாறுகளை எழுதி அனுப்பினால் ஹார்வெஸ்ட் அவற்றை எந்தவித மத வேறுபாடுமின்றி வெளியிட தயாராக உள்ளது.






Insight-1368

தி. நகர் : 19, வியாசர் தெரு, (வடக்கு உஸ்மான் ரோடு அருகில்), சென்னை – 600 017.
போன் : 8253597, 8281192.

**கிளைகள் : சென்னை : ஆழ்வார்பேட்டை** : போன் 4991552, 4992231, 4991056. **ஜார்ஜ் டவுன்:** போன் 5227891. **அண்ணா நகர்** : ரூம் நெ. 4, முதல் மாடி, V.S.D. பிளாசா, AA1, 2ஆவது அவென்யூ (ரவுண்ட் டானா அருகில்), **திருவான்மியூர்** : போன் 411264. **கோயம்புத்தூர்** : 444089 **பெங்களூர்** : போன் 3310529. **பம்பாய்** : போன் 2656965, 2656970. **செகந்திராபாத்** : போன் 846669. **புதுடெல்லி:** போன் 6478781/82. **உறுப்பினர் சேவை மையங்கள் : சென்னை : நங்கநல்லூர்** – திரு K. விஜயராகவன், போன் 2343970, **குரோம்பேட்டை** – திரு P.V. சாம்பசிவன், போன் 402708, **புதுக்கோட்டை** – திரு K.S. சேவகமூர்த்தி, போன் 20440, **திருச்சி** – திரு R. ராஜாராம், போன் 468726. **காக்கினாடா** – திரு V.V. கிருஷ்ணாராவ், போன் 71396.

இந்திய அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட ஒரு நிதி நிறுவனம். ஸ்தாபிதம் 1967 எங்கள் சேவை உறுப்பினர்களுக்கு மட்டுமே.

**ஸ்ரீ வீர கோதண்டராமரின் வண்ணப்படத்தை இலவசமாகப் பெற, எங்களுக்கு எழுதுங்கள்.**



உ
லாபம்

ஹார்வெஸ்ட்

நிதி அந்தஸ்து

உறுதியான
தொழில் உறவுகள்

பாதுகாப்பே
எங்கள் வலிமை

அக்கறையுடன்
சேவை

ஒவ்வொரு
செயலிலும் நேர்மை

முழுமையான
திட்டங்கள்

தேவைக்கேற்ப
திட்டங்கள்

உறுப்பினர்
சேவை மையங்கள்

வயது முதிர்ந்தோர்
சங்கம்

மதிப்பைப் போற்றும்
ஈடுபாடு

நல்லறிவுடன்
நாணயம்

வாருங்கள்...
முற்றிலும் வேறுபட்ட
சிறந்த சேவையைப்
பெறுங்கள்

! வயதானால் நரம்புத் தளர்ச்சி ஏற்படுவது இயற்கை. மதுப்பழக்கம், போதை மருந்துகள் நரம்புத் தளர்ச்சியை விரைவாக உண்டாக்கும். கைகால்கள் நடுக்கம் ஏற்படும். பேனா பிடித்து எழுத முடியாது. எதிலும் தடுமாற்றம் இருக்கும் தற்கால இளைஞர்கள் முறையற்ற பாலுணர்ச்சி தீயபழக்கங்களால் நரம்புத் தளர்ச்சியை ஏற்படுத்திக் கொள்கின்றனர். ஆண்மை மீது சந்தேகம் கொண்டு திருமணமே வேண்டாம் என்று தள்ளிப் போடுகின்றனர். தங்கள் சந்தேகத்தைத் தெளிவுபடுத்த விந்தணு பரிசோதனை செய்து பார்க்கின்றனர். 60 மில்லியனுக்குக் குறைவாக இருந்தால் மிகவும் பயந்துவிடுகின்றனர். இந்தப் பயமே நாளடைவில் மூளையின் அடிப்பாகத்தில் உள்ள பிட்யூட்டரி சுரப்பி நன்கு வேலை செய்யாமல் தடுத்து விடுகிறது. விந்தணு உருவாகாத நிலையில் மலட்டுத்தன்மை ஏற்படுகிறது.

சிலருக்கு முகபாவனை இருக்காது. வார்த்தைகளை அளந்து பேசுவார்கள். நடந்து செல்லும் போது 'நில்' என்ற சொன்னால் உடனடியாக நிற்க முடியாது. நான்கு அடி எடுத்து வைத்துதான் நிற்பார்கள். இது மூளையின் நடுப்பகுதி பாதிப்பால் உண்டாகிறது. இந்த "பார்கின் சோனிஸம்" (PARKINSONISM) நோய்க்கு மருந்துண்டு.

சிலர் எப்போதும் கை கால்களை ஆட்டிக் கொண்டு இருப்பார்கள். சிலர் படுக்கையில் எழுந்து சில நிமிடங்களில் மிகவும் சோர்ந்து விடுவார்கள். பேச்சு குறைந்து கொண்டே வரும். இமைகள் மூடிக் கொள்ளும். இது ஒரு வித்தியாசமான தசை சோர்வு நோய். ஒரு நரம்பு முடிச்சிலிருந்து அடுத்த நரம்பு முடிச்சுக்கு இரசாயனப் பொருட்கள் செல்ல முடியாமல் உணர்வுகள் தடைபட்டு, கழிவுகள் தேங்கி சோர்வை உண்டாக்கும். இந்த நோய்க்குக் குணமே இல்லையே என்ற ஆதங்கத்தை நான் பலருக்கு முழுமையாக போக்கியிருக்கிறேன்.

**? சிலருக்குத் தோலில் நரம்பு கட்டி வந்து விட்டது என்று சொல்றாங்க இதை அறுவை சிகிச்சை செய்துதான் குணப்படுத்த முடியுமா?**

! உடல் முழுதும் பட்டாணி அளவில் சிறுசிறு முடிச்சுகளாக நரம்புக் கட்டிகள் தோன்றும். ஒரு கட்டியாக இருந்தால் ஆபரேஷன் செய்துக்கலாம். நரம்புக் கட்டிகள் உடல் முழுதும் இருப்பதை மருந்துகள் மூலம் தான் குணப்படுத்த முடியும். எந்த மருத்துவ துறையிலும் இல்லாத அதிசயமாக ஹோமியோபதி மூலம் நரம்புக்கட்டிகளை குணமாக்கிக் காட்டலாம்.

**? சிலர் கை கால்களில் எரிச்சல் வருகிறது என்று சொல்கிறார்களே?**

! ஊட்டச்சத்து குறைவு. சர்க்கரை வியாதி இருந்தால் கை, கால்கள் எரிச்சல் இருக்கும். குத்தல் குடைச்சலாக இருக்கிறது என்பார்கள்.

**? காக்காய் வலிப்பு ஏன் வருகிறது இதை குணமாக்கவே முடியாதா?**

! காக்காய் வலிப்பு ஏற்பட பரம்பரை ஒரு காரணம். மூளையில் கட்டிகள் தோன்றினாலும் வரலாம். சிலருக்கு என்ன காரணம் என்றே அறியமுடியாது. குழந்தைப் பருவத்தில் வலிப்பு ஏற்பட்டால் எங்கள் சிகிச்சை மூலம் முழுமையாக குணப்படுத்தியுள்ளேன். பெரும்பாலும் குழந்தைகளுக்குக் காய்ச்சல் வந்து ஜன்னி வந்தால் (FEBRILE FITS) தொடர்ந்து மருந்து சாப்பிடு என்று சொல்கிறார்கள். நரம்புகளின் செயலாக்கத்தை நிறுத்தும் (NARCOTICS AND SEDATIVES) மருந்துகளை நீண்ட நாள் பயன் படுத்தக் கூடாது. இதனால் கூட நரம்புத் தளர்ச்சி ஏற்பட்டுவிடும்.

காக்காய் வலிப்பு பெரியவர்களுக்கு இருந்தால் சில சமயங்களில் ஆங்கில மருத்துவரையும் நாட வேண்டி இருக்கும். படிப்படியாக ஜன்னி வருவதை நிறுத்தலாம்.

நரம்பு சம்பந்தமாக ஹோமியோபதி வைத்தியம் பற்றி அறிய விரும்புபவர்கள் ஈரோடு அரசு மருத்துவமனைக்கு எதிரிலுள்ள என்னுடைய கிளினிக்கில் வார நாட்களிலும், சனிக்கிழமைகளில் சென்னை இராயப்பேட்டை 94, வாயிட்ஸ் ரோடிலுள்ள சிவா மருத்துவமனையிலும் என்னைச் சந்திக்கலாம்.

**- யோகம்**

---

**முள்ளங்கி, பீட்ரூட், காரட் போன்ற இங்கிலீஷ் காய்கறிகளைப் பிடிக்கா விட்டால் அதனுடன் ஒன்றிரண்டு உருளைக் கிழங்கு போட்டு செய்ய, கேட்டு வாங்கிச் சாப்பிடுவார்கள்.**

**— பூர்ணிமா**



# பெண்களே இளப்பமாகப் பார்ப்பதுண்டு!

கேடரிங் தொழில் அண்மையில் மிகப் பிரபலமாகி வருகிறது. மருத்துவ, பொறியியற் கல்லூரிகளில் சேருவதற்கு ஆர்வம் காட்டும் அளவிற்கு இன்று கேடரிங் கல்லூரிகளிலும் சேர ஆர்வம் காட்டுகிறார்கள். இதற்குக் காரணம் இத் தொழிலில் கிடைக்கக்கூடிய ஆத்ம திருப்தியும், ஆதாயமும்தான். "ஏபிஎல் கேடரர்ஸ்" மற்றும் சென்னை 'மெலோடி' திரையரங்கின் எதிரே உள்ள டிட்-பிட்ஸ் உணவகத்தின் உரிமையாளருமான திருமதி லீலா பத்மநாபன்தான் பல துறைகள் மாறி இப்போது உணவுத் துறைக்கு வந்தது பற்றிக் குறிப்பிடுகிறார்.

"உண்மையில், இத்துறைக்கு வந்து இரண்டு வருடங்களில் ஓரளவிற்கு வெற்றியும் பிரபலமும் அடைந்து வருவது என் வாழ்வில் ஒரு திருப்பம் என்றே கூறலாம்.

எம்.ஏ. பட்டப் படிப்பு முடிந்தவுடன் ஆங்கில விரிவுரையாளராக இருந்த ஒரு வருடத்திற்குள் திருமணம் நடந்து விட்டபடியால் அந்த வேலையை ராஜினாமா செய்யும்படியாயிற்று. கணவர் போர்க்கப்பல்களில் 'ராடர்' நிறுவும் பணியில் இருந்ததால் இந்தியத் துறைமுக பட்டினங்கள் அனைத்திலும் வசிக்கும் சந்தர்ப்பங்கள் ஏற்பட்டதும் அந்தந்த ஊர்களின் உணவு வகைகளையும் ஒரு கை பார்த்ததும் இப்போது எனக்குப் பயன்படுகிறது.

மூன்று குழந்தைகள் ஆன பின்பும் தாயார் ஊட்டி விடும் செல்லக் குழந்தையாக இருந்த நான் சந்தர்ப்பவசமாக 'பாஸ்ட்ஃபுட்' கிளை ஒன்று ஆரம்பிக்க நேர்ந்தது. அவர்கள் ஆரம்பிக்கும் போது ஒரு விலையும் ஆரம்பித்த ஒரு மாதத்திற்குள் விலையேற்றமும் செய்ய ஆரம்பித்ததால் அதை விடும்படி ஆயிற்று.

மேலும் நாங்கள் ஆரம்பித்த இடத்தில் சைவ உணவுக்காரர்களே அதிகமாக இருந்ததால் அசைவத்தை சைவ ஓட்டலாக நடத்த ஆரம்பித்தோம். அனுபவக் குறைவு காரணமாகவும் அடிக்கடி அட்வான்ஸ் வாங்கி ஓடி விடும் வேலைக்காரர்களின் காரணமாகவும் தொழிலில் நஷ்டமேற்பட்டது. கொஞ்சமில்லை சுமார் நான்கு லட்சம்.

இவர்களை வைத்துக் கொண்டு கஷ்டப்படுவதை விட நாமே சமைப்பது மேல் என்ற முடிவிற்கு வந்தேன். இதனால் சிக்கனமாக இருக்க முடிவதுடன் சுவையாகவும் செய்ய முடிகிறது. சர்வீஸிற்கு இரண்டு பையன்களும் கட்டிங், கிளீனிங்குக்கு இரண்டு பையன்களை



வைத்துக் கொண்டு ஆரம்பித்த தொழிலில் இன்று என்னிடம் 10 பேர் வேலை செய்கிறார்கள்.

பல பார்ட்டிகளில் பங்கேற்ற நான் இன்று பார்ட்டிகளுக்கு சப்ளை செய்கிறேன். அதை மேற்பார்வையிட செல்லும் போது நாம் ஒதுக்கப்படுவது போல ஓர் உணர்வு ஆரம்ப காலத்தில் தோன்றியது உண்டு. சில பெண்கள் இளப்பமாக பார்ப்பதும் உண்டு. ஆனால் அதையெல்லாம் நான் பெரிதுபடுத்தாமல் விட்டு விட்டேன். அதனால் என்னால் தொடர்ந்து செயல்பட முடிகிறது.

இத் தொழிலில் பல சுவையான நிகழ்ச்சிகள், கோபதாபங்கள் டென்ஷன் எல்லாம் உண்டு. கொஞ்சம் லேட்டானாலும் கத்துவார்கள். ஆனால் சாப்பாடு சாப்பிட்டதும் அவர்கள் கோபம் இருந்த இடம் தெரியாமல் போய்

விடும். சிலர் மனமுவந்து பாராட்டும் போது நமது டென்ஷன் எல்லாம் போய் விடும். இதில் முதல் அனுபவமே கசப்பானதுதான்.

நான் முதன் முதலில் 60 பேருக்கான பார்ட்டி செய்த மிதப்பில் 250 பேருக்கான ஆர்டரை ஒத்துக் கொண்டு விட்டேன். எப்படியும் சமாளித்து விடலாம் என்கிற தைரியம் தான். துணைக்கு இரண்டு சமையல்காரர்களை ஏற்பாடு செய்தாயிற்று. அவர் சொன்ன லிஸ்டுப்படி சாமான்கள் வாங்கி, சமைத்துக் கொண்டு போனால் 150 பேருக்குக் கூட வரவில்லை. நாங்கள் போவதற்கும் கூட சற்று தாமதமானதால்... விருந்தினர்கள் பசியும் அதிகமாகி.. இது போதவில்லை அது போதவில்லை என்று ஆளாளுக்கு அலற... மெல்ல நழுவிய நான் ஸ்கூட்டரை எடுத்துக் கொண்டு வேகமாய் வீட்டிற்கு வந்து விட்டேன்! என் தோழர் படை, ஏற்பாடு செய்த அம்மையார்களிடம் வாங்கிக் கட்டிக் கொண்டு ஒருவழியாய் ஓடி வந்து விட்டனர். பின்னர் மறுநாள் பில்லை பெற அவர்கள் வீட்டிற்குப் போன போது பேச்சே வரவில்லை. கண்ணில் தாரை தாரையாய் நீர்... அவர்கள் ஏசிய பேச்சு ஏதும் கேட்கவில்லை. அவர்களுக்கே பரிதாபமாய் போய் விட்டது...

"நீ பரம்பரை சமையல் தொழில்காரி அல்ல. தொழிலுக்குப் புதிதாக இருக்கும் போது ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமெ"ன்று சொல்லி பணத்தில் 500 ரூபாய் குறைத்துக் கொண்டு தந்தார்கள். இந்த அனுபவம்தான் என் வெற்றிக்கு முதற்படியாய் அமைந்தது.

எத்தனை பேருக்கு எந்த அளவு சமைக்க வேண்டும் என்பது அன்று தெரிந்து கொண்டேன். அன்று முதல் இன்று வரை எந்தச் சமையல்காரராக இருந்தாலும் 'அளவு' மட்டும் நான் முன்னின்று தருவது என முடிவு செய்து அதன்படி நடக்கிறேன்.

இத் தொழிலில் நிறைய பிரச்னைகள் உண்டுதான். சில நேரங்களில் ஆட்டோவில் ஏற்றி இறக்கும் போது கவனக்குறைவால் சாமான்களை விட்டு விடுவார்கள்.

ஆட்டோ மறைந்த பின்னர் ஐயோ பின்னாடி பக்கெட் இருந்ததே... 50 தம்ளர் இருந்ததே என்று அலறுவார்கள். இரவு நடுநிசியில் பார்ட்டி முடிந்து வருவதால், களைப்பின் மிகுதியால் இவர்கள் கவனக்குறைவு ஏற்படுகிறது. இப்படி நாங்கள் நிறைய இழந்திருக்கிறோம். இதுவே சொந்தமாக ஒரு வேன் வாங்க வேண்டுமென்ற ஆர்வத்தைத் தூண்டுகிறது.

பத்தாவது படிக்கும் என் இளைய மகள் சில நேரங்களில் சப்பாத்தி, பூரி செய்ய உதவுவாள். மேல்நாடுகள் போன்று ஒரு மணிக்கு இவ்வளவு என்று பாக்கெட் மணி போல தருவதை அவள் பத்திரமாக சேமிப்பாள்.

முதலாமாண்டு இஞ்சினியரிங் படிக்கும் மூத்த மகள் முதலில் சற்று வெட்கப்பட்டாலும் இப்போது பார்ட்டிகளில் மேற்பார்வை செய்ய வருகிறாள்.

"மம்மி... ஒரு 4 வருடம் பொறுத்துக்கோ... நான் 3 ஸ்டார் ஓட்டல் கட்டுகிறேன்" என்கிறாள் இப்போது.

இப்படிப் பல படிகள் ஏறி இன்று நிறைய கற்றுக் கொண்டேன். பஃபே உணவு முறை என்னுடைய ஸ்பெஷாலிடி ஆகிவிட்டது. அதே போல நான் செய்யும் தென்னிந்திய, வட இந்தியா, சைனீஸ் உணவு வகைகளை பலரும் பாராட்டி உண்ணும் போது நமக்குக் கிடைக்கிற ஆத்மதிருப்தி இருக்கிறதே, அதுவே நான் தொழிலில் பெற்ற வெற்றி எனலாம். பொருளாதார ரீதியாகவும் கடனிலும் பாதி அடைந்து விட்டது!

காலையில் பர்ச்சேஸ், பகலில் பார்ட்டி ஏற்பாடுகள், மாலையில் 'டிட்பிட்ஸ்' கடை என எனக்கு நேரமெடுப்பிடிதான். சில நேரங்களில் கொஞ்சம் ரெஸ்ட் எடுக்க மாட்டோமா என்று கூட தோன்றும். ஆனால் என் தொலைபேசியான 450451 எப்போதும் அடித்துக் கொண்டு இருக்கிறது. விலைவாசிகளின் ஏற்றமும் ஆர்க்கிடெக்ட் படிக்கும் எனது மகளின் வளரும் வயதும் என்னை ரெஸ்ட் எடுக்க விடுவதில்லை. ஓடிக் கொண்டு இருக்கிறேன்.

மாறிவரும் சமுதாயத்தில் பெண்கள் விளையாட்டாய், பொழுதுபோக்கிற்காக வேலைக்குப் போக ஆரம்பித்தது இன்று மிகப் பெரிய பரிமாண வளர்ச்சி அடைந்திருக்கிறது. தேவைகள் பெருகப் பெருக சேவைகளும் பெருகுகிறது. கௌரவமான ஒரு தொழிலாக இன்று கேடரிங் மலர்ந்து வருவது பல பெண்களுக்கு வாழ்க்கையில் வழிகாட்டும் என்பதில் ஐயமேயில்லை.

- சஞ்சனா

முட்டைகோஸ் கறி செய்து முடித்ததும் சிறிது இஞ்சியை மைய அரைத்து எண்ணெயில் வதக்கினால் நல்ல வாசம் வரும். கோஸை அதில் போட்டு இரண்டு புரட்டு புரட்டி எடுங்கள். வாசமும் சுவையும் கூடும்.



– கி. மஞ்சுளா

# வேலை செய்வது நாங்கள்; தீர்மானிப்பது ஆண்கள்!

நகரப் பெண்கள் எண்ணங்களிலும், செயல்பாடுகளிலும் வேகமாக முன்னேறி வருகிறார்கள்தான். கிராமத்துப் பெண்களின் நிலை என்ன? 'இந்திய பாரம்பரிய அறிவியல் மற்றும் தொழில் நுட்பம்' தொடர்பான இரண்டாவது மாநாடு சமீபத்தில் சென்னையில் நடந்தது. அங்கு வந்திருந்த சில பெண்மணிகளிடம் பேசிப் பார்த்தபோது மேற்கண்ட கேள்விக்கு விடை கிடைத்தது.




"மீன் பிடிக்கும் தொழிலைப் பொறுத்த வரை தொடக்கத்திலிருந்தே பெண்களின் பங்கு கணிசமாக இருந்து வருகிறது. இலங்கையில் மீன்படகுகளைப் பெண்கள் ஓட்டிச் செல்வது கூட உண்டு. நம் நாட்டில் மீன்வலையைப் பல மணி நேரம் செலவழித்து உருவாக்குவது அந்தச் சமூகத்தைச் சேர்ந்த பெண்கள்தான்" என்றார் திருவனந்தபுரத்தில் அந்தத் துறையைச் சேர்ந்த அதிகாரியான திருமதி நளினி நாயக்.

பெரும்பாலும் இவர்களுடையது தாய்வழி சமுதாயமாக இருப்பதால், மீன்பிடிக்கும் கருவிகளும், உரிமையும் மகளுக்குத் திருமணமானவுடன் அவளுக்குச் சொந்தமாகி விடுகின்றன. படகின் உரிமையாளராக மட்டுமல்ல, மீன் பிடிப்பு தொடர்பான பல விஷயங்களையும் கேரளாவில் பெண்கள்தான் எடுக்கிறார்களாம். தூத்துக்குடியில் முத்தெடுக்க மூழ்கும் நபர்களில் பெண்களும் உண்டு. தங்கள் விரல்களாலேயே இறால்களைப் பிடிக்கும் திறமை கொண்ட பெண்கள் உண்டு. வேம்பநாடு ஏரிப் பகுதியில் இதுபோன்ற சாக

சங்களில் ஈடுபடும் பெண்களை நிறையக் காணலாம்.

கடலில் மீன் பிடிக்கப் போவது ஆண்கள் தான் என்றாலும் கிடைத்த மீன்களைப் பாதுகாப்பது, விற்பது ஆகிய பொறுப்புகளெல்லாம் மீனவ சமுதாயப் பெண்களின் தோள்களில்தான்."

இந்த விவரங்களையெல்லாம் நம்மிடம் பகிர்ந்து கொண்ட நளினி நாயக் அந்தப் பெண்கள் சந்திக்கும் சில பிரச்னைகளையும் வலியுறுத்தினார்.

"மீன் வினியோகம் என்பது குளிர்பதனத் தொழில்நுட்பம் அறிமுகப்படுத்தப்பட்ட பிறகு மிகவும் மாறிவிட்டது. இப்படி அதிக முதலீடு செய்ய முடியாதவர்கள் (முக்கியமாகப்



• தர்மபுரி விவசாயப் பெண்மணிகள்....

• முத்து சிதம்பரம்

பெண்கள்) இந்த விதத்தில் பலவீனப்பட்டிருக்கிறார்கள். மற்றவர்களோடு போட்டியிடுவது அவர்களுக்கு முடியாததாகி விடுகிறது.

மீன் விரைவில் அழுகி விடும் பொருள். நாற்றமடிக்கும் பொருள் கூட. இந்தக் காரணங்களினால் ரயில் வேகன்களில் அவற்றை ஏற்ற அனுமதிப்பதில்லை. எனவே லாரிகளில்தான் அதிகத் தொகை கொடுத்து அதைப் பல்வேறு இடங்களுக்கு அனுப்ப வேண்டியிருக்கிறது.

பல மீனவப் பெண்களிடம் போதுமான மூலதனமோ, தொழில் நுட்பத் திறமையோ இல்லாத காரணத்தால் தினக்கூலியாக வேலை செய்ய வேண்டிய அவல நிலை ஏற்படுகிறது. படகுகளிலிருந்து மீன்களை இறக்குவது, மொத்த வியாபாரங்களுக்காக மீன்களைக் காய வைத்துக் கொடுப்பது இதுமாதிரி உதிரி வேலைகளைத்தான் அவர்கள் செய்ய வேண்டியிருக்கிறது. அடிக்கடி போதிய வருமானம் இல்லாமல் போய்விடுவதால் சில மீனவப் பெண்கள் கள்ளச் சாராயம் விற்பது, ஒழுக்கக் கேடான வாழ்க்கை என் பதிலெல்லாம் கூட ஈடுபடுகிறார்கள்."

"இவற்றின் காரணமாகத்தான் 1989ல் கல்கத்தாவிலிருந்து கன்னியாகுமரி வரை ஒரு பெரும் பேரணியை தேசிய மீனவர் பேரவை ஏற்பாடு செய்த போது, அதில் அந்தச் சமுதாயப் பெண்கள் மிகப் பெருமளவில் கலந்து கொண்டார்கள்" என்கிறார் நளினி.

பக்கத்து மாநிலமான கேரளாவில் மீனவ சமுதாயப் பெண்கள் அவ்வளவு முன்னேறியிருக்கும் போது, நம் மாநில மீனவப் பெண்களுக்கும் அந்த 'முன்னேற்ற ஜுரம்' தொற்றிக் கொள்ள வாய்ப்பு உண்டு என்ற நல்ல அறிகுறி என்று இதைச் சொல்லலாம்.

நன்றாக மடித்துக் கைப்பையிலேயே வைத்துக் கொண்டு விடலாம் என்கிற அளவுக்குள் பெரியதொரு பாயை (பாய்தான்!) நம்மிடம் காட்டினார் திருமதி கதீஜா. "இது உசத்தியான பாய். 140 கவுண்ட்" என்று பெருமையுடன் தன் தயாரிப்பை விளக்கினார்.

"பல நூற்றாண்டுகளாக பத்தமடையைச் சேர்ந்த எங்க முஸ்லிம் பரம்பரையிலே இந்த மாதிரிப் பாய்களைத் தயாரிச்சு வரோம். இதை உருவாக்குறதிலே என்னை மாதிரிப் பெண்களோட பங்கு ரொம்ப அதிகம்" என்றார்.



கதீஜா

இந்தப் பாய்க்கான கோரைப்புல் தாமிரவருணிக் கரையிலே விளைகிறது. அதை அறுத்துக் கொண்டு வரும் பொறுப்பு பெரும்பாலும் ஆதிதிராவிடர் பெண்களுடையது.

அப்படி வந்து சேர்ந்த கோரையை இருபது நாட்கள் காய வைக்கிறார்கள் கதீஜா போன்றவர்கள். பசுமை நிறம் மாறி பவுன் நிறம் வந்து விடும். பிறகு ஏழு நாட்களுக்கு அதைக் கழுவுவார்களாம். பின் தலைமுடி அளவுக்கு மெல்லியதாக அதைப் பிரித்

இல்லங்களை இவர்களது பாய்கள் அலங்கரிக்கின்றன. சுமார் மூன்றாயிரம் பெண்கள் இது போன்று பாய்முடையும் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

"நிறைய சிரமப்பட்டு சிரத்தையாக பாய்களை உருவாக்குவது நாங்கதான். ஆனா எங்களுக்குத் தினக்கூலி மாதிரி கொடுத்திட்டு இடைத்தரகர்கள் கொள்ளையடிக்கிறாங்க. தவிர பாய்களை விற்பது எங்க குடும்பத்து ஆண்கள்தான். எங்களுக்கு அவங்க கணக்குக் காட்டுவதில்லே. பெட்டிப் பாம்பா அடங்க வேண்டிய நிலை எங்களுக்கு" என்றார் கதீஜா.

**அப்படியானால் இந்தத்துறையில் பெண்களின் நிலை மாறவில்லையா?**

"யாருங்க சொன்னது? எங்க சமூகப் பெண்களும் கொஞ்சம் கொஞ்சமா முன்னேறிக்கிட்டுதான் வராங்க. வசந்தியம்மா (டாக்டர் மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்



• வலையப்பட்டி விவசாயப் பெண்கள்



• நாகம்மா

தெடுப்பார்கள். முன்பெல்லாம் இயற்கை சாயத்தைத்தான் பாய்களுக்கு ஏற்றி வந்திருக்கிறார்கள். இப்போது ரசாயன சாயத்தை (இதில் அதிக வெரைடி கிடைப்பதால்) பயன்படுத்துகிறார்களாம்.

நமது மற்றொரு கேள்விக்கு "என்னை வெறும் கைவினைக் கலைஞர்னு சொல்லிக்கறதைவிட, வல்லுனர்னே குறிப்பிட்டுக்கலாம்" என்றார் பனிச்சென்று தன்னம்பிக்கையோடு. இவரைப் போன்ற பத்தமடைப் பாய் வல்லுனர்களுக்கு இந்தப் பெருமை இருப்பது நியாயம்தான். குருஷ்ஷேவ், எலிசபெத் மகாராணி, சிரிமாவோ பண்டாரநாயகா போன்ற பல வி.ஐ.பிக்களின்

தைச் சேர்ந்த டாக்டர் வசந்தி) எங்க முன்னேற்றத்துக்குப் பாடுபடறாங்க" என்றவர் "எங்களுக்கு உரிமை வேணும்னு எங்களிலே தைரியமா, பகிரங்கமா இப்படிச் சொல்ற முதல் பெண்மணி நான்தான். இதிலேயே விளங்கலியா எங்க சமூகப் பெண்கள் சீக்கிரமே உசந்த நிலைக்கு வந்துடுவாங்கன்னு" என்றார் மிகுந்த தன்னம்பிக்கையுடன்.

**பா**ம்புக்கடி வைத்தியத்தில் தேர்ந்தவர் நாகம்மா, திருக்கழுக்குன்றத்தின் அருகிலுள்ள தண்டரை என்ற கிராமத்தைச் சேர்ந்தவர். இருளர் சமூகத்தில் பிறந்தவர். பாம்புக் கடித்த இடத்தைக் கீறி விஷத்தை வெளியேற்றுவதிலிருந்து மருந்துச் சாறை - உடலில் சேர்ந்த விஷத்தின் அளவுக்கேற்ப தயாரிப்பது வரை எல்லாமே அறிந்தவர்கள் இந்த மருத்துவர்கள்.

"பரம்பரையாச் செய்வதுதான் இந்த மருத்துவத் தொழில். பணமிருக்கிறவங்கன்னா நூறு



# 21st Century's

# "Family-Deposit"

அன்பு மற்றும் பாதுகாப்பு ஆகியவற்றின் இருப்பிடம் உங்கள் குடும்பம். தேவை ஏற்படும் போதெல்லாம் அவை உங்களுக்கு ஆதரவாய் உள்ளன.

இப்போது, உள்ளார்ந்த நன்றியுடன் அடையாளமாய் 'ட்வெண்டி ஃபர்ஸ்ட் செஞ்சுரி 'யின் "ஃபேமிலி டெபாஸிட் " டை உங்கள் குடும்பத்திற்கு வழங்குங்கள். அது, எதிர்காலத்தில் எந்த நேரத்திலும் நம்பிக்கையுடன் எதிர்நோக்கத் தகுந்த ஒரு செல்வக் களஞ்சியம். நான்கே ஆண்டுகளில் ரூ. 50 கோடியை எட்டியுள்ள புகழ்மிக்க நிதியீட்டு நிறுவனம், இத்திட்டத்தை வழங்குகிறது. CRISIL FA+ ரேட்டிங் பெற்றிருக்கும், 'ட்வெண்டி ஃபர்ஸ்ட் செஞ்சுரி'யின் "ஃபேமிலி டெபாஸிட்" – உங்கள் குடும்பத்தினர் மீது நீங்கள் கொண்டிருக்கும் ஆழமான அன்பின் வெளிப்பாடு. அதனை இன்றே அவர்களுக்கு வழங்குங்கள்

*This advt. appears further to the statutory advt. published by the company in Makkal Kural and Trinity Mirror on 29th August and 18th November 1995. The text of the statutory advt. is also printed on the application form, which may be referred to before investing in the company's Deposit Schemes.*

உங்கள் "ஃபேமிலி டெபாஸிட்" பற்றி மேலும் அறிய விரும்புகிறேன்.

பெயர் : ....................

விலாசம் : ....................

....................

போன் : ....................

ட்வெண்டி ஃபர்ஸ்ட் செஞ்சுரி மானேஜ்மெண்ட் சர்வீஸஸ் லிமிடெட், 'ஸ்ரீநிதயா', 32, டி.டி.கே. சாலை, சென்னை – 600 018.

**ஒரு மகிழ்ச்சிகரமான குடும்பம் 'ட்வெண்டி ஃபர்ஸ்ட் செஞ்சுரி' குடும்பம்**

Sans - /TCMS/950987

KA

ரூபா கூட வாங்கிக்கறதுண்டு. ஆனா பெரும்பாலும் இல்லாதவங்கதான் வருவாங்க. பண மில்லேங்கறதுக்காக விஷமெடுக்க மாட்டேன்னு சொல்ல முடியாது இல்லீங்களா? எங்க சமூகத்துப் பொம்பளங்க இந்த வேலையில் அவ்வளவா இருக்க மாட்டாங்க. ஆனா, இப்ப சிலர் செய்யறோம். விஷக்கடின்னு மட்டுமல்ல மத்த உடல் உபாதைகளுக்கும் மூலிகை மருந்து தயாரிக்கிறோம். நடப்பு, அறுப்பு இதிலேயெல்லாம் கூட ஈடுபடுவேன். என்ன செய்ய வயித்துப்பாடு நடக்கணுமே!

பொம்பளைங்கன்னு இல்லே. ஆம்பிளைங்களும் ஒண்ணும் இதுவரை பெரிசா முன்னேறிடல்லே எங்க சமூகத்திலே. என்னையே எடுத்துக்குங்க. என் ஒரே மகனை ஆறாவது க்ளாஸ் வரைதான் படிக்க வச்சேன். ஆனா இப்ப எங்காளுங்க கொஞ்சம் மாறிக்கிட்டு வராங்க. இப்ப பொட்டப்புள்ளகளையும் அஞ்சாவது வரையாவது படிக்க வைக்கிறாங்க. சில பசங்க அதுக்கு மேலேயும் கூடப் படிக்குதுங்க" என்றார் நாகம்மா.

**வி**வசாயத்தைப் பொறுத்தவரை பெண்கள் மிக அதிகமாகப் பங்கேற்பது ஆந்திரப் பிரதேசத்தில்தான் - சரி பாதிப் பங்கு. மிகக் குறைவான (1.4%) அளவில் விவசாயத்தில் ஈடுபடுவது பஞ்சாப் மாநிலப் பெண்களாம்.

இடையில் இருக்கும் தமிழ்நாட்டுப் பெண்மணிகளின் நிலை எப்படி இருக்கிறது? வலையம்பட்டி கிராமத்திலிருந்து வந்திருந்த சில பெண்மணிகளின் கருத்துக்கள் இவை.

"ஏர் பூட்டி உழுவதென்னவோ ஆண்கள்தான். ஆனா நிலம் தயார் செய்யறதிலே எங்களுக்கு நிறையப் பங்கு உண்டு. நிலத்திலே இருக்குற கல், முள்ளெல்லாம் எடுத்துப் போடுவதிலிருந்து விதைகளை தயார் செய்யற மட்டும் எங்கள் பொறுப்புதான். நெல்லுன்னா, விதையை மூணு நாள் உலர்த்தி, உப்புத் தண்ணீரில் ஊறவைத்து, பிறகு பதரை நீக்கி விட்டு, பின் வேறு நீரில் ஊற வைத்து - இப்படிப் பலவிதங்களில் எங்க பங்கு அதிகம்" என்றார் பட்டம்மா.

"விதை விதைப்பதும், உரம் போடுவதும் கூடப் பெரும்பாலும் எங்க வேலைதான். செயற்கை உரத்தைப் பயன்படுத்தினப்போ காசநோய், ஆஸ்துமா இதெல்லாம் கூட எங்களிலே நிறையப் பேருக்கு வந்தது. இதனாலே கண்டிஷனா எங்க ஆம்பளைங்ககிட்டே சொல்லிட்டோம் இயற்கை எருவைத்தான் பயன்படுத்துவோம்னு" என்றார் உமா கம்பீரமாக.

"அறுவடைக்குப் பிறகு தானியத்தைத் தரம் பார்த்துப் பிரித்து கட்டிக் கொடுப்பதும் நாங்கதான். அதுக்கு அப்புறம்தான் ஆம்பிளைங்க கதிர் அடிப்பாங்க" என்றார் சின்ன பாப்பா.

"விவசாயத்திலே எங்களுக்கு இவ்வளவு பங்கு இருந்தாலும், விளைச்சலை விற்ற பிறகு அந்தப் பணத்தை எப்படி செலவு செய்யணும்னு தீர்மானிக்கறது ஆம்பளங்கதான். சேமிப்பைக் கூட மகனுக்குதான் எழுதி வைப்பாங்க. சமைக்கவும் வேலைக்கும் மட்டும்தான் நாங்க" என்றார் ரமணி பெருமூச்சுடன்.

தர்மபுரியில் உள்ள தலி என்ற கிராமத்திலிருந்து வந்திருந்தார்கள் தேவி, சாரதாம்மா, உமா ஆகியோர். கர்நாடக எல்லைப் பகுதியில் உள்ளவர்கள். கன்னடத்தில் பேசினார்கள்.

நிலத்தில் பொதுவாக எதைப் பயிரிடுகிறார்கள் என்றவுடன் "யோக ராகி, போக ராகி" என்று ராகத்தோடு ஒரு பாடலைப் பாடி பதிலளித்தார்கள். ராகிக்கு பூச்சி வராமல் காக்க, வயலைச் சுற்றி ஆமணக்கை சாமர்த்தியமாகப் பயிரிடுவதாகக் கூறினார்கள். எதை விதைப்பது, எப்படிப் பயிரிடுவது என்பதையெல்லாம் இவர்கள் பகுதியில் பெண்கள்தான் தீர்மானிக்கிறார்களாம்.

உரிமைகளை பெற்றிருக்கிற விவசாயப் பெண்மணிகள் மிகக் குறைவுதான். ஆனால் அதற்கு முன் கட்டமான 'உரிமையை உணர்தல்' என்ற நிலைக்கு இன்று பெரும்பாலானவர்கள் வந்திருக்கிறார்கள். இதற்குப் பல்வேறு பெண்கள் விவசாயச் சங்கங்களும் உதவுகின்றன.

— **அருண் சரண்யா**

படங்கள் : **ஜி. சுரேஷ்**

---

**ஷேவிங் பிரஷ் பழையதாகிவிட்டால் அதை பத்திரப்படுத்திக் கொள்ளுங்கள். குழந்தைகளின் கான்வாஸ் ஷூக்களுக்குப் பாலீஷ் போட உதவும்.**

**- லக்ஷ்மி சிவகுமார்**



# Open this jar for a feast.

Short Bread Stars ⌒ Carrot-Beetroot Sweet ⌒ Rasmalai ⌒ Besan Laddu ⌒ Banana Payasam ⌒ Pineapple Custard Pudding ⌒ Butterscotch Pudding ⌒ Raisin Loaf ⌒ Coconut Burfi ⌒ Kalakand ⌒ Short Bread Stars ⌒ Carrot-Beetroot Sweet ⌒ Rasmalai ⌒ Besan Laddu ⌒ Banana Payasam ⌒ Pineapple Custard Pudding ⌒ Butterscotch Pudding ⌒ Raisin Loaf ⌒ Coconut Burfi ⌒ Kalakand ⌒ Short Bread Stars ⌒ Carrot-Beetroot Sweet ⌒ Rasmalai ⌒ Besan Laddu ⌒ Banana Payasam ⌒ Pineapple Custard Pudding ⌒ Butterscotch Pudding ⌒ Raisin Loaf ⌒ Coconut Burfi ⌒ Kalakand ⌒ Short Bread Stars ⌒ Carrot-




## So many goodies from one jar!

*The goodness of pure Badam, in a spread of easy-to-make sweets, pastries, desserts, payasams and drinks. Just a few of these mouthwatering dishes are featured here. More recipes are available FREE, with MTR Badam Feast.*




*Also available in 200g and 500g refill packs.*

The promise of purity

# அம்மாவும் அஞ்சுவும்

**யோகி**

அஞ்சுவின் பிரசவ நாள் நெருங்க, நெருங்க எனக்குப் பயம் ஏற்பட்டது. என் பயத்தை அறிந்து கொண்டவளாய் அஞ்சு கேலி செய்தாள்.

"என்னை விட நீங்கதான் குழந்தை பெத்துக்கப் போற மாதிரி டென்ஷன் ஆறிங்க. பயப்படறீங்க... என்னைப் பாருங்க... நா எத்தனை சந்தோஷமா இருக்கேன் என்று."

அஞ்சுவுக்கு என்ன தெரியும்... என் பயத்தின் காரணங்கள்... சொன்னால் சிரித்தாலும் சிரிப்பாள்.. பரிகாசம் செய்யவும் தலைப்படுவாள். ஆனால் எனக்கு பிரசவம் முடியும் தினம் வரை நான் நெருப்பின் மீது இருப்பது போன்று அல்லவா இருக்க வேண்டும்.

இன்னும் சில வருஷங்களுக்குக் குழந்தை பிறப்பை ஒத்திப்போட்டு இருக்கலாம் என்று தோன்றிற்று. ஆனால் அஞ்சு ஒப்புக் கொண்டு இருக்க மாட்டாள். எது எப்படியோ... இந்தச் சில நாட்களாய் என்னால் சரியாக சாப்பிடவோ தூங்கவோ கூட முடிவதில்லை.

சின்ன வலி என்று அஞ்சு சொன்னால் கூட- நான் பெரிசாய் கற்பனை செய்து கொள்கிறேன். அவளுக்கு ஏதாவது ஒன்று ஆகிவிடுமோ என்று அஞ்சுகிறேன். அவளை சின்ன சின்ன வேலைகள் கூட செய்ய விடாமல் இருக்கிறேன். "எல்லா வேலைகளையும் நீங்களே இழுத்துப் போட்டு செய்யுங்க. எனக்கு ஒரு வேலையும் கொடுக்காதீங்க"என்று குறைப்பட்டுக் கொண்டாள்.

"அஞ்..."என்று அழைத்தேன்.

"அஞ்...என்ன அஞ்...அஞ்சுன்னு சொல்லுங்க... பேரே இத்தனூண்டு.. அத சுருக்கி வேற கூப்பிடணுமா... நாய்குட்டிய கூப்பிடுறமாதிரி இருக்கு.."என்று சிரித்தாள். இந்த சிரிப்புதான் அஞ்சு... எதையுமே நினைத்துக் கலங்காமல் கலகலவென இருப்பாள் அஞ்சு...

ஆனால் அஞ்சுவை போல் என்னால் இருக்க முடியவில்லை. என் எண்ணங்கள் முற்றிலும் தவிர்க்கப்பட வேண்டியவையே... கர்ப்பமான பெண்-இன்றைய விஞ்ஞான யுகத்தில்- எந்த பிரச்சனையும் இன்றி, எந்தச் சேதாரமும் இன்றி குழந்தையைப் பெற்றுக் கொள்ள முடியும். ஆனால் என்னால் பிரச்னையைப் பற்றியோ, சேதாரத்தைப் பற்றியோ எண்ணாமல் இருக்க முடியவில்லை.

அதிலும் இவள் தாயை தவிர்த்து வாழுபவள். தாயின் அனுசரனை இருந்தாலாவது சந்தோஷம் இருக்கும்.

"அஞ்சு உனக்கு அம்மா துணை இல்ல... உன்னை வீணா அலைகழிக்கிறேனோன்னு தோணுது..."

"அதுக்காக என்னை என் அம்மா வீட்டிற்குப் போகச் சொல்றீங்களா.. உங்கள அன்னிக்கு எப்படியெல்லாம் பேசினாங்க... நீங்க மறந்து இருக்கலாம்... ஆனா நா மறக்கல... உங்களச் சொன்னது என்னை சொன்னது போலத்தான்"என்றாள்.

அஞ்சுவை ரிஜிஸ்டர் மேரேஜ் செய்து கொண்டு-இரண்டு நாட்கள் பெங்களூரில் போய் இருந்து விட்டு திரும்ப சென்னைக்கு வந்து அஞ்சுவின் வீட்டிற்குச் சென்ற போது- அவர்கள் அடிக்கவும் தயங்கவில்லை. அஞ்சு அதிர்ந்து போனாள். அப்படிச் செய்வது தன் தகப்பனாக இருந்தபோதும் அடிபடுவது தன் கணவன் அல்லவா.

வந்து விட்டோம்...எனக்கு யாரும் இல்லை. ஆனால் இவளுக்கு எல்லா உறவுகளும் இருந்தும் உறவுகளை பிய்த்துக் கொண்டு வரும்படி சொல்வது என்ன நியாயம். அதெல்லாம் அஞ்சுவை பாதிக்கவில்லை. அஞ்சு தன்னையும், என்னையும் சந்தோஷமாய் வைத்து இருந்தாள்.

அஞ்சு கர்ப்பமாய் இருக்கிறாள் என்பது தெரிந்ததும்- சந்தோஷமாய் இருந்தது. அப்போதெல்லாம் இப்போதுள்ள பயம் ஏதும் இல்லை.

ஒரு நாள் உறக்கத்தில் இருக்கும் போது அந்தக் கனவு வந்தது... அது கனவா இல்லை நாளை நடக்கப்போவதற்கான அறிகுறியா..



நீ அப்பா அப்பான்னு நெருங்கி வந்தபோது உன்னை தவிர்க்க முடியல... உன் மேல் பாசத்தை பொழிவதை தடுக்க முடியல. எப்போதாவது உன் அம்மா ஞாபகம் வரும். அப்போ உன் மேல எனக்கு கோபம் வரும். அம்மாவை தின்னுட்டு பொறந்துட்டியேன்னு திட்டுவேன். அப்போ எல்லாம் அவ்வளவு வைத்திய வசதி இல்ல. இல்லேன்னா உன் அம்மா பொழைச்சு இருப்பா..." என்பார் அப்பா. அப்பா தன் அந்திமக் காலத்தில் என்னை அருகே அழைத்து நிறைய பேசினார்.

நான் படித்து முடித்த போது அப்பா இறந்து போனார்.

அம்மா இறந்தது ஒரு நிகழ்ச்சியாய் பிறர் சொன்ன சம்பவமாய் மாத்திரமே இருந்தது. ஆனால் அஞ்சு கர்ப்பமாகி- ஒரு நாள் எனக்குக் கனவில் அம்மா மாதிரி அஞ்சுவும் குழந்தையை

படக்கென்று எழுந்தேன். வியர்த்துக் கொட்டியது. அஞ்சு பதறிப்போனாள். என்னங்க என்று கேட்டாள்.

"ஒண்ணும் இல்லை" என்று திரும்பப்படுத்தேன். எதுவும் இல்லை என்றாலும் என்னால் நிம்மதியாக தூங்க முடியவில்லை. என்னை எதுவோ இம்சை உறுத்திற்று... அப்படியாகி விடுமோ...

அம்மாவுக்கு நேர்ந்த மாதிரி அஞ்சுவுக்கும் நேருமோ... கனவு அதைத்தானே உரைத்தது.

**அ**ம்மா... நான் பிறந்ததும்- அம்மா இறந்து போனாள். அப்பாவிற்கு இது பெரிய அதிர்ச்சி.... அதனாலேயே என்னை வெகு காலம் அப்பா தொடாமல் இருந்தாராம். நான் பிறக்காமல் இருந்து இருந்தால்... அம்மாவுக்கு எதுவும் நேர்ந்து இருக்காதே என்று எண்ணுவாராம்.

பின்னாலில் அவரே சொல்லி இருக்கிறார். "உனக்கு மூணு வயசு ஆற வரைக்கும் நான் உன்னை தூக்குனது கூட இல்ல... பாட்டிதான் எல்லாம். பாட்டிகூட திட்டுவா. "என்ன புள்ள நீ... பெத்த மகன்னு ஒரு அன்பு வேண்டாமா. உனக்கு ஒரு வாய் கஞ்சிகூட ஊத்த மாட்டான்னு சொல்லுவா... மூணு வயசுக்கப்புறம்



பெற்றுப்போட்டு விட்டு இறப்பது மாதிரி தோன்ற அச்சம் வந்தது. இது தேவையில்லாத அச்சம்தான். ஆனால் தவிர்க்க முடியவில்லை.

அஞ்சு...அஞ்சு... அம்மா என்னை பெற்று விட்டு இறந்துபோன மாதிரி– என் குழந்தையைப் பெற்றுவிட்டு நீ போய் விடமாட்டியே.

ஒரு நாள் தூக்கத்தில் நான் இதை உளறி விட்டேன். அஞ்சு கேட்டுக் கொண்டு இருந்து

இருக்கிறாள். நான் விழித்ததும் சிரித்தாள்.

"போயும் போயும் இதற்கா இத்தனை பயம். உங்களுக்கு மீசை எதுக்கு" என்று மீசையைப் பிடித்து இழுத்தாள்.

"ஒட்டு மீசை இல்லையே.. உண்மையில் உங்க அம்மா மேல, என்மேல நீங்க வைச்சு இருக்கிற அன்பு என்னை பிரமிக்கச் செய்யுது. ஆனா ஒரு கனவுக்குப் போய் இத்தனை பயப் படறீங்க. கனவெல்லாம் பலிக்காதும்மா..." என்றாள் நெகிழ்ந்தவளாக.

அன்று—அஞ்சுவுக்குப் பிரசவ வலி ஏற்பட டாக்ஸி வைத்து ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போயாயிற்று... "இரவு குழந்தை பிறக்கலாம்"— என்றார் டாக்டர்.

இரவு வந்தது. "காலையில் இருந்து நீங்க எதுவுமே சாப்பிடல" என்றாள் அஞ்சு.

"இல்லையே... சாப்பிட்டேனே..."

"பொய் சொல்றீங்க" என்று அஞ்சு சிரித் தாள். சாத்துக்குடியை உரித்துக் கொடுத்தாள். ஏனோ அஞ்சு நிறைய அழகாய் இருப்பது போல்தோன்றிற்று. தீபம் அணையப் போகும் முன்பே-நிறைய ஒளி சிந்துமாமே.. அப்படியா.. ஐயோ... ஏன் என் புத்தி, நினைவு இப்படியே போகிறது.

அஞ்சுவிற்கு வலி எடுக்க- டாக்டர் வந்தார். கதவு அடைக்கப்பட்டது. அஞ்சு கத்துவது கேட்டது. 'அய்யோ, எங்க போயிட்டீங்க என்னை விட்டுட்டு...'

அஞ்சு உனக்கென்ன ஆயிற்று. நான் எங்கும் போகவில்லை. நான் உன் அருகில் தானே இருக்கிறேன். நீதான் நான் போவதாய் எண்ணி எங்கோ போகிறாய்.

சட்... என்ன நினைப்பு இது. அம்மாவின் ஞாபகம் வந்தது.

அஞ்சு அழுவது, கத்துவது எல்லாம் கதவை மீறி- சுவரை மீறி கேட்டது. அஞ்சு அழுதோ கதறியோ நான் பார்த்தது இல்லை இதுவரை. அவளுக்கு இப்படி ஒரு நிலை வர நானே காரணம். எனக்குள் அழுகை குமுறி வந்தது.

இப்போது அஞ்சுவின் சப்தம் குறைந்தது. குழந்தை வீறிட்டு அழுவது கேட்டது.

கொஞ்சம் மௌனம்... மௌனம் பயத்தைத் தந்தது.

சற்று நேரத்தில் டாக்டர் வந்தார். எதுவும் சொல்லாது விரைந்தார். நர்ஸ் வந்தாள். பெண் குழந்தை பிறந்து இருப்பதாய்ச் சொன்னாள்.

"அஞ்சு எப்படி இருக்கா" என்றுதான் கேட் டேன் குழந்தையையும் மறந்து.

"உங்க மிஸஸ் நார்மலாதான் இருக்காங்க. போய் பாருங்க."

அஞ்சு சற்றே சோர்வுடன் என்னைப் பார்த்துச் சிரித்தாள். அதில் கேலி இருந்தது. "உங்க பயம் தேவையற்றது" என்பது போல. ஆனாலும் என் பயத்தில் காதல் இருந்ததே... என்னை அருகே அழைத்து என் கையில் முத்தமிட்டாள் வாஞ்சையுடன்.

"OLD IS GOLD
GOLD IS T.NAGAR LKS"

"LKS GOLD" IS CASH IN HAND

பொன்னின்
பெருமை

பெண்ணின்
பெருமை






தலைமுறை தலைமுறையாக
தரம்மிக்க நகைகளை விற்பனை
செய்து வருவதில் நிகரற்று விளங்குவது.
எல்.கே.எஸ் கோல்டு ஹவுஸ்



ONLY AT
T. NAGAR

L.K.S *The Big Shop*
GOLD HOUSE

60, USMAN ROAD, T. NAGAR, MADRAS - 600 017
PHONE : 4341111, 4344444, 4345555, 4343323

ADSTART

★ OPEN ON SUNDAYS — 10 AM to 1 PM

# யாதுமாகி நின்றாய் காளி!

மகாகவி சுப்பிரமணிய பாரதியார், "யாதுமாகி நின்றாய் காளி" என்று தொடங்கும் பாடலைப் பாடிய பெருமை பெற்ற சன்னதிதான் சென்னை பாரி முனை தம்புச் செட்டித் தெருவில் அமைந்திருக்கும் ஸ்ரீகாளிகாம்பாள் காமடேஸ்வரர் (காமாக்ஷி) கோவிலாகும். பழமையான இக்கோயிலில் வீற்றிருந்து பக்தர்களுக்கு அருள்பாலிக்கிறாள் அன்னை.

தை பிறந்தால் வழி பிறக்கும்.



• காளிகாம்பாள் - உற்சவர்

ஆம். சோர்ந்திருக்கும் மனதைத் தட்டி உற்சாகப்படுத்தி, சலிப்பினை விரட்டியடித்து, மனதுக்கு மகிழ்ச்சி தரும் தை மாதம் பிறந்து விட்டது. காளிகாம்பாள் சன்னதியில் நடக்கும் கோலாகலங்களில் தை மாத சிறப்பு வழிபாட்டுக்கு குறிப்பிட்ட காரணமும் உள்ளது.

"ஒரு வருடத்திற்கு பன்னிரண்டு மாதங்கள். இரண்டு மாதங்களுக்கு ஒரு ருது என்ற கணக்கில் ஆறு ருதுக்கள். வருஷத்திற்கு இரண்டு அயனங்கள். ஆடி முதல் மார்கழி முடிய தக்ஷிணாயனம். தை முதல் ஆனி முடிய உத்தராயனம். தக்ஷிணாயனம் பித்ருக்களை வழிபட உகந்தது. உத்தராயனம் பகவானை வழிபடும் புண்ணிய காலமாகும்.

நமக்கு ஒரு வருடம் என்பது தேவர்களுக்கு ஒருநாள் அல்லவா? அதன்படி உத்திராயனம் அவர்களுக்குப் பகலாகவும், தக்ஷிணாயனம் இரவாகவும் ஆகின்றது. புண்ணிய காலமாகிய உத்தராயனத்தில் அம்பாளை ப்ரீதி செய்து மகிழ்கிறோம்.

சூரியபகவான் மகர ராசியில் பிரவேசிக்கின்ற காலத்தை மகர சங்கராந்தி என்று தை மாதம் முதல் நாளை விசேஷமாகக் கொண்டாடுகின்றோம். சூரிய பகவான் இல்லையென்றால் சுபிட்சம் ஏது? பால்* தந்து போஷிக்கும் பசுவின்றி லோகம் ஏது? தை மாதம் சூரியனையும், பசுக்களையும் வெள்ளிக் கிழமை அம்பாளையும், தைப் பூசத்தன்று முருகனையும் பூஜித்து அவர்களது அன்புக்கும் பாத்திரமாகின்றதால்தான்

• கோ பூஜை



தை மாதம் மிகவும் சிறப்பான உற்சவகாலமா கின்றது" என்கிறார் இக்கோயிலின் பிரதான குருக்கள் ஸ்ரீசாம்பமூர்த்தி சிவாச்சாரியாரின் சகோதரர் உபகுருக்கள் டி.எஸ். வாகீஸ சிவாச்சாரியார்.

சர்வதுக்க நிவாரணியாகவும், சர்வ மங்கள காரிணியாகவும், சர்வ விக்ன நிவாரணி யாகவும், சர்வ சௌபாக்கிய தாயினியாகவும், ஸ்ரீசக்ர நகரசாம்ராஜ்ஜினியாகவும் மேற்கு திசை நோக்கி எழுந்தருளி பக்தர்களுக்கு அருள்பாலிக்கிறாள் ஸ்ரீகாளிகாம்பாள் எனும் தேவி காமாக்ஷி. விஸ்வகர்மா சமூகத்தின ரால் நிர்மாணிக்கப்பட்டு பரிபாலிக்கப்பட் டும் வருகின்றது இத்தொன்மையான கோயில். தெற்கு ராஜ்யங்களைத் தன் வயப்படுத்தி திக்விஜயம் செய்த மராட்டிய மாமன்னன் சத்ரபதி சிவாஜி 1667 ஆம் ஆண்டு அக்டோபர் 3-ஆம் தேதி இக்கோயி லுக்கு வருகை புரிந்து அன்னையின் அருள் பெற்றதாக வரலாற்று ஏடுகளில் காணப் படுகின்றது.

"இத் திருக்கோயிலின் வெளிப்பிரஹாரத் தில் பிள்ளையார், முருகன், சித்திபுத்திசமேத கணபதி, வீரபத்திரர் மகாகாளி, நாகர், விஸ்வ கர்மா, காயத்திரி, துர்க்கை, நடராஜர் உற்சவ மண்டபம் எதிரில் ஸ்ரீசக்ரமேரு, உள் சுற்றில் லக்ஷ்மி, சரஸ்வதி சமேத உற்சவ காளிகாம் பாள், அருணாசலேஸ்வரர், சுப்பிர மணியர், பள்ளியறை, கமடேஸ்வரர், காளிகாம்பாள் சன்னதிகள் தனித்தனியே சிறப்பாக அமைந் துள்ளன.

கடலிலிருந்து கிடைத்த அம்பாள் என்ப தால் அபிஷேகம் கிடையாது. ஆனால் பன்னீர் அபிஷேகம் மட்டும் உண்டு. வீர பத்திரனுக்கு தனி சன்னதி இங்கு சிறப்பு. தட்சயக்ஞன் ஈசனை அழைக்காமல் யாகம் செய்ததில் கோபம் கொண்ட ஈசன், வீர பத்திரனை உற்பத்தி செய்து காளியுடன் அனுப்பி வைத்தார். தட்சனின் யாகத்தை அழித்து அவனது சிரசை வீரபத்திரன் கொண்டு வந்ததாகப் புராணம். காலில் தட்சனின் சிரசை மிதித்துக் கொண்டு வீர பத்திரன் காட்சி தரும் சன்னதி இது. இங்கு திருமணம், குழந்தை பாக்கியம், வழக்கு விவகாரங்கள் அனைத்துக்கும் காணிக்கை யாக 108, 54, 21 நாட்கள் வெற்றிலை மாலை போடுவது வழக்கமாக உள்ளது. காயத்ரி மந்திர ஸ்வரூபமானவள். முக்காலமும், மூன்று வேளைகளும் ஜபிப்பதால் தனி சன்னதி பெரும்பாலும் இருக்காது. ஆனால் இங்கு காயத்திரி தேவிக்கு சன்னதி உள் ளது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. உலகப் புகழ் பெற்ற கணபதி ஸ்தபதியார் இதை '94 ஆம் ஆண்டு உருவாக்கினார்" என்று கோயி லின் அமைப்பை விளக்கினார் ராஜாமணி குருக்கள்.

தை மாதம் முதல் நாள் சங்கராந்தி காலை விசேஷ பூஜை, அபிஷேகம் அலங்காரமும்,


• சாம்பமூர்த்தி சிவாச்சாரியார்


• வாகீஸ சிவாச்சாரியார்

# உங்களுடைய செல்ல மகளுக்கு.



# ராஜ் லக்ஷ்மி

யூனிட் ப்ளான்

5 வயது வரையிலான பெண் குழந்தைக்கான ஒரு தனிச்சிறப்பான ப்ளான்

**சிறப்பம்சங்கள் :**

- குறைந்தபட்ச முதலீடு ரூ.1500 மற்றும் அதற்குமேல் ரூ. 500-ன் மடங்கில். உச்ச வரம்பு கிடையாது.
- தனிநபர், மாநில, மத்திய அரசு, ட்ரஸ்ட், சங்கம், கார்ப்பொரேட் பாடி — 5 வயது வரையுள்ள பெண் குழந்தைக்காக முதலீடு செய்யலாம்.
- குழந்தை பிறந்ததும் செய்யும் ரூ.1500 முதலீடு 20 ஆண்டுகளில் ரூ.21,000 ஆகலாம். வளர்ச்சி நிலை ப்ளானில் சேர்ந்திடும் வயதைப் பொறுத்திருக்கும்.
- விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்பட்ட தேதியிலிருந்து முதிர்வுறும் தேதி கணக்கிடப்படும்.
- போனஸ் டிவிடெண்ட் ஒவ்வொரு கால வரையிலும் அறிவிக்கப்படலாம் மற்றும், போனஸ் டிவிடெண்ட் முதிர்வடைந்ததும் வழங்கப்படும்.



## யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா

உங்கள் வளமான எதிர்காலத்திற்கு

மியூச்சுவல் ஃபண்டுகளிலும், செக்யூரிட்டிகளிலும் செய்யப்படும் அனைத்து முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்க்கிற்கு உட்பட்டவை. செக்யூரிட்டி மார்க்கெட்டை பாதிக்கும் காரணங்களைப் பொறுத்து என்ஏவி திட்டங்கள் ஏற்றத் தாழ்வுகளுக்கு உட்படலாம். கடந்தகால சாதனை வருங்கால விளைவைக் குறிப்பதாகாது. ராஜ் லக்ஷ்மி என்பது திட்டத்தின் பெயரே தவிர, ப்ளானின் தரத்தை, அதன் எதிர்கால வாய்ப்பு அல்லது ஆதாயத்தை எவ்வகையிலும் குறிப்பிடுவதல்ல. ஃபண்டின் நோக்கங்கள் நிறைவேற்றப்படும் என்று யாதொரு உறுதியும் அளிக்கப்படமாட்டாது. முதலீடு செய்யும்முன் வழங்கு பத்திரத்தை தயவு செய்து படிக்கவும்.

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101.
கிளை அலுவலகங்கள்: • சென்னை. போன்: 517101, 517190
• மதுரை. போன்: 38186 • திருச்சி. போன்: 27060 • கோயம்புத்தூர். போன்: 214973.

0135 B/95 M TM



• ஸ்ரீ புவனேஸ்வரி - உற்சவர்

மாலை நடக்கும் புஷ்பாஞ்சலி கண்கொள்ளாக் காட்சியாகும். கர்ப்பக்கிரஹத்தினுள் 108 கூடை பூக்கள், ஏன்? அதற்கும் மேலே அத்தனை வகையான பூக்களினால் அர்ச்சனை செய்கையில் பூக்குவியலின் இடையே காளிகாம்பாளின் முகதரிசனம் நட்சத்திரக் குவியல்களிடையே ஒளிரும் சந்திரனைப் போல் ஒளிமயமாக பளீரென்ற முகலாவண்யத்துடன் காட்சி தருவதை வர்ணிக்க வார்த்தைகளே இல்லை என்கின்றனர் இங்குள்ள சுவாசினி மண்டலியைச் சேர்ந்த சந்திராவும், தேவியும்.

நாற்பத்தி ஐந்து ஆண்டுகளுக்கு முன் தொடங்கிய காளிகாம்பாள் சுவாசினி மண்டலி காலப்போக்கில் நசிந்து விடாமல் ஜானகியம்மாள், தொடர்ந்து சரோஜாம்பாள் என்று பல பெண்கள் பொறுப்பேற்று இன்று ஐநூறு பெண்களைக் கொண்ட அமைப்பாக இருந்து ஸ்ரீசாம்பமூர்த்தி சிவாச்சார்யார் தலைமையில் அனைத்து பூஜைகளையும் முறையாக செய்து வருகின்றனர். பிரதி வெள்ளிக் கிழமையும் அம்மனுக்கு பூஜை, தொடர்ந்து குருக்கள் செய்யும் கோமாதா பூஜையும், சுமங்கலி பூஜையும், திருவிளக்குப் பூஜையும், ஊஞ்சல் உற்சவமும் சுவாசினி மண்டலியினர் ஈடுபாட்டுடன், நம்பிக்கையுடன், பக்திப் பரவசமாய் செய்யும் நற்காரியங்களாகும்.

"வெள்ளியன்று பூஜையில் எங்கள் அமைப்பில் உள்ளவர்கள் கோவிலுக்கு வரும் கண்ணில் படும் ஒரு பெண்மணிக்குத் தாம்பூலம், மஞ்சள், ரவிக்கைத் துணி (சிலர் புடைவை கூட) தந்து மகிழ்வோம். தை மாதம் 108 திருவிளக்கு பூஜை ஜகஜ்ஜோதியாய் நடக்கும். தை மூன்றாவது வெள்ளிக்கிழமை, அம்மனுக்குத் திருக்கல்யாணம் இங்கு இல்லாத காரணத்தால் கிரீடத்துக்கு ஹோமம் செய்து கையில் செங்கோலுடன் சாம்ராஜ்ய மகுடாபிஷேகம் நடத்துகின்றோம்" என்கின்றனர்.

தைக் கிருத்திகைக்கு முருகனின் மயில் வாகன சேவை கண்கொள்ளாக் காட்சி. தை வெள்ளியன்று கோமாதா பூஜை வழிபாடு நடக்கையில் பிரஹாரம் முழுவதும் பெண்கள் அலைமோதி நின்று பசுவிற்கு மஞ்சள், குங்குமம், மலர் வைத்து குருக்கள் பூஜை செய்து தீபாராதனை காட்டியதும், பசுவை வலம் வந்து தீர்த்தம் வாங்கிக் கொள்வது குறிப்பிடத்தக்கது. பாரிமுனையிலுள்ள காகக் கடை வர்த்தகர்கள் சங்கத்தை சேர்ந்த 64 கடைக்காரர்களும் தை பூசத்தன்று தெப்ப உற்சவத்தை அன்னதானம் செய்து, அம்பாளை வீதி உலா புறப்பாட்டுடன், கச்சாலீஸ்வரர் கோவில் தெப்பத்தில் கலந்து கொள்ளச் செய்வதும் வழக்கம்.



• ஸ்ரீ புவனேஸ்வரி ஸ்வாமிகள்



பாரத்வாஜ ஸ்வாமிகள்

"திருமணமாகி பதினைந்து வருடமாகின்றது எனக்கு முதல் ஏழு வருடங்கள் குழந்தை இல்லை. மலடி என்று ஒருவர் திட்டியதும் மனமுடைந்த நான் அம்பாளிடம் வந்து அழுது முறையிட்டேன். ஏழு வயது முதல் இக்கோயிலுக்கு வருகின்றேன். எனக்கு வழி சொல்லாமல் உன் சன்னதியை விட்டுச்

செல்ல மாட்டேன் என்று பிடிவாதமாக அழுதேன். வீட்டுக்குச் சென்ற நான் வீட்டு விலக்கு ஆகாமல் அந்த முறை கருத்தரித்தேன். அம்பாளின் கருணைக்கு எல்லையேது" என்கிறார் மாதவி.

"முப்பது வருடங்களாக நான் கோவிலுக்கு வருகிறேன். ஒரு சமயம் தொழில் சம்பந்தமாக டில்லி சென்ற என் கணவருக்குக் காரில் விபத்து ஏற்பட்டு, கால் சிதைந்து போனது. உன்னைத் தொழுத எனக்கு இந்தக் கதியா? என்று அழுது தொழுதேன். காலில் காயம் பட்ட சுவடே தெரியவில்லை இப்போது. '75-ல் காஷ்மீர் சென்றார். பாகிஸ்தானுடன் சண்டை நடந்த சமயம் அது. அவர் எங்கிருக்கிறார் என்ற தகவலே தெரியவில்லை. தகவல் சாதனங்கள் எதுவும் வேலை செய்யவில்லை அங்கு. அன்னையிடம் ஓடிவந்து என் கணவரை உடனே தராவிட்டால் உன்னுடன் பேச மாட்டேன். 'டூ' விட்டு விடுவேன் என்றெல்லாம் அரற்றினேன். வீட்டில் திடீரென அவர் வந்து விட்டார். சமீபத்தில் கழுத்தில் என் கணவருக்கு பயங்கர வலி. ஆபரேஷனுக்கு நாள் குறித்தனர். அம்பாளை நான் விடவில்லை. ஆபரேஷன் கூடாது. நடந்தால் உனக்கும், எனக்கும் உறவேயில்லை என்று சண்டையிட்டேன். அடுத்த முறை எக்ஸ்ரே எடுத்ததில் ஆபரேஷன் தேவையில்லை என்றனர். அவளைப் போற்றியதை விட உரிமையாகத் திட்டியதுதான் அதிகம். சோதிப்பாள் கடைசியில் சந்தோஷம்தான் தருவாள். பாசத்தைக் காட்டுவாள். கலியுகத்தில் கண்கண்ட தெய்வம் அவள்" என்கிறார் கண்ணில் நீர் ததும்ப சந்திரலேகா ராஜா.

கோயிலுக்கு வரும் பக்தர்களைச் சுண்டி இழுக்கும் மற்றொரு செயலும் இங்கு நடைபெறுகிறது. நம் முன்னோர்கள், ஞானிகள், சித்தர்கள் சொன்ன ஆன்மீகக் கருத்துக்களை 'அருள்விருந்து' எனும் தலைப்பில் எளிய, இனிய, தனக்கேயுரிய நடையில் எழுதி வைத்து பக்திமார்க்கத்துக்கு வழிகோலுகிறார் இங்கு மணியக்காரராக இருக்கும் திரு.வி.கே. மகேந்திர ஆச்சாரியார். அதனைப் படித்து அதன் உட்பொருளில் மனதைப் பறிகொடுத்த பலரும் வாயார பாராட்டுவதோடு, நெஞ்சார மடல்கள் எழுதி பெருமைப்படுத்துகின்றனர். நம்மை நாமே சுயசோதனை செய்து கொண்டு ஒழுக்கம் பெற வழிகாட்டும் அவர் பணியைப் பாராட்டத்தான் வேண்டும்.

அடுத்து அனைவரும் ஒருமனதாகப் புகழ்ந்து பாராட்டுவது வேதாகம ஞான கலாநிதி திரு. டி. எஸ். சாம்பமூர்த்தி சிவாச்சாரியாரைத்தான். உற்சவ அம்பாள் சன்னதியில் லோக க்ஷேமத்துக்காக, உலக நலனுக்காக, அமைதிக்காக, ஆத்மார்த்தமாக சிவபூஜை செய்கின்றார். தினமும் காலையில், மிகவும் பெருமைவாய்ந்த, காணக் கிடைக்காத முப்பிரிவுள்ள வலம்புரி சங்கு வைத்து பூஜை செய்து அதன் மூலம் தீர்த்தம் தந்து பலரது குறைகளைத் தீர்த்து வைத்திருக்கிறார். அவர் திருக்கரத்தால் குங்குமம் பெற்று க்ஷேமம் அடைந்தவர் பலர். ஜாதி, மதம், ஏழை, பணக்காரர் என்ற வித்தியாசமின்றி அன்னையின் சன்னதியில் அனைவரும் சமமே என்று பாவித்து அவளின் அருளைப் பெற ஆசி தந்து வழிநடத்தும் சீலர் அவர். வெளிநாடுகளில் உள்ள கோவில்களுக்குச் சென்று தரிசிப்பதும், கும்பாபிஷேகம் செய்வதும் அவர் வழக்கம்.

"நம்பிக்கையுடன் அம்பாளைத் தொழும் எல்லா பக்தர்களுக்கும் தை பிறந்தால் கண்டிப்பாக வழி பிறக்கும். அனைவரும் மேன்மை அடைவது உறுதி" என்கிறார் சிவாச்சாரியார்.

**— பானுமதி**

# அம்பிகையைச் சரண் புகுந்தால்...

அம்மா! – இந்தச் சொல்லின் சுவையே தனி. பெருமை தனி. ஆதிபராசக்தியை அன்பின் நெகிழ்ச்சியால், ஸ்தோத்திரம் தெரியாதவர்கள் கூட அம்மா என்று அழைத்தால், ஸர்வலோக ஜகன்மாதா இறங்கி வந்து ரக்ஷிப்பாள். சண்டியாய், ராஜேச்வரியாய், காளியாய், புவனேஸ்வரியாய், பக்தர்களின் தியானத்திற்கேற்ப வழிபடப்படுகிறாள். அம்பிகையைச் சரண் புகுந்தால் அதிக வரம் பெறலாம் என்பது பாரதியாரின் திருவாக்கு. அந்த வகையில் அன்னையின் அருளமுதைப் பெற்று ஸ்ரீவித்யா உபாசனையில் விடிவெள்ளியாய், விளங்குபவர் பரமஹம்ஸ ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகள். அன்னையின் நாமத்தை உச்சரித்து உச்சரித்து கருணைப் பொங்கும் கண்களோடு, தாயை பூஜித்து பூஜித்து, அருளும் கரத்தோடு, திருமந்திரத்தை ஜபித்து ஜபித்து அதனால் விளங்கும் முக தேஜஸோடு இருக்கிறார் ஸ்ரீஸ்வாமிகள். ஐம்பது வருடங்களுக்கு மேலாக தனது இதய சிம்மாசனத்தில் வைத்து பூஜித்துப் போற்றிய யோகமாயா புவனேஸ்வரியை இன்று உலக ஜீவர்கள் உய்யும் பொருட்டும், வழிபட வேண்டியும் சென்னை அம்பத்தூர் ரெட்ஹில்ஸ் சாலையில் கங்கை நகர்ப் பகுதியில் கள்ளிக்குப்பம் பஸ் ஸ்டாப் அருகில் ஸ்ரீபரத்வாஜ ஆசிரமத்தில், பிரதிஷ்டை செய்து கொலுவீற்றிருக்கச் செய்திருக்கிறார்.

எல்லோராலும் விரும்பப்படுவது சுகம்.

துன்பத்தை யாரும் விரும்ப மாட்டார்கள். துக்கத்தைத் தாங்குவதற்கு சக்தியில்லை. மனிதனுக்கு பெரும் துயரத்தைக் கொடுப்பது வியாதிதான். ருணம்-ரணம்-மரணம்- இம்மூன் றும் மனிதனுக்கு வேதனை தருவதாகும். ருணம்-கடன், ரணம்-நோய், மரணம்-இறப்பு. இம்மூன்றும் ஏதோ ஒருவிதத்தில் மனிதனை வந்தடைகிறது. வாட்டுகிறது. வாட்டுகிற வியாதியாலும், படுத்துகிற கடனாலும் கஷ்டப் படுகிறோம். தேவியின் அருள் இருந்தாலே ஒழிய ருணம், ரணம் இதன் உபாதைகளி லிருந்து விடுபட முடியாது. வாழ்வின் இன்னல் களிலிருந்தும், துன்பப் பிடியிலிருந்தும் யோக மாயா புவனேஸ்வரியைத் தரிசித்து மீண்ட வர்கள் அநேகம் பேர்கள். மீண்டும் வாழ்வின் வசந்தத்தை ஏற்படுத்தியிருக்கிறாள் புவனேஸ் வரி.

ஹிந்துஸ்தான் லீவரில் பணிபுரிபவர் சந்திரா. இவருக்கு ஐந்து தங்கைகள். ஐந்து பேருக்கும் திருமணம் நடக்க வேண்டும். குடும்பப் பொறுப்பு அத்தனையும் சந்திரா வுக்குத்தான். ஸ்ரீஸ்வாமிகளிடத்தில் தஞ்சம் புகுந்தார் சந்திரா. "மாலை வேளைகளில் ஐந்து தங்கைகளையும் துர்கா ஸஹஸ்ரநாமத்தை பாராயணம் பண்ண கூட்டி வா. ஸ்வர்ண மங்கள கௌரி பூஜை செய்து மஞ்சளை தரு கிறேன், முகத்தில் பூசி வரச் சொல். விவாஹம் நடக்கும்" என்றார். நம்பிக்கை, பக்தி மிகுந்த சந்திரா, நாற்பத்தெட்டு நாட்கள் தொடர்ந்து பாராயணத்திலும், பூஜையிலும் கலந்து கொள்ள, வருடம் ஒரு தங்கைக்குத் திருமணம் நடந்து இன்று மனம் பூரித்துப் போய் இருக் கிறார்.

எப்போதும் தண்ணீரில் நனைவது. துப்பிக் கொண்டேயிருப்பது. யாரோ ஏதோ காதில் சொல்வது போல் இருக்கும். நன்றாக படித்துக் கொண்டிருந்து கல்லூரி செல்லும் மாணவன் சுப்ரமண்யத்திற்கு இப்படியொரு நிலை. திடீரென இந்த மாற்றம் ஏன் வந்தது என்று புரியவில்லை சுப்ரமண்யத்தின் பெற்றோருக்கு. ஸ்ரீஸ்வாமிகளின் அருள் பற்றி அறிந்து சுப்ர மண்யத்தின் சித்தபிரமை நிலையை விளக்கு கின்றனர். சப்தசதி பாராயணம் செய்து, சண்டிதேவி ஆவரண பூஜை நடத்தி, பூஜை யில் வைத்த புனித நீரை சுப்ரமண்யத்தின் தலையில் ஊற்றி வேள்வி பஸ்மத்தை ஸ்ரீஸ்வாமிகள் தருகிறார். இன்று சுப்ரமண்யம் ஒரு தனியார் கம்பெனியில் வேலை பார்க் கிறார். இப்படி எத்தனையோ பேருக்கு அருள் வழங்கும் ஆனந்தவாரியாய், சுகமளிக்கும் சுக வாரியாய் இருக்கிறாள் புவனேஸ்வரி.

இவள் பேரரசர்கள் வணங்கும் மகாராணி, அரச பதவியை இவள் வழங்குவதினாலே ஸ்ரீமகாராக்ஞி. இவளுக்கு மேல் எவரும் இல்லையாகையால் இவளே மாதாராணி. ராஜ்ய பரிபாலனம் இவள் நடத்துவதால் மந்த்ரிணி என்றெல்லாம் போற்றப்படுகிறாள். இத் தேவியை வணங்கக்கூடிய சிறப்பு நாட்கள் பௌர்ணமி, அஷ்டமியாகும். பௌர் ணமி நாளில் இங்கே அறுபத்துநான்கு வித மான அபிஷேகம் நடக்கும், பழச்சாறு, நானா வித பழங்களால் அபிஷேகம், அன்னாபி ஷேகம், குங்குமாபிஷேகம் என திருமஞ்சனம் நடக்கும். பின் முத்தங்கி அலங்கார ஸேவை யில் காட்சித் தருவாள். இம்மாதிரி மூன்று பௌர்ணமியை தரிசிப்பவர்களுக்கு வித்தை வரும், நற்புத்தி வரும், புத்திர சம்பத்து வரும் என்பது புவனேஸ்வரி ஸ்வாமிகளின் அருள் மொழியாகும்.

பரமஹம்ஸ ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமி கள் இப்போதும் சென்னை திருவல்லிக் கேணியிலுள்ள இருபத்து மூன்றாம் இலக்கம், அனுமந்தராயன் கோயில் தெருவில் மாலை ஐந்து மணியிலிருந்து ஏழு மணி வரை பக்தர் களுக்கும், மெய்யன்பர்களுக்கும் தரிசனம் தரு கிறார். அவர் வழியில் வருகின்ற ஸ்ரீபாரத்வாஜ ஸ்வாமிகளும் அத்தனை பூஜை பாராயணங் களிலும் பங்கேற்று நடத்தி வருகிறார். "ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம்" - இது ஸ்ரீ புவனேஸ்வரியின் மந்திரம், இதை சொல்லுங்கள் எல்லோர்க்கும் க்ஷேமம். ராஜமாதா ஸ்ரீபுவனேஸ்வரி அபய வரதத்தோடு ஆசிரமத்தில் அடியார்களை ரக்ஷிக்க உதார குணத்தோடு ஸேவை சாதிக் கிறாள். அவளது திருவடித் தாமரைகளைத் தொழுவோம்!

**— புவனா**



நெல்லிக் காய் அதிகம் கிடைக்கும் காலம் இது. நெல்லிக் காயை ஆவியில் வேகவைத்து, மிக்ஸியில் அரைத்து சர்க்கரைப் பாகில் கலந்து ஜாம் மாதிரி செய்து தோசை, இட்லி, சப்பாத்தி எல்லாவற்றிற்கும் தொட்டுக் கொள்ளலாம். நெல்லிக்காயைக் காய வைத்து பல நாள் பாதுகாக்கலாம். இது வேகவைத்தாலும், காய வைத்தாலும் இதிலுள்ள சத்துக்கள் மாறுவதில்லை. வைட்டமின் சி மிகுந்த சத்துள்ள ஓர் உணவாகும்.

- ஜானகி




# COMPREHENSIVE CARDIAC SERVICES

- CORONARY ANGIOPLASTY
- ATHERECTOMY CORONARY STENTING
- VALVULOPLASTY
- PACE MAKER IMPLANTATION
- CORONARY BYPASS SURGERY
- VALVE REPAIR & REPLACEMENT
- OPEN HEART OPERATIONS ON CHILDREN
- ANEURYSM REPAIR
- CLOSED HEART OPERATIONS




## TAMILNAD HOSPITALS

Cheran Nagar, Madras - 601 302
Ph : 2375221. Fax : 044-2375229

| | |
|---|---|
| **ADYAR CITY CENTER**<br>30, 1st Main Road, Gandhi Nagar,<br>Madras - 600 020. Ph : 4914013, 4919778 | **ADAMBAKKAM FAMILY CLINIC**<br>3, Vellalar Street,<br>Madras - 600 088. Ph : 2340182 |

**INFORMATION CENTERS**

| | | | |
|---|---|---|---|
| **TAMBARAM**<br>115, Mudichur Road,<br>Madras 600 045.<br>Ph : 2367908 | **TIRUVANNAMALAI**<br>3, Unnamalai Amman Nilayam,<br>Tiruvannamalai 606 601 | **SALEM**<br>25-D, Ramakrishna Road,<br>Opp: L.R.N. Bus Stop,<br>Salem 636 007 | **KARAIKUDI**<br>364, Sekkalai Road,<br>Karaikudi 623 001,<br>Ph : 33073, 22715 |
| **ERODE**<br>372-E E.V.N. Road,<br>(Mettur Road)<br>Erode 638 009.<br>Ph : 216727 | **COIMBATORE**<br>185, Ravindranath Layout,<br>New Siddhapudur,<br>GP Hospital Back Side,<br>Coimbatore 641 044. Ph : 432074 | **TRICHY**<br>A-18, 1st Floor,<br>XI Cross Main Road,<br>Thillai Nagar,<br>Trichy 620 018. Ph: 32049 | **TIRUPUR**<br>199 Union Mill Road,<br>Tirupur - 641001. |

# இந்த மாதம் எப்படி?

## மேஷம்:



*அசுவினி, பரணி, கிருத்திகை 1-ம் பாதம்*

குடும்பத்தில் அமைதியான சூழ்நிலை இருக்கும்.
பிணக்குகள், பிரச்னைகள் தோன்றினாலும் உடனுக்கு
டன் சரியாகி விடும். இந்த நிலை நீங்கள் பணி புரியும் இடத்திற்கும் பொருந்தும். கண்
சற்று பாதிப்புக்கு ஆளாகி பின் சரியாகலாம். நீங்கள் 50 வயதுக்கு மேற்பட்டவர்களாக இருந்
தால் தோல் சம்பந்தமான பிரச்னை ஏற்படும். இரும்பு, இரேனைட்கல் மற்றும் எரிபொருள்
துறையினர் பண நெருக்கடியிலிருந்து சற்று விடுபடலாம். கொடுத்த இடத்தில் எதிர் பார்க்கும்
இடங்களில் பண வரவு உண்டு. விநாயகருக்கு அருகம்புல் சாற்றி விநாயகப் புராணம்
படியுங்கள். தந்தை வழியில் உங்களுக்குச் சேர வேண்டிய பிதுரார்ஜித சொத்து சம்பந்தமான
வழக்கில் உங்களுக்கு வெற்றி ஏற்படும். இதற்குச் சுமூகமான நிலையிலேயே தீர்வு காண்பீர்கள்.
ராகு ஒரு வாகனம் வாங்கும் வாய்ப்பினைத் தருவார். எண் கணிதப்படி அதற்குரிய பதிவு
எண் உங்கள் பிறந்த தேதிக்கு ஏற்பட அமைவது நன்று. குருபலம் கூடி வந்துள்ளதால்,
திருமணம் கூடி வர வாய்ப்பு உண்டு. அரசு அதிகாரிகளுக்குப் பதவி உயர்வுடன் பொறுப்பு
களும் அதிகமாகும். கணவன் மனைவி இருவரும் ஒரே இடத்தில் பணிபுரிபவர்களானால்
பதவி உயர்வை ரத்து செய்யச் சொல்லி கேட்பது நல்லது. இல்லையெனில் சற்று
பிரிந்திருக்கும் சூழ்நிலை ஏற்படும். அல்லது நீங்கள் இருக்கும் இடத்திலேயே கூட அத்தகைய
உயர்வு வரலாம். இப்படியொரு நிலை ஏற்பட்டால், பதவி உயர்வை மறுக்காது ஏற்றுக்
கொள்ளுங்கள். பிரச்னை ஏதும் ஏற்படாது. திருமணத் தடங்கல் ஏதேனும் உண்டாக
கேது காரணமாக அமையலாம். அதனால் வைடூரியக் கல் மோதிரம் தற்காலிகமாக
அணியலாம். 7ம் தேதி பிறந்தவர்களானால் நிரந்தரமாகவே அதை அணியலாம்.
தேர்தலில் பங்கு பெறும் இந்த ராசிக்காரர்களுக்குச் சூரியன் ஆட்சி உச்சம்
பெற்றிருந்தால் வெற்றி நிச்சயம்.

## ரிஷபம் :



*கிருத்திகை 2,3,4-ம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2-ம் பாதங்கள்*

திருமணத்திற்காகத் தயாராக இருந்தும், சென்ற
குருபலத்தில் கைகூடி வராத திருமணம், இந்த மாதத்தில் சுக்கிர பலம்
காரணமாகக் கைகூடி வரும். குரு உதவவில்லை என்றாலும், ஆட்சியில்
உள்ள காரணத்தால் தடை ஏதும் செய்ய மாட்டார். கேதுவின்
உதவியும், மாதத்தின் பிற்பகுதியில் சூரியன் உதவியும், யோக
காரகனாகிய சனியின் ஆட்சி நிலையும் உங்களுக்குப்
பல விதங்களில் அனுகூலமாக இருக்கும். அது
பதவி உயர்வோ, அல்லது தொழில் ஒன்றை
ஸ்தாபிக்கவோ கூட உதவலாம். மாத
ஆரம்பத்தில் மாமன் வகையி
னரின் உறவு குழப்பத்தை
யும், வீண் அவ

பிப்ரவரி '96

கடந்த 50 ஆண்டுகளில், தவணை முறைத் தொழில் (Hire Purchase) ஏகப்பட்ட மாற்றங்களைக் கண்டிருக்கிறது. ஆனால், சில முக்கியமான விஷயங்கள் மட்டும் மாறவே இல்லை.

எடுத்துக்காட்டாக, இன்வெஸ்ட்மென்ட் டிரஸ்ட் ஆஃப் இந்தியாவில் (ITI) தழைத்தோங்கி இருக்கும் திடநம்பிக்கை மற்றும் சேவைமிக்க பாரம்பரியம். கடந்த 50 ஆண்டுகளாக எங்கள் மதிப்பு மிக்க நிறுவனர் திரு. C.M. கோத்தாரி அவர்களின் முன்னோக்குக் கொள்கைகளால் எங்களது வணிகத்தின் ஒவ்வொரு அம்சமும் செயலூக்கம் பெற்றுள்ளது. ஒரு நிதி நிறுவனம் நீண்ட காலத்துக்கு தழைத்தோங்கி இருக்க ஒரு மதிப்புயர்ந்த சொத்து என்னவெனில், அதன் வாடிக்கையாளர்களின் திட நம்பிக்கைதான் என்பதை அவர் உறுதிபடக் கடைப்பிடித்து வந்தார். வாடிக்கையாளர்களுக்கு செய்யப்படும் சேவையை ஆழ்ந்த பொறுப்புடன் செய்வதுதான் வெற்றிக்கு வழி என நம்பினார்.

**ITI– *50 ஆண்டு திட நம்பிக்கை மற்றும் சிறந்த சேவை***

இந்த ஆண்டு ITI, திட நம்பிக்கை மற்றும் சிறந்த சேவை செய்யும் பாரம்பரியத்தின் பொன்விழாவைக் கொண்டாடுகிறது. லீசிங், பிக்செட் டெபாசிட்டுகள், மர்ச்சென்ட் பாங்கிங், மியூச்சுவல் ஃபண்டுகள், மற்றும் ஹயர் பர்ச்சேஸ் உள்பட எல்லா துறைகளிலும் நாங்கள் ஒரேசீரான வளர்ச்சியையும் சாதனைகளையும் குறிக்கும் பொன்னான 50 ஆண்டுகளைக் கொண்டாடுகிறோம். இந்த ஆண்டு ITI, முன்னேற்றத்தைக் குறிக்கும் 50 ஆண்டுகளை அதே வழியில் பொன்விழாவாகக் கொண்டாடுகிறது.



தூறையும் கொண்டு வரலாம். கண்ணும் பாதிக்கப்படலாம். பொருளாதாரத்தில், மாத ஆரம்பமே பற்றாக்குறையைக் காட்டும். வீண் அலைச்சல், எதிர் பார்த்த இடத்தில் ஏமாற்றம், என பல வகையில் சூரியன், இராகு ஆகியவர்கள் இடைஞ்சல்களை உண்டாக்கினாலும், இரண்டாம் இடத்தையும், 4ம் இடமான சுகஸ்தானத்தையும் மற்றும் 12ம் இடத்தையும் குரு பார்ப்பதால் எல்லாவற்றையும் சமாளிக்கும் ஆற்றலைப் பெற்று, எதிலும் வெற்றி வாகை சூடி வருவீர்கள். கவலை வேண்டாம்.



## மிதுன ராசி :

*மிருகசிரிஷம் 3,4-ம் பாதங்கள். திருவாதிரை, புனர்பூசம் 1, 2,3-ம்பாதங்கள்.*

சப்தம ஸ்தானத்திலிருந்து சந்திரனை குரு பார்க்க, சுக்கிரன் 10ல் உச்சம் பெற்று நிற்க, செவ்வாய் முதல் வாரத்தில் உச்சம் பெற, ஒரு உன்னதமான நிலையில் உங்கள் கோட்சாரம் இருப்பது உண்மைதான். ஆனால் பலன் எப்படி? உங்கள் முயற்சியைப் பொறுத்துத்தான் பலன் ஏற்படும். ஏனெனில் கொடுப்பதற்கென்று சில கிரகங்கள் சஞ்சரிக்கும் வேளையில் தடுப்பதற்கும், கெடுப்பதற்கும் கூட சில கிரகங்கள் கோட்சார ரீதியில் இருக்கின்றனவே! எனவே எவர்க்கும் எந்த விதமான வாக்குறுதியையும் தராதீர்கள். தந்து விட்டு தடுமாறும் நிலையும் வேண்டாம். அரசுப் பணியில் உள்ளவர்களுக்கு மேலதிகாரிகளால் கெடுபிடி அதிகம் ஏற்படும். ஆனால் உச்சகிரகங்கள் உங்களுக்குக் கட்டாயம் உதவும் நிலை உண்டு. அதனால் நீங்கள் அடையும் பெருமையைக் கண்டு, உங்கள் பழைய ஆசிரியர் ஒருவர் உங்களுக்கு வாழ்த்து கூறுவார். அத்துடன் ஒரு முக்கியமான பிரச்னையில் உங்களது ஆலோசனை சம்பந்தப்பட்டவர்களுக்கு உதவுவதுடன், உங்களது அறிவாற்றலுக்கு உரிய பெருமையையும் சம்பாதித்துக் கொண்டு விடுவீர்கள். அரசுப் பணிக்காக காத்திருப்பவர்களுக்கு அது சம்பந்தமான அனுகூலமான செய்தி கிடைக்கும். சுப நிகழ்ச்சிக்கு வாய்ப்பு உண்டு. திருமணம் கைகூடி வரவில்லையே என எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருப்பவர்களுக்கு இந்த குருப் பெயர்ச்சிக்குப் பிறகு கைகூடி வரும்நிலை சென்ற டிசம்பரிலிருந்தே உண்டு. அவ்வாறு நடக்கவில்லையே எனக் கேட்கக் கூடிய நிலையில் உள்ளவர்கள் ருக்மணி ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவுக்கு எழுதிய, "சுந்தராங்கா எனத் தொடங்கும் கடிதத்தினை மனப்பாடம் செய்து, ஸ்ரீ கிருஷ்ணரின் படத்திற்குப் பாரிஜாத மலரை மாலையாக அணிவித்து மூன்று முறை பாடி, முறைப்படி அப்படத்திற்கு நீராஞ்சனம் முதலானவற்றை 7 சனிக்கிழமைகள் செய்து வாருங்கள்.



## கடக ராசி :

*புனர்பூசம் 4-ம் பாதம், பூசம், ஆயில்யம்.*

கடக ராசிக்காரர்களுக்கு குரு ஜீவனஸ்தானத்தைப் பார்ப்பதால் ஏதேனும் ஒரு தொழில் அமையும். சுக்கிரன் கட்டாயம் ஏதேனும் கட்டிட சம்பந்தமான தொழிலோ, அல்லது தரகு, கமிஷன்-ஏஜென்சி மூலமோ உதவுவார். மாதத்தின் முதல் 7 நாட்களுக்குள் செவ்வாய் கூட அவ்வாறு நில சம்பந்தமான கொள் கிரயம், விற்கிரயம் மூலம் ஆதாயத்தைத் தரலாம். குரு ஆட்சியில் இருப்பதால் குழந்தைகள் சம்பந்தமானதொரு பிரச்னை தீரலாம். அது சம்பந்தமாக முயன்றால் பலன் கிடைக்கும். ராகு உங்களுக்கு உதவும் நிலையில் உள்ளதாலும், விரயதானத்தையும், பத்தாமிடத்தை குரு பார்ப்பதாலும், நிதி நிலைமையில் அபிவிருத்தி ஏற்படும். இந்த இராசியில் பிறந்து நிதி நிறுவனத்தில் பணி புரிபவர்களுக்குச் சற்றுச் சோதனை மிக்க மாதமாக அமையும். கேதுவால் அப்படிப்பட்டதொரு தொல்லைக்கு ஆளாகலாம். ஆயுதம், இரசாயன சோதனைச் சாலையில் உள்ள திராவகம், எரி பொருள், மின்சாரம் இவைகளைக் கையாளுபவர்கள் தக்க பாதுகாப்புடனும், கவனக் குறைவுக்கு இடம் அளிக்காதவாறும் கையாளுங்கள். விபரீதமாக ஒன்றும் நடந்து விடாது என்றாலும் முன் ஜாக்



உலகிலேயே பெண்களுக்கு கட்டாய ராணுவப் பயிற்சி அளிக்கும் நாடு இஸ்ரேல் தான்.

– 'பல்சுவை துணுக்குகள்'
நூலிலிருந்து : வயலூர் பா. குணா.

சிறிதளவு நமுத்துப்போன கார்ன்ஃப்ளேக்ஸை வாணலியில் ஒரு கரண்டி எண்ணெயை விட்டு லேசாக வறுத்துவிட்டு சிறிது உப்பு, மிளகாய்ப் பொடி, ஆம்சூர்பொடி தூவி கலந்து சாப்பிட்டுப் பார்த்தேன். தூள்! இப்போது இந்த வகை எண்ணெய் குடிக்காத சிப்ஸ் எங்கள் வீட்டில் ரொம்பப் பிரபலமாகிவிட்டது.

- உஷா



கிரகத்துடன் இருப்பது நல்லதல்லவா? 8-ல் உள்ள சனி ஏதேனும் கெடுதல் செய்து விடுவாரா! எனக் கேட்பவர்களுக்கு ஒரே பதில் இரும்பு அகலில் நல்லெண்ணெய் திரி ஏற்றி மேற்கு நோக்கி வையுங்கள் என்பதுதான். சுக்கிரனுக்காக ஸ்ரீ இலக்குமியையும், இராகுவுக் காகத் துர்க்கையையும் சரணடைந்து மனம் கசிந்துருக தோத்திரங்கள் செய்யுங்கள். இது எத்துறையினர்க்கும், எப்பாலவர்க்கும் பொருந் தும்.



## சிம்ம ராசி:

*மகம், பூரம், உத்திரம் 1-ம் பாதம்.*

5ல் குரு ஆட்சி. 7-ல் சனி ஆட்சி, முதல் பாதத்தில் 6-ல் செவ்வாய் உச்சம், புதன் 6-ல் மாதம் பூராவும் சஞ்சாரம். அதிலும் மாதத்தின் முற்பகுதியில் சூரியனுடன் இருப் பது, 8-ல் சுக்கிரன் உச்சம்-என்றிருக்க பாம்புக் கிரகங்கள், என்ன செய்ய முடியும்? என்னதான் எதிர்ப்புகள் வரட்டுமே! எத்தனைதான் அவ

எடுத்தெறிந்து பேசுதல், அலட்சியம் ஆகிய விஷயங்களைக் கலப்பதற்கும் வாய்ப்பு என் பதை நினைவில் கொண்டு, உங்கள் நாக்குக்கு அதிகம் சுதந்திரம் கொடுத்து விடாதீர்கள். பகலில் பக்கம் பார்த்து பேசுங்கள். இரவில் அதுவும் கூடாது இந்த பொன் மொழிகள் முக்கியமான இடத்தில் உள்ளவர்கள் கடை பிடிக்காத காரணத்தால்தான் அவதிக்கு ஆளா கிறார்கள். எனவே இவைகளை மனதில் கொண்டு செயலாற்றுங்கள். வசதி படைத்த வர்கள் துர்க்கைக்குரிய சண்டி ஹோமமும், லக்ஷ்மிக்குரிய லக்ஷ்மி ஹோமமும் செய்யலாம். அனைத்து முயற்சியிலும் வெற்றி கிடைக்கும்.



## கன்னி ராசி :

*உத்திரம் 2,3,4-ம் பாதங்கள் ஹஸ்தம், சித்திரை 1,2ம் பாதங் கள்.*

சனி, செவ்வாய், சூரியன் ஆகியவர்கள் கும் பத்தில் இருக்கும் நாட்களில் உங்களுக்கு அனைத்துச் செயல்களிலும் வெற்றியைத் தர

லாவது உத்தியோகம் வாங்கித் தருவதாகவோ கூறி உங்களிடம் பணம் கேட்டால், கட்டாயம் ஏமாந்து விடுவீர்கள். ஏனெனில் பாம்புக் கிரகங்களும், உங்கள் ராசி நாதனும் அத்தகைய நிலையை உருவாக்கலாம். உணவு, குடிக்கும் பானம் மற்றும் கேளிக்கை இவ்விஷயங்களில் சற்று கட்டுப்பாடுடன் இருப்பது நல்லது. துர்க்கையையும், லட்சுமியையும் துதிப்பது நல்லது. உங்கள் வாழ்க்கைத் துணைவரின் உடல் நலம் இலேசாக பாதிக்கப்படலாம். அல்லது பேச்சில் சற்று கோபம் தெரியலாம். அதற்கேற்ப நடந்து கொள்வது நலம்.



## துலா ராசி :

*சித்திரை 3, 4ம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1,2,3–ம் பாதங்கள்.*

இராசி நாதன் உச்சம் பெற்றிருந்தாலும் 6–ம் இடத்தில் இருக்கிறாரே? ஆனால் கேதுவுடன் சம்பந்தம். எனவே தடங்கல்கள் ஏற்பட்டாலும் வெற்றியில் முடியும். பணத்தட்டுப்பாடு ஏற்படும். மனக்கட்டுப்பாட்டுடன் சிக்கனத்தை கையாள வேண்டியதுதானே! நீங்கள் ஒரு இலக்கியவாதியானால், உங்கள் பேச்சுக்கு அல்லது படைப்புக்குப் பரிசுகளும், பாராட்டுக்களும் வரலாம். அதே சமயம் விளம்பரமும் கிடைக்கலாம். நான்கில் உள்ள புதன் குடும்ப சுகத்திற்கு உத்திரவாதம் அளித்தாலும், உங்கள் வாழ்க்கைத் துணைவரின் உடல் நலம் உங்களுக்குச் சற்று கவலை அளிக்கலாம். புத்திரர்களாலும் சற்று மனச் சஞ்சலம் ஏற்படலாம் என்றாலும் குருவின் பார்வை 7–ம் வீட்டில் இருப்பதால் எதுவும் எல்லை மீறிப் போகாது. பிரயாணத்தைக் குறைத்துக் கொள்ள வேண்டிய கால கட்டம். ஆனால் அதே சமயம் வெகு தூரப் பிரயாணம் ஒன்றுக்கு வாய்ப்பு உண்டு என்பதையும் மறக்கலாகாது. இலாபஸ்தானத்தையும், ஒன்பதாம் வீட்டையும் குரு பார்ப்பதால் எத்தகைய எதிர்ப்புகள் வந்தாலும், எல்லாவற்றையும் வென்று, எதிர் நீச்சல் போட்டு கரை ஏறி விடுவீர்கள். எதிர் பாராத தன லாபம் கூட உண்டு. ஆனால் பெரும்பாலான கிரகங்கள் தொல்லை தரும் நிலையில் உலாவினாலும், முக்கியமான மூன்று இடங்களுக்குக் குருபார்வை இருப்பதால் விபரீதமாக ஏதும் ஏற்பட்டு விடாது. அடிக்கடி இரத்த அழுத்தத்தைப் பரிசோதியுங்கள். தோள் பட்டை, வயிறு இவை பாதிக்க வாய்ப்பு உண்டு. எனவே சற்று ஆகாரத்தில் எச்சரிக்கை தேவை. துலா ராசியில் பிறந்தவர்கள் பேச்சில் பொருள் இருக்கும். அறிவுடையதாக இருக்கும். ஆனால் உங்களது முன்கோபத்தை சற்றே தள்ளி வைக்க வேண்டிய மாதம். அரசுப்பணி, வங்கி மற்றும் தனியார்த்துறையில் இருக்கும் இருபாலவரும் எந்த பேப்பரையும் நன்கு கவனித்துப் படித்தறிந்த பிறகே கையெழுத்திடுதல் நல்லது. ஸ்ரீ லக்ஷ்மி குபேர பூஜை அல்லது மேதா விலாச தக்ஷிணா மூர்த்தி ஹோமம் செய்வது நல்லது.



## விருச்சிக ராசி :

*விசாகம் 4–ம் பாதம், அனுஷம், கேட்டை*

மாத ஆரம்பத்தில் எதிர் பாராத தனலாபம் உண்டு. நில சம்பந்தமான தொரு நீதி மன்ற வழக்கில் உங்களுக்கு வெற்றி கிடைக்கும். இந்த மாதத்தில் புது முயற்சிகளை ஆரம்பிக்கலாம். அரசியல் வாதிகளுக்கு எதிர் வரும் தேர்தல்களில் வெற்றி வாய்ப்பு உண்டு. பயன்படுத்திக் கொள்ளுங்கள். எனினும் மாதத்தின் பிற்பகுதியில் செவ்வாய் உங்களுடன் சேருபவர்கள் மூலமாகவே உங்களுக்குத் தொல்லையை உண்டாக்கலாம். எனவே சேரிடம் அறிந்து சேர் எனும் முதுமொழியை நினைவில் கொள்க. குறிப்பாக அரசியலில் ஈடுபடுவோர், கூட்டு வியாபாரம் நடத்த விரும்புபவர்கள் நேராத கூட்டணியுடன் சேராமல் இருப்பது நல்லது. உடல் நிலை சற்று பாதிக்கப்பட்டு சரியாகலாம். சுக்கிரனால் சுகமுண்டு. உரிய நேரத்தில் பெரியதொரு உதவியை உங்களது நண்பர் ஒருவர் செய்யக் காத்திருக்கிறார். வீட்டில் நடக்க இருக்கும் சுப நிகழ்ச்சிக்குக்கூட அவரது உதவி கிடைக்கலாம். குழந்தைகளைப்



சின்னக் குழந்தைகளுக்கு விளையாட்டு போல, அவர்கள் பெயர், தாய் தந்தை பெயர்கள், உத்தியோகம், ஆபீஸ் முகவரி, வீட்டு அட்ரெஸ், டெலிபோன் நம்பர் ஆகியவற்றை சொல்லிக் கொடுத்துவிட்டு தினமும் ஓரிரு முறையாவது கேட்டுக்கொண்டிருங்கள். ஒரு அவசர நேரத்தில் மனதில் பதிந்த இந்தத் தகவல்கள் அவர்களுக்கு பேருதவியாக இருக்கும்.

— உஷா

துணிகளில் பால் பாயிண்ட் பேனாவின் இங்க் பட்டு கறையாகி விட்டால், அந்த இடத்தை யூடி கொலோனில் நனைத்த பஞ்சால் ஓரிரு முறை அழுத்தித் துடைக்கவும்.

கறை... போயே போச்சே!

— உஷா



பற்றிய கவலை வேண்டாம். ஏனெனில் 4-ல் உள்ள சனி உங்களைக் குடும்பத்திலிருந்து பிரித்துத் தூர அனுப்பியதால் ஏற்பட்டுள்ள பிரிவு அத்தகைய கவலையைத் தரும். ஆனால் குருவின் அருள் உள்ளதால் நீங்கள் இந்த மாதக் கடைசிக்குள் இத்தகைய தொல்லையிலிருந்து விடுபடலாம். உங்களது பழம்பெரும் ஆசிரியர் ஒருவரையோ, அல்லது ஆன்மீகத்தில் சிறந்து விளங்கும் மகான் ஒருவரையோ தரிசிக்கும் வாய்ப்பு வர இருக்கிறது. ஆலங்குடிக்கும் போய் வரலாம். சனியின் காரணமாக சஞ்சலம் ஏற்பட்டாலும், ஒரு விதத்தில் உங்களது நேசத் தன்மையை மற்றவர்கள் நன்கு புரிந்து கொள்ள ஏற்றதொரு சந்தர்ப்பமாகும். 11ம் இடத்து இராகு இன்னும் பத்து மாதங்களில் பலமானதொரு தனலாபத்தைத் தர இருக்கிறார்.



## தனுசு ராசி :

*மூலம், பூராடம், உத்திராடம் 1-ம் பாதம்.*

மாதத்தின் பிற்பகுதியில் எதிர்பார்த்த இனங்களில் வெற்றி உண்டு. அரசு பணிக்கோ, அல்லது தனியார் துறையினரால் கேட்கப்படும் பணிக்கோ முயற்சி செய்யலாம். புத்திரர்களால் மன மகிழ்ச்சி உண்டு. எதிர்பார்க்கும் திருமண நிகழ்ச்சி அல்லது ஏற்பாடுகள் நல்ல முறையில் நடந்தேறும். உங்களின் நீண்டகால அபிலாஷைகளில் ஒன்றான வீடு வாங்க அல்லது நிலம் வாங்கிக் கட்ட செய்யும் முயற்சி கட்டாயம் கைகூடி வரும். கிரகப் பிரவேசம் கூட நடக்கலாம். இது எல்லா கலைத் துறையினர்க்கும் பொருந்தும். கலைஞர்கள், நடிகர்கள் மற்றும் விளையாட்டுத் துறையினரைப் போன்ற அனைவருக்குமே நல்லதொரு மாதம். அரசுத் துறை, அரசியல் துறை ஆகியவைகளில் பணிபுரிபவர்களுக்கு அலைச்சல், மன உளைச்சல் அதே சமயம் பாராட்டும் கிடைக்கக் கூடிய சகடயோக நிலை. பாம்புக் கிரகங்கள் உடல் நிலையையும் பாதிக்கலாம். உங்களுடன் சேர்ந்துள்ளவர்கள் மூலமே உங்களுக்கு உபத்திரவமும் உண்டாக்கலாம். எனவே இடமறிந்து இணைப்பாருங்கள். குறிப்பாக இந்த வரிகள் அரசியல், வியாபாரம், மற்றும் கூட்டுத் தொழில் இவை சம்பந்தப்பட்டவர்கள் நன்கு கவனித்து செயல்படவே எழுதப்படுகின்றன. தக்ஷிணாமூர்த்தி அஷ்டகத்தில் உள்ள 10 ஸ்லோகங்களைப் படிப்பது நல்லது. தேர்தலில் பங்கு பெற தீர்மானித்தவர்கள் கணபதி ஹோமத்தையும், ஸ்ரீ சண்டி ஹோமத்தையும் ஒரு தனியான இடத்தில் சம்பந்தப்பட்டவர்களை மட்டும் வைத்துக் கொண்டு செய்வது நல்லது. கட்டாயம் வெற்றி கிடைக்கும்.



## மகர ராசி :

*உத்திராடம் 2, 3,4-ம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2-ம் பாதங்கள்.*

சனி ஆட்சியிலும், சுக்கிரன் உச்சத்திலும், கேது 3லும் இருப்பது உங்களுக்கு உகந்த நிலையில் முக்கிய கிரகங்கள் சஞ்சரிக்கின்றன என மேலெழுந்த வாரியாகத் தெரியும். உள்ளபடியே உங்களுக்கு சனி, கேது, சுக்கிரன் ஆகியவர்களது தசாபுக்தி நடக்குமானால், அதுவும் மேற்படி கிரகங்கள் உள்ள இராசி ஒன்றினை இலக்கணமாகவும் கொண்டிருந்தால், கட்டாயம் நீங்கள் நினைத்தது நடக்கும். எதிர்பார்ப்பது கிடைக்கும். மற்றபடி வேறு கிரகங்கள் உகந்த நிலையில் சஞ்சரிக்கவில்லை. எனவே எதையும் யோசித்து செயல்படுங்கள். சுப நிகழ்ச்சிக்கு வாய்ப்பு உண்டு. ஆனால் அது நடந்தாக வேண்டுமே எனத் தாறுமாறாக வாக்குறுதி கொடுத்து, அந்த நிகழ்ச்சி நடந்தேறினால் போதும் என்ற நிலையில் முயன்றால், முடிவில் மன வருத்தமும், சங்கடமுமே மிச்சமாகும். கருப்பு, சிவப்பு, வெண்மை கலந்த திரியை, நல்லெண்ணெய், நெய், ஆமணக்கு எண்ணெய் சமமாகக் கலந்த கலப்பு எண்ணெயில் தோய்த்து, இரும்பு அகல் அல்லது கரண்டியில் வைத்து மேற்கு முகமாக இருக்கும்படி தீபம் ஏற்றுங்கள்.

நம்புபவர்களுக்கும், நம்பிக்கையுடன் தீப ஒளி ஏற்றுபவர்களுக்கும் என்றும் ஏற்றமே உண்டு. இதைத் தவிர வேறு மாற்றமே இல்லை.

இந்தப் பரிகாரமே போதும். சுப நிகழ்ச்சியா, மகனோ, மகளோ பரீக்ஷையில் நன்கு தேற வேண்டுமா, பணி செய்யும் இடத்தில் பாராட்டு வேண்டுமா? அனைத்தும் உங்களுக்குக் கிடைக்கும். மற்றபடி ஜாமீன் கையெழுத்து போட வேண்டாம். உணர்ச்சி வசப்பட்டு கடன் வாங்கியாவது எந்த வித யாத்திரையும் எதற்காகவும் மேற்கொள்ள வேண்டாம். இக்கணம் உங்களுக்குத் தேவையானது சிக்கனம்.



## கும்ப ராசி :

*அவிட்டம் 3, 4ம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1,2,3-ம் பாதங்கள்.*

இராசி நாதன் என்னவோ தன்னை யாரும் அசைக்க முடியாது என்ற நிலையில் ஆட்சியில் உங்கள் இராசியில் மாதக் கணக்கில் இருக்கிறார். உச்ச சுக்கிரன் உகந்ததை தருவார். 11-ல் உள்ள குரு உங்கள் அபிலாஷைகளை நிறைவேற்றலாம். ஆனால் மற்ற கிரகங்கள் மாறாக வல்லவா சஞ்சரிக்கிறார்கள். இதனால் ஏற்றத் தாழ்வுகள் நிறைந்த மாதமாக இருக்கும். எனவே ஏற்றமான சூழ்நிலை வரும்போது மற்றவர்களைத் துச்சமாக நினைப்பதோ, தாழ்வான நிலை வரும்போது கட்சி மாறுவதோ வேண்டாம். நம்பிக்கையை மட்டும் விட்டுவிட வேண்டாம். கும்ப ராசிக்காரர்களுக்கு உள்ள பண்பாடுகளிலேயே- நீங்கள் மற்றவர்களிடம் காட்டும் மரியாதை, நம்பிக்கை, எதையும் பொறுமையுடன் ஏற்று, எந்த சவால்களையும் சமாளிக்கும் தன்மை ஆகியவை எதிரிகளையும் உங்கள் பால் ஈர்க்கும் வன்மை கொண்டவை. அதனால்தான் உங்களில் பெரும்பான்மையினர் வயது உயர்ந்தாலும் இளமை குன்றாமல் காணப்படுவீர்கள். இந்த மாதத்தில் சுக்கிரனால் எதிர் பாராத தனலாபமும், எடுத்த காரியத்தை முடிக்கும் திறனும், குடும்பத்தில் குதூகலமும் நிறைந்து காணப்படும். உங்கள் குழந்தைகளைப் பற்றிய கவலை வேண்டாம். சனீஸ்வர ஸ்தோத்திரம், மிருத்யுஞ்சய ஸ்தோத்திரம் ஆகியவற்றைக் கற்றறிந்த வேத வித்துக்களின் மூலம் உபதேசம் பெற்றுச் சொல்லிப் பாருங்கள். துன்பங்கள் ஏதேனும் எந்த விதத்தில் வந்தாலும் அவை தூசாகிப் போய், மனம் லேசாகி விடும்.



## மீன ராசி :

*பூரட்டாதி 4-ம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி*

இராசி நாதன் 10-ல் ஆட்சி. சுக்கிரனோ இராசியிலேயே உச்சம். புதனோ 11-ல் இலாப நிலையில் சஞ்சாரம். மாத ஆரம்பத்தில் சூரியனும் செவ்வாயும் கூட உதவும் நிலை. வேறென்ன வேண்டும். குடும்பத்திற்கு - மன அமைதிக்கு- ஆனால் பாம்பு கிரகங்களும், (சனீஸ்வரன் ஆட்சியில் இருக்கிறாரே) மாதத்தின் பிற்பகுதியில் செவ்வாயும், சூரியனும் விரயத்திற்கு வருவதும், உங்களுக்குகந்த நிலையில் சஞ்சரிக்கவில்லை. எனவே பொருளாதார தட்டுப்பாடு கட்டாயம் ஏற்படும். ஆனால் அதே சமயம் அவைகளைச் சமாளிக்க வருமானமும் வரும். எனவே செலவினங்களை கட்டுப்பாட்டுடன் செய்வது நல்லது. ஆனால் முதலில் அதிகம் செலவழித்தால் மானம் அழியும் என்ற முதுரையைச் சிந்தித்து அதற்கேற்ப நடவுங்கள். ஏனெனில் மீன இராசிக்காரர்களுக்கு தயாள குணம், பரோபகார சிந்தனை அதிகம் உண்டு. அதனால் தான் பல சமயங்களில் நீங்கள் உங்கள் நிலை தெரிந்தே எல்லை மீறி செலவழித்துப் பின் உள்ளுக்குள் மனம் புழுங்குவீர்கள். வாக்கு கொடுக்க வேண்டாம். பணி புரியும் இடத்தில் புகழ்ச்சிக்கு மயங்கி விடாதீர்கள். அத்தகைய நிகழ்ச்சி ஒன்று மாதத்தின் பிற்பகுதியில் நடக்கும். அதனால் கவனித்துச் செயலாற்றுங்கள். சுப நிகழ்ச்சி கட்டாயம் கைகூடி வரும்.

**- ஜெயலட்சுமி கிருஷ்ணன்**

---

குழந்தைகளால்தான் பெரியவர்களுக்குள் சண்டை வரும் என்பது எல்லோருக்கும் தெரியும். வெளியிடங்களுக்குச் செல்பவர்கள் குழந்தைகளை பிறர் வீட்டில் விட்டுச் செல்லுமுன் எவ்வாறு சமர்த்தாய் நடந்து கொள்ள வேண்டும் என்பதை அவர்களுக்கு சொல்லித் தந்தால் உங்கள் பெயரையும் மதிப்பையும் காப்பாற்றுவார்கள்.

- கி. மஞ்சுளா



# பெண்களின் இன்றைய மாற்றம் திருப்திதான்...! ஆனால்...

**எ**ளிமையான பருத்திப் புடைவை. எங்கு சென்றாலும் தோள்களில் தொங்கிக் கொண்டிருக்கும் இரண்டு கனமான சணல் பைகள் (அவற்றினுள்ளே தனது இயக்கத்தின் கொள்கைகள் மற்றும் நிகழ்ச்சிகள் அடங்கிய தாள்கள்). சராசரிக்குச் சற்றே குறைவான உயரம். மிகவும் இயல்பான புன்னகைத் தோற்றம்.

இவரா மேதா பட்கர்? பிரம்மாண்டமான நர்மதை அணைத் திட்டத்திற்கு எதிராக ஓர் இயக்கத்தையே உறுதிப்படுத்தி இந்தியத் தலைநகரிலிருந்து உலக வங்கி வரை தன் குரலைக் கேட்கச் செய்தவர். இவர்தானா?

ஆனால் போகப் போக அவரது அழுத்தமான கோணங்கள் வெளிப்படத் தொடங்கின. தேநீர்க் கோப்பைகள் வந்ததும் லேசாக முகம் சுளித்தார். "ப்ளாஸ்டிக் டம்ளர்களைப் பயன்படுத்துவதிலே எனக்கு இஷ்டமில்லே" என்றார் மனிதாபிமானம், சுற்றுப்புறச் சூழல் ஆகிய இரு பிரிவுகளிலும் ஒரு பெரும் சக்தியாக உருவெடுத்திருக்கும் இந்தப் பெண்மணி. இக்காலத்துப் பெண்களின் மனத் துணிவுக்கும், போராட்ட குணத்திற்கும் ஓர் எடுத்துக்காட்டாக விளங்கும் இவரிடம் பேசப் பேச அவரது 'மேதா' விலாசம் விளங்கியது.



**• உங்களின் 'மற்ற முகங்கள்' தெரியாத அளவுக்கு 'நர்மதா அணைத் திட்டத்துக்கு எதிர்ப்புக் குரல் கொடுப்பவர்' என்கிற அளவில்தானே நீங்கள் அதிகம் அறியப்படுகிறீர்கள்?**

"நர்மதா அணைத் திட்டத்தை எதிர்ப்பது என்பது ஒரு குறியீடு அவ்வளவுதான். தொழில் நுட்பம், விஞ்ஞானம் என்ற பெயரில் எங்கெல்லாம் மனிதாபிமானம் செத்துப் போகிறதோ, அங்கெல்லாம் எதிர்ப்புக் குரல் கொடுக்க எங்கள் தேசிய மக்கள் இயக்கம் தயார். இமாசலப் பிரதேச சுற்றுப்புற சூழல் காக்கும் அமைப்பு, போபால் விஷவாயு பாதிப்பாளர்களுக்குக் குரல் கொடுக்கும் அமைப்பு, மீனவப் பெண்மணிகளின் அமைப்பு இப்படிப் பல அமைப்புகள் எங்கள் இயக்கத்தில் சேர்ந்து கொண்டு பணியாற்றுகின்றன.

நர்மதா அணைத் திட்டத்தை எடுத்துக் கொள்வோம். அது பொதுமக்களின் நன்மைக்காக மட்டுமே திட்டப்பட்டதென்றால் அதன் அத்தனை உண்மைகளையும் மக்கள் நடுவில் வைத்திருக்க வேண்டுமே. ஆனால் உண்மை நிலை அது அல்ல. இந்த அணைத் திட்டத்தால் பல ஆதிவாசிகளும், ஏழை மக்களும் தாங்கள் பரம்பரையாக வாழ்ந்து வரும் ஒதுக்குப் பகுதியிலிருந்து வெளியேற்றப்படுவார்கள். "இந்தத் திட்டத்தால் பாதிக்கப்படப் போவது நாங்கள்தான். ஆனால் இதைச் செயல்படுத்தத் துவங்குவதற்கு முன்பே எங்கள் அமைப்புகளைக் கலந்து ஆலோசிக்க வேண்டுமென்று ஏன் ஆட்சியாளர்கள்







நினைக்கவில்லை?" என்று ஓர் ஆதிவாசி கேட்டபோது நான் மனம் நொந்து போனேன். பொதுத் தேர்தல் வரும் போது மட்டும் இந்த அரசியல்வாதிகளால் நாட்டின் மூலை முடுக்கெல்லாம் சென்று மக்களை சந்தித்து வோட்டுக் கேட்க முடிகிறது. ஆனால் இதுபோன்ற முக்கியமான பிரச்னைகளில் சம்பந்தப்பட்டவர்களின் கருத்துக்களைக் கேட்க முடிவதில்லை!

**• குஜராத் போன்ற மாநில மக்களுக்கு அணைத்திட்டம் மிகவும் பலனளிக்கும் என்கிறார்கள். ஆகவே குடிபெயர வேண்டிய மக்களுக்கு ஏற்ற வகையில் வேறு பகுதிகளில் இடம் ஒதுக்கித் தந்தால் அதை இப்படி முழுமையாக மறுக்கத்தான் வேண்டுமா?**

"(கோபமான குரலில்) எதற்காக அவர்கள் இடம் பெயர வேண்டும்? மிகக் கேவலமான பொருளாதார நிலையில் கைக்கும் வாய்க்குமான ஒரு பிழைப்பை நடத்தி வருகிறார்கள் அந்த அப்பாவிகள். அவர்களை இடம் பெயரச் சொன்னால் அவர்கள் இழப்பது அந்த நிலப் பகுதியை மட்டுமில்லை. அவர்களது சமூக வாழ்க்கை, நதியோடு இணைந்த அவர்களது கலாச்சாரப் பின்னணி, கூட்டு வாழ்க்கை இத்தனையையும் அவர்கள் இழப்பார்கள்.

நிலத்தை கையகப்படுத்திக் கொள்ளும் சட்டம் அரசுக்குச் சாதகமாக இருப்பது உண்மைதான். ஆனால் ஒரு ரயில்பாதை போடுவதற்கோ, மருத்துவமனையைக் கட்டுவதற்கோ இந்தச் சட்டத்தைப் பயன்படுத்துவது வேறு; இப்படி லட்சக்கணக்கானவர்களை பாதிக்க விடும் வகையில் அதைப் பயன்படுத்துவது வேறு."

**• உங்கள் தந்தை ஒரு தொழிற்சங்கத் தலைவர் என்று அறிகிறோம். இந்தப் போராட்ட குணம் உங்களிடம் வளர்வதற்குக் காரணமாக அவரைச் சொல்லலாமா?**

"என் அப்பா வசந்த் ஹனோல்கர் மட்டுமல்ல என் அம்மாவும் கூட அவரது அலுவலகத்தின் தொழிற் சங்கத்தில் தீவிர பங்கு வகித்தவர்தான். நடுத்தரக் குடும்பம் என்றாலும் மிக மிக எளிமையாக வளர்க்கப்பட்டேன். நகை ஆசை, சினிமா மோகம் இவையெல்லாம் அபத்தமானவை என்பதை சிறுவயதிலேயே நான் உணர முடிந்ததற்கு என் பெற்றோரின் வாழ்க்கை முறையும் ஒரு காரணம். முக்கியமாக ஜாதி மத பேதம் இல்லாமல் மற்றவர்களிடம் கலந்து பழக வேண்டும் என்பதை வலியுறுத்தினார்கள். வாழ்க்கை என்பது பதவி உயர்வோ, பணமோ அல்ல என்ற விதையை என் மனத்தில் அவர்கள் ஊற வைத்தார்கள். பம்பாயில் டாட்டா விஞ்ஞான நிறுவனத்தில் சமூகவியல் துறையில் வேலை செய்து கொண்டிருந்த நான் 'பாபா அம்தே'வின் கொள்கைகளைக் கேள்விப்பட்டவுடன் அந்த இயக்கத்திற்கு என்னை முழுவதுமாக அர்ப்பணித்துக் கொள்ள முடிந்தது அப்படி வளர்க்கப்பட்டதனால்தான்."

**• உங்கள் கணவரைப் பற்றி......**

"தனிவாழ்வைப் பற்றிய கேள்வி



சில சமயம் நன்றாக 'கல்லுபோல' இருக்கும் உள்பாவாடைகளின் ஓரங்கள் மட்டும் இற்று நைந்து போய் அசிங்கமாகியிருக்கும். ஓரத்தில் மூன்று இஞ்ச் அகலத்துக்குக் கத்தரித்து எறிந்து விட்டு ஒரு 'லேஸ்'ஸையோ, ஃப்ரில்லையோ வைத்துத் தைத்துவிட்டால் பாவாடைக்கு புது உயிர் கிடைத்து விடும்.

- உஷா

---

களைத் தவிர்த்து விடலாமே."

**• அப்படி அல்ல. பொதுவாழ்வில் அந்த அளவு ஈடுபட்டிருக்கும் உங்களால் குடும்ப வாழ்வில் கவனம் செலுத்த முடிகிறதா என்பதற்காகக் கேட்டோம்.**

"பொதுவாழ்வில் தன் மனைவி ஈடுபடு வதையோ, அதில் அவளுக்குப் பெரும்புகழ் கிடைப்பதையோ, அந்தப் புகழால் எந்தவித வருமானமும் கிடையாது என்ற நிலை உருவா னாலோ அதைக் கணவன் ஏற்றுக் கொள்வ தில்லை என்பதுதான் பொதுவான நிலை. என்னைப் பொருத்தவரை இனி மனித உரிமைப் பிரச்னைகளுக்காகக் குரல் கொடுப் பது தான் என் வருங்கால வாழ்வில் முழுக் குறிக்கோளாக இருக்கும்."

**• இந்தியப் பெண்கள் முன்னிலிருந்து மாறுபட்டிருக்கிறார்களா? அவர்களைப் பற்றிய உங்களது கருத்து என்ன?**

"இயற்கையைப் பாதுகாக்கப் பெண்கள் முன்வர வேண்டும். சொல்லப்போனால் ஒரு பெண்ணின் விருப்பமான கலைகளிலிருந்து, அவளது பிரசவம் வரை இயற்கைக்கும் அவ ளுக்கும் உள்ள தொடர்பு மிக நெருக்கமானது. ஆனால் அதோடு நின்று விடாமல் கூடவே கொஞ்சம் சமூகக் கண்ணோட்டத்தையும் வளர்த்துக் கொள்ள வேண்டும். இதற்காகப் பெரிய சுற்றுப்புறச் சூழல் வீராங்கனை என்று பெரிய போராட்டத்தில் ஈடுபட வேண்டும் என்பதில்லை. நீரை வீணாக்காமல் பயன் படுத்துவது முதல் சமுதாயக் குறைபாடு களையோ பிரச்னைகளையோ சந்திக்க நேர்ந்தால் அதைச் சரி செய்ய வேண்டியவர் களுக்கு புகார் செய்வது முதல் பலவிதங்களில் பெண்கள் ஆக்கபூர்வமாகச் செயல்படலாம்.

பெண்களின் போக்குகளில் ஏற்பட்டு வரும் மாற்றம் திருப்திகரமாகவே இருக்கிறது. ஆனால் சிறுமை கண்டு பொங்கும் குணம் - அது சமுதாயம் தொடர்பானதாக இருந்தாலும் - அவர்களுக்கு மேலும் வளர வேண்டும்."

**• எதிர்த்தரப்பிலிருந்து பலவித அச் சுறுத்தல்களை சந்திக்க வேண்டியிருக்குமே என்ற அச்சம் கூடப் பல பெண்களை பொதுப் பிரச்னைகளில் தீவிரமாக இறங்க விடாமல் தடுக்கிறது. நீங்கள் கூட இதுபோல் பலவித எதிர்ப்புகளை சந்தித்திருப்பீர்களே?**

"தாராளமாக. ஆனால் ஒன்று. எதிர்ப்பு களை உறுதியோடும் சாந்தத்தோடும் எதிர் கொண்டால் அவை தானாக மங்கிப் போய் விடும் என்பதுதான் என் அனுபவமாக இருந் திருக்கிறது."

**• தெளிவாக ஆக்கபூர்வமாகப் பேசும் உங்களால் ''ஜலசமர்ப்பண்'' போன்ற உணர்ச்சிக்குவியலான அறிவிப்பை எப்படிச் செய்ய முடிந்தது? சொல்லப் போனால் 'ஒரு பெண்மணியைத் தலைவியாகக் கொண்ட இயக்கம் இது போன்ற பகுத்தறிவில்லாத அறிவிப்பைச் செய்ததில் ஆச்சரியம் என்ன?' என்று கூட ஒரு நாளிதழ் இதைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தது!**

"குறிப்பிட்ட அந்தச் சூழலை மனத்தில் வைத்துக் கொண்டுதான் அந்த அறிவிப்பைப் பற்றி நீங்கள் மதிப்பீடு செய்ய வேண்டும். தவ றான புள்ளி விவரங்களைக் கொடுத்து ஏமாற் றிய மத்திய மாநில அரசுகள், எங்கள் இயக்கத் தின் உண்மை பொங்கும் ஆவேசக் குரல்கள் கிராமங்களிலிருந்து உலக வங்கி வரை எதி ரொலிக்கத் தொடங்கியதைக் கண்டதும் வெவ்வேறு தவறான விளம்பரங்களை (அணை திட்டத்தால் எந்த அளவு பயனடையலாம் என்பதைப் பெரிதுபடுத்தப்பட்ட புள்ளி விவரங்களோடு) தொடர்ந்து நாளிதழ்களில் வெளியிடத் தொடங்கின. விளம்பரங்கள் மூலம் பதிலடி கொடுக்க எங்களிடம் பணவசதி கிடையாது. பேச்சுவார்த்தைகளின் போது அணைத் திட்டத்தை மறுபரிசிலனை செய்ய ஒத்துக் கொண்ட நீர்வளத்துறை அமைச்சர் கூட்டா கடைசி நிமிடத்தில் அந்த ஒப்பந்தத்தில் கையெழுத்திட மறுத்து விட்டார்.

மணிபெல்லி கிராமப் பகுதியில் அணை நீர் அதிக அளவில் திறந்து விடப்படும் என்ற அறிவிப்பு வந்ததும் எங்கள் இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் "ஜலசமர்ப்பண்" (அதாவது அந்த வெள்ளத்தில் எங்களையே அழித்துக் கொண்டு போராட்டக் குரலை



# Supreme
## FURNITURE



## பல மாடல்கள்! பல வண்ணங்கள்!



OSCAR Rs. 425/-

**சுப்ரீம்**
வழங்கும்
விழாக்கால
அணிவகுப்பு



FLORENCE Rs. 475/-



RUBY Rs.330

**20க்கும்**
மேற்பட்ட பல
மாடல்கள்
(தனித்தனி
விலைகளில்)



FLORIDA Rs. 450/-

கல்யாண மண்டபங்கள், சேர்கள் வாடகைக்கு விடுபவர்கள், ஹோட்டல்கள், கல்லூரிகள், பள்ளிகள் ஆகியவற்றிற்கு 100ம் அதற்கு மேலும் வாங்குவோருக்கு சகாய விலையில் தரப்படும்.

பிராந்திய அலுவலகம் : **தி சுப்ரீம் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்,**
12, முதல் குறுக்கு தெரு, C.I.T. காலனி, மைலாப்பூர், சென்னை-600 004. Ph: 4998263, 4998271

## 'சுப்ரீம்' ISO 9002 சான்றிதழ் பெற்ற நிறுவனம்

விநியோகஸ்தர்கள் : • **விஜய் இண்டர்நேஷனல்,** 58, மண்ணடி தெரு (முதல் மாடி) மண்ணடி, சென்னை-1 (Ph:512972/517499) • **ஹண்டர்ஸ்,** 42, செம்புதாஸ் தெரு, சென்னை-1(Ph:5230489/5227631) • **ஸ்ரீ ராம் டிரேடர்ஸ்,** 239, லால்பகதூர் சாஸ்திரி தெரு, பாண்டிச்சேரி-1 (Ph: 31717) • **N.K.V ஏஜென்ஸீஸ்,** 182-J, S.N. ஹைரோடு, (சென்ட்ரல் தியேட்டர் எதிரில்) திருநெல்வேலி-1 (Ph: 337029) • **ஹண்டர்ஸ்,** 95A, ரேஸ் கோர்ஸ் ரோடு, (K.G.தியேட்டர் எதிரில்) கோயமுத்தூர்-18 (Ph: 210753) • **இண்டோ சுப்ரீம்,** 51, மேல மாசி வீதி, மதுரை-1 (Ph:38460/38550) • **சுப்ரீம் ஏஜென்ஸீஸ்,** சாந்தம் அனெக்ஸ், 135, சாரதா காலேஜ் ரோடு, சேலம்-16 (Ph:446970) • **காவேரி டிரேடர்ஸ்,** 122, பார்க் ரோடு, மூலப்பட்டறை, ஈரோடு-3 (Ph: 210934) • **ஒயிட் & கோ,** 367, அவினாசி மெயின் ரோடு, K.K.C.காம்ப்ளெக்ஸ், திருப்பூர்-2. (Ph: 746300/745079)) • **ஸ்ரீ கலா ஏஜென்ஸீஸ்,** 75, துக்காம்பாளையம் ரோடு, கும்பகோணம்-1 (Ph: 21650) • **ஜெனரல் எக்யுப்மெண்ட்ஸ்,** 4 வாட்டர் டாங்க் காம்ப்ளெக்ஸ், மேற்கு பொலிவார் ரோடு, திருச்சி-8 (Ph: 32710) • **ஆதி சக்தி டிரேடர்ஸ்,** 88, ரத வீதி, கரூர்-1. (Ph: 22176/40329) • **ஜீவா எலக்ட்ரானிக்ஸ்,** 38, பாரதிதாசன் தெரு, அறந்தாங்கி-16 (Ph: 20064) • **V.V. எண்டர்பிரைஸஸ்,** 16-N, சாரதி மேன்ஷன், வேலூர் - 4. (Ph: 24179) • **காஞ்சி கிளாஸ் & பிளைவுட்,** 9,M.A.S. காம்ப்ளெக்ஸ், ரங்கசாமி குளம் அருகில், காஞ்சிபுரம்-1 (Ph: 24215) • **ராணே ஃபர்னிசர்ஸ்,** 7, வரதராஜுலு காம்ப்ளெக்ஸ், (கடை எண்-5) மெயின்ரோடு, திண்டுக்கல்-1 (Ph: 30588)

**Supreme** வேண்டும் என்று கேட்டு வாங்குங்கள்

வெளிப்படுத்துவது) முடிவை எடுத்தோம். அணைநீரின் அளவு அதிகரிக்கப்படுவதற்கு முன்பே எங்களைக் கைது செய்யப் பல முயற்சிகள் எடுக்கப்பட்டன. காவல் துறையினர் குவிக்கப்பட்டனர். ஃப்ளட்-லைட்டுகள் நிறுவப்பட்டன. முதல் முறையாக அந்தக் கிராமத்துக்குத் தார் சாலை போடப்பட்டது! நாங்கள் தலைமறைவானோம். சரியான நேரத்தில் ஜலசமர்ப்பண் ஆவதாக முடிவு செய்தோம். நீச்சல் தெரிந்த சில உறுப்பினர்கள் தங்கள் கைகளைக் கயிறால் கட்டிக் கொண்டு போராட்டத்தில் கலந்து கொள்வதாகத் தீர்மானித்தோம். எங்களையே - எங்களது மன உறுதியை நாங்கள் முழுவதுமாக அறிந்து கொள்ளக் கூட அந்த சந்தர்ப்பம் உதவியது.

அன்று இதனால் அந்த கிராமம் மூழ்கவில்லை. நான் தெரியாமல்தான் கேட்கிறேன். சாத்விகமான முறையில் உண்ணாவிரதம் இருந்து ஒருவர் இறக்கலாம். துப்பாக்கி குண்டுகள் பொழியலாம் என்ற நிலையிலும் ஓர் இயக்கம் அமைதி ஊர்வலம் நடக்கலாம். இவற்றையெல்லாம் அறிவுபூர்வமானது என்று ஒத்துக் கொள்பவர்கள் எங்களின் ஜலசமர்ப்பண் அறிவிப்பை மட்டும் குறை சொல்வது என்ன நியாயம்?" (சென்ற ஆண்டுத் தொடக்கத்திலேயே நர்மதா அணைத்திட்டத்திற்கு தற்காலிகத் தடை வாங்கியிருக்கிறது இவர்களது இயக்கம். ஜனவரி 27ந் தேதி அன்று வழக்கு நீதிமன்றத்திற்கு வருகிறது).

• **மங்கையர் மலர் வாசகர்களுக்கு ஏதாவது ஆலோசனை கூற விரும்புகிறீர்களா?**

"எங்கள் இயக்கம் சமீபத்தில் வெளியிட்டுள்ள பத்து அம்ச செயல்பாட்டில் "ஆண் பெண் பாகுபாட்டின் அடிப்படையில் ஏற்றத் தாழ்வுகள் உருவாவதை நாங்கள் எதிர்க்கிறோம். பெண்களின் சக்திக்கு மதிப்பு அளிக்கப்பட வேண்டும். எல்லாத் துறைகளிலுமே முடிவெடுப்பது, அதை நடைமுறைப்படுத்துவது ஆகிய எல்லாக் கட்டங்களிலுமே இருவருக்குமே சம உரிமை அளிக்கப்பட வேண்டும்" என்பதும் ஒன்று. இதை அடைய முயற்சிப்பதும், தான் அந்த நிலையை அடைந்திருந்தால் மற்றப் பெண்கள் இந்த நிலையை அடைய உதவ வேண்டும் என்பதையுமே எனது வேண்டுகோளாக எடுத்துக் கொள்ளுங்களேன்."

**பேட்டி - ஜி.எஸ்.எஸ்.**

# இம்மாத இல்லத்தரசி

**சமையல் கூப்பன்**

**பொருள் : வைட்டமின் 'சி'  கடைசி தேதி : 15.2.1996**

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச்சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்



● பொங்கல் திருநாளில் பார்க் டவுன் பெனிபிட் பண்ட் பொங்கல் திருநாளையும், ஸ்ரீலஸ்ரீ சுவாமி ஓங்காரநந்தா அவர்களின் 'ஆன் மீகத்தில் ஆயிரம்' எனும் புத்தக வெளியீட்டு விழாவினையும் நடத்தியது. மாண்புமிகு நீதிபதிகள் கே. எஸ். பக்தவத்சலம், ராஜு, கே. இளங்கோவன், ஐ.ஏ.எஸ்., ஆர். ராஜகோபாலன் ஐ.பி.எஸ்., வள்ளல்பெருமான் எம்.பி., மஞ்சுளா ரமேஷ், கல்வியாளர் ராஜாபாதர் ஆகியோர் கலந்து கொண்டு பேசினார்கள். கந்தகோட்ட சீனியர் அறங் காவலர் பாலசுப்ரமண்யத் திற்கும், எழுத்தாளர் கலைமாமணி விக்கிரமன் அவர்களுக்கும் விழாவில் மாமனிதர் விருது வழங்கப்பட்டது.

● 'எம்.எஸ். பெய்துல்மால்' எனும் இஸ்லாமிய அமைப்பு ஏழை எளிய பெண்களுக்காக தையற் பயிற்சி நடத்தி வருகிறது. பயிற்சியினை முடித்த முதற் குழுவிற்கு சான்றிதழ் தரும் விழா அண்மையில் நடந்தது. மங்கையர் மலர் ஆசிரியர் மஞ்சுளா ரமேஷ் கலந்து கொண்டார். ஜமால் இப்ராஹீம், அப்துல் ரஹீம், ஜஹாங்கீர் ஆகியோர் இப் பயிற்சி வகுப்புக்களுக்கு உறுதுணையாக இருப்பதுடன், எல்.கே.எஸ். சையது அகமது தங்களுக்குப் பெரும் வழிகாட்டியாக உதவும் கரங்களாக விளங்குகிறார் என்றனர். பயிற்சி முடித்த பெண்கள் தயாரித்திருந்த ஆடைகளில் அமைந்திருந்த டிசைன்கள் கண்ணைக் கவரும்படியாக இருந்தது.

● எப்போதும் பரபரப்பாக வீர விளையாட்டுக்களை நடத்திக் காட்டும் ஹுசைனி தைப் பொங்கல் அன்று ஆயிரத்திற்கும் மேற்பட்ட பாறாங்கற்களை தன் மார்பு மேல் வைத்து உடைக்கச் செய்தார். ஒவ்வொரு பாறாங்கல்லும் ஒவ்வொரு சமூகக் கெடுதலைக் குறிப்பதாகவும், அதனை உடைத்தெறிவதாகவும் தெரிவித்தார். காலை ஐந்தி லிருந்து மாலை வரை நடை பெற்ற கின்னஸ் ரெகார்டில் இடம்பெறப் போகும் இந் நிகழ்ச் சியினைப் பார்க்க திரளான கூட் டம் கூடியிருந்தது. ஹுசைனி குறிப்பிட்ட சமூகக் கெடுதி களில் வரதட்சணை, பெண் களுக்கு இழைக்கப்படும் கொடு மைகள் ஆகியவையும் அடங்கும்.



# திருமண மலர்

## மணமகள் தேவை

● செங்குந்த முதலியார், 33, 167 செ.மீ., பரணி நட்சத்திரம், சொந்தத் தொழிலில் நல்ல வருமானமுள்ள மணமகனுக்கு அதே இனத்தில் குடும்பப்பாங்கான, படித்த, வேலையில்லாத, 27 வயதுக்கு அதிகமில்லாமல் உள்ள மணமகள் தேவை. பெட்டி எண் : 12081

● திருநெல்வேலி சைவ வேளாளர், வயது 36, 162 செ.மீ., சென்னையில் தனியார் இன்ஜினியரிங் நிறுவனத்தில் நிரந்தரப் பணி, மாத வருமானம் ரூ 2000/- சொந்த வீடு, சட்டப்படி விலக்கமில்லாத விவாகரத்தானவர். பணிக்குச் செல்லும் தகுதியுள்ள மணமகள் தேவை. பெட்டி எண் : 12082

● சைவ வெள்ளாளர், சைவம் பிரைவேட் கம்பெனி யில் ஆபீஸர், 31/160/7000 விசாகம் மணமக னுக்கு சைவ குருப் எதுவாக இருந்தாலும், படித்த, அழகான, பெண் தேவை. வேலையில் இருந்தால் சென்னைக்கு மாறுதல் பெறத்தக்கதாக இருத்தல் வேண்டும். பெட்டி எண் : 12083

● Alliance from graduate for Thengalai, Athreya, Chitra, 30 years Delhi settled Central Govt. boy, B.Sc, (M.Sc.,), Rs. 3200/- Subsect no bar. Reply with horoscope and complete details to Box No. 12084

● Vadama Boy Bharadhwaja Krithigai first padam 160 cms,36 years (B.A.) Govt. Local body typist 3000/- require suitable bride. Subsect no bar. Box No. 12085

● US employed BE, M.S. (USA) System Analyst, Telugu niyogi, 28/185 Koundinyasa Punarvasu seeks tall cum girl BE/MCA/M.Tech/Computer professional. Send horoscope details to Box No. 12086 Phone : 4837135

● Wanted educated, home-loving, cultured, Non-Koundinya, Kerala Vadamal, Iyer girls for handsome engineer, MBA, 31/175, unencumbered divorcee, well employed abroad. clean habits, affluent and extremely decent family background. Box No. 12087

● பிரஹசரணம், வாதூல கோத்திரம், மகம், வயது 30, உயரம் 5.5", நல்ல சிவப்பு, பி.காம்., டி.டி.பி. இன்சார்ஜ் ஆக வேலை பார்க்கும் வரனுக்கு நல்ல குடும்பப்பாங்கான அழகான படித்த பெண் தேவை. பெட்டி எண் : 12088

● Vellala/Arcot Mudliyar Govt/Private employed girl for handsome working partner Dip-holder Rs. 4500/- Poosam,fair, 29 years, 6 feet, Non.veg./2 Sisters one married, Mother alive, no demands. Box No. 12089

● வடாற்காடு வடமாள் தமிழ் ஐயர், பாரத்வாஜம், பூராடம் 29/165 பி.காம்., டில்லியில் பிரபல விளம்பரக் கம்பெனியில் பணிபுரியும் ரூ. 7500 மாதச் சம்பளம் பெறும் வரனுக்கு வடாற்காடு, செங்கல்பட்டு தென்னாற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த பட்டப் படிப்பு படித்து வேலையிலுள்ள அல்லது இல்லாத மணமகள் தேவை. பெட்டி எண் : 12090

● Mother Madhva Brahmin, father Naicker, boy Chithirai fair, 27, 5'.10" graduate doing PG employed Central Govt, seeks alliance from Madhva or Telugu Brahmin intercaste parentage, vegetarian, decent small family, girl below 24, 5'.5" graduate fair good looking. Reply with horoscope to Box No. 12151

● சாங்கிருதம் பிரஹசரணம், திருவாதிரை 28/180/6000 தனியார் நிறுவனம் மேனேஜர் சுத்த ஜாதகம், M.Com., PGDPM பட்டதாரி, வேலைக்குப் போகும் ஐயர் பெண் தேவை. பெட்டி எண் : 12152

● நாயுடு இனத்தில் சேர்ந்த வேலையில் இருக்கும் டாக்டர் எம்.பி.பி.எஸ்., வயது 29, உயரம் 165 செ.மீ., சிவப்பு நிறம், சொந்த வீடும், மற்றும் வசதியும் இருக்கும் மணமகனுக்கு அதே இனத்தைச் சேர்ந்த டாக்டர் இல்லை. நல்ல qualified post-graduate டிகிரி படித்து இருக்கும் குடும்பப்பாங்கான பெண் தேவை. ஜாதகத்துடன் நல்ல பெண்ணாகவும், குடும்ப விவரங்களுடனும் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் . 12340

● Wanted Non-Srivatsa bride for Vadagalai Boy, Gradaute, 30, Moolam, Rs. 3500/- employed in TVS Group in Bangalore. Thenkalai no bar. Reply with horoscope to Box No. 12341

● ஐயர், வடமாள், நைத்ருப காசியப கோத்திரம், கார்த்திகை 29, எஸ்.எஸ்.எல்.சி., மாதம் 3000/- பூராடம், 27, +2, 2500/- வருமானமுள்ள இரு சகோதரர்களும் தனியார் துறையில் வேலையில் உள்ளார்கள். இருவருக்கும் மேற்கண்ட பிரிவில் படித்த வேலையில் உள்ள பெண்கள் தேவை. பெட்டி எண் : 12342

● Alliance invited from Non-Srivatsa smart Iyer employed girl preferably Cent. Govt., Bank or LIC, below 24 years for fair handsome, IAF, employed, 27 years Swathi/6"/4500 p.m. Reply to Box No. 12345

● 29 வயதுள்ள, எம்.ஏ. பி.எட்., எம்.பில்., படித்த பார்வையற்ற வன்னிய இனத்தைச் சேர்ந்த மேனிலைப் பள்ளி ஆசிரியருக்கு குறைந்தது பத்தாவது படித்த பெண் தேவை. மாத வருமானம் ரூ. 4700/- பெட்டி எண் : 12346

● Tirunelveli Saiva Pillai Advocate, Madurai, age 36/ 168 cm., seeks educated Govt. employed bride. Rapport between boy and girl. Box No. 12347

● Kerala Iyer subsect Sankethi 35/182 good job but Limited Assets prefers spiritually inclined girls with family committment. Any subsect send horoscope to Bio-data. Specifying hobbies/Interests/Expectations. Box No. 12348

● கன்னட மாத்வ பிராமின், பலிகுநாடு, விஸ்வாமித்திரர் கோத்திரம், சுவாதி நட்சத்திரம், வயது 29, உயரம் 160 செ.மீ., எர்ணாகுளத்தில் பிரைவேட் கம்பெனியில் ரூ. 1500 சம்பளம் வாங்கும் பையனுக்கு அதே ஜாதியில் அழகான பெண் தேவை. பெட்டி எண் : 12349

● Vadamal, Bharadwajam, Aswini, BE (Computer) 25, 179 cm, Rs. 12000/- employed in Madras seeks alliance from well qualified, beautiful, Tamil Brahmin girl. Preferable professionally qualified. Subsect no bar. Box No. 12351

● Alliance invited for, Vadama, Kowsika, Mirugaseerisham, 27, 165, B.Sc., Computer Science (MBA) working in Muscut. Girls graduates and post-graduates between age 20 - 24. early reply with horoscope and photograph. Box No. 12352

● இந்து நாடார், 28, 175 செ.மீ., M.Sc., TMB பணிபுரி

யும் மணமகனுக்கு நிறமான, அழகான டிகிரி படித்த இந்து நாடார் பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப் பிக்கவும். பெட்டி எண் : 12354

● Alliance invited from graduate employed girls for Iyer Boy 29 years, Gowthama, Visagam, 165, 3500 with extra perks and good prospects working in NIIT, Madras. Subsect no bar. Box No. 12355

● சென்னையில் தனியார் நிறுவனத்தில் CAD designer, DCE, 175, 70, 31, மாநிறம், நல்லம், தற்போது வெளி நாட்டிலுள்ள வரனுக்கு கார்காத்தார் சைவப் பிள்ளை வகுப்பைச் சேர்ந்த நிறமான அழகுடைய பட்டதாரிப் பெண் தேவை. கம்ப்யூட்டர் படிப்பு உசிதம். பெட்டி எண் : 12356

● Engineer, Central Govt., Mudaliar, 36/161/7000 widower with 7 years son seeks fair, good-looking, widow girl, divorcee no bar. Box No. 12357

● Vanniyakula Kshatriya, 34 years, B.Sc., D.Pharm, Pooradam, 3rd padam, doing business of Pharmaceutical distribution and printing, wants a fair, home-loving graduate girl from good family of the same caste. Box No. 12358

● Vadama, Garga Chithrai, graduate, handsome, fair, bachelor, Iyer Boy, 42/160/9000 Clerk, Nationalised Bank, Madras seeks, fair graduate Iyer girls. Reply horoscope to Box No. 12359

● திருநெல்வேலி சைவப்பிள்ளை, வயது 35, 5.8'', பிரைவேட் லிமிடெட் மாத வருமானம் ரூ. 5000/- எல்.எல்.எல்.பி., நட்சத்திரம் ஆயில்யம் அரசு மற்றும் தனியார் துறையில் பணிபுரியும் மணமகள் தேவை. விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண் : 12360

● ஐயர் வடமாள், நைத்ருபகாஸ்யப, கிருத்திகை, +2, 29, 6 அடி எஸ்.பி.ஐ. வங்கியில் டைப்பிஸ்ட், வருமானம் 3700, நல்ல குடும்பத்தைச் சேர்ந்த படித்த வேலை பார்க் கும், பார்க்காத அழகான குடும்பப்பாங்கான பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பிள்ளை ஜாதக அமைப்பு. லக்னத்தில் ராகு/7-ல் கேது. பெட்டி எண் : 12361

● செங்குந்தர், பி.காம்., வயது 31, சம்பளம் 15,000 தற்போது மஸ்கட்டில் வேலை பார்க்கும் பையனுக்கு அதே இனத்தைச் சேர்ந்த மத்திய, மாநில அரசு அல்லது ஆசிரியை பணியில் உள்ள மணமகள் தேவை. ஜாதகம் மற்றும் உள்ள மணமகள் தேவை. ஜாதகம் மற்றும் இதர விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண் : 12364

● அரசுப் பணி, 4000/- டிகிரி, 163 செ.மீ., சைவ வேளாளர், சொந்த வீடுடைய மணமகனுக்கு பிராமின், சைவ வேளாளர், திருநெல்வேலி சைவம், சைவ முதலி யார், அரசுப் பணியில் உள்ள எங்கும் மாற்றிக் கொள் ளத்தக்க மணமகள் தேவை. ஜாதகம் அனுப்புக. பெட்டி எண் : 12365

● Madwa Kannada, Bharathwaja, Sravana 27,170, BE Project Leader in Multinational Software Company, USA seeks bride BE/MCA/PG (Science) beautiful and very good complexion with age profile 20-24. Box No. 12367

● வேலூர் துளுவ வேளாளர் முதலியார், 31, 175 செ.மீ., எம்.ஏ., படிக்கும், ஒழுக்கமான நல்ல தோற்ற முள்ள படித்த பண்புள்ள கௌரவமான குடும்பத்தைச் சார்ந்த பையனுக்கு படித்த நல்ல வசதியுள்ள குடும்பப் பாங்கான பெண் தேவை. தடைகள் ஏதுமில்லை. அனைத்து விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 12368

● Vadama Iyer, Srivatsam Sathayam, M.Com., CAIIB, Bank Officer very fair, slim, 35/175/10800 seeks suitable match sub-sects no bar. Employment preferred not must. Reply with horoscope and biodata to Box No. 12369

● Yadava Naidu, B.E./28/156 cm/7000/Thiruvadrai/ Associate Consultant, Madras based company seeks professional/graduate/post-graduate/bride/sub-sects acceptable. Reply horoscope bio-data to Box No. 12370

● Alliance invited from fair, good-looking graduate brides for Telugu Yadava groom, Native of Madras settled in Secunderabad. B.Com., (LLB), 26-165 cm, Central Govt. propertied. Correspond with horoscope to Box No. 12371

● Hindu, Adi-dravida, looking young, handsome, 35/162/10,000plus, M.Com., Teetotaller, divorcee without encumbrance, Bank Officer, seeks alliance from fair, good-looking girls. Caste no bar. Reply with bio-data. Box No. 12372

● ஐயர், கன்னடம், கௌசிக கோத்திரம், அரவத் ஒக்லு, கார்த்திகை, வயது 28, பி.எ.பி.எட்., அரசு உயர் நிலைப் பள்ளியில் நிரந்தர ஆசிரியராக ரூ. 3500/- வாங்குபவருக்கு மாறுதல் ஆகக்கூடிய நிரந்தர உத்தியோ கத்தில் இருக்கும்/சென்னையில் பிரபல தனியார் கம்பெனி யில் பணியாற்றும், வசதியான படித்த, கௌரவ மான குடும்பப்பாங்கான மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகம் மற்றும் விவரங்களுடன் விண்ணப் பிக்கவும். பெட்டி எண் : 12373

● தொழுவ/துளுவ வேளாளர் (பிள்ளை பட்டம்) எம்.ஈ., சீனியர் என்ஜினியர், 27 வயது, உயரம் 5'.6'', மாநிறம், சென்னையில் வேலையில் உள்ள மணமகனுக்கு, மாஸ்டர் டிகிரி (Arts/Engineering) or MBBS படித்த மணப்பெண் தேவை. ஜாதகம் மற்றும் முழு விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 12374

● Non-Kausika Vadama girl for 34, 173 Pooram, M.Com., boy employed and settled at Kanpur. Subsects acceptable. Reply to Box No. 12375

● ஐயர், ஸ்ரீவத்ஸ, சித்திரை வயது 29/170 செ.மீ., பி.எஸ்ஸி., சென்னையில் தமிழக அரசு, நிரந்தரப் பணி யில் மாதம் 3000/- சம்பாதிக்கும் பையனுக்கு அரசு/ தனியார் துறையில் பணிபுரியும் பெண் தேவை. ஜாதகம், குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்க. பெட்டி எண் : 12376

● Vadamal, Koundinya Gothram, Chithrai, 5.7'', fair, age 30, D.M.E., employed in Reputed Company at MAS, salary 4000, Draughtsman, Prefers fair, domestically trained slim girl. Simple marriage. Box No. 12377

● தமிழ் ஐயர், வடமாள் கௌண்டின்ய கோத்திரம், மகம், வடாற்காடு 28/155/5000 பம்பாயில் பப்ளிக் லிமிடெட் கம்பெனி வேலை பி.காம்., டிப்ளமோ இன் கம்ப்யூட்டர் வரனுக்கு பட்டப் படிப்பு படித்த வேலையில் உள்ள பெண் தேவை. ஜாதக விவரங்களுடன் பெட்டி எண் : 12378

● Wanted good looking bride, minimum graduate, liking to go to Varanasi, UP for Tamil Iyer boy Keralite Vadama, Kowsika, 30/170/3800 fair, Pooradom, decent family steno-grapher, Banaras Hindu University (Central govt) Varanasi. Subsect no bar. Early simple marriage. Reply to Box No. 12379

● Alliance invited for Thuluvavellal Mudaliar, State Govt. employed groom, fair, M.Com., B.Ed./24/163/3000 from slim, fair, unemployed girls below 21. Box No. 12380

● சென்னையில் சொந்த வீடுள்ள அகமுடையார் (முக்குலத்தோர்) வயது 32, டி.எம்.ஈ., மாத வருமானம் 28,000/- மஸ்கட் வேலை தற்போது. சென்னையில் நிரந்தர வேலை உண்டு. அதே இனத்தைச் சேர்ந்த மண மகள் தேவை. பெட்டி எண் : 12381

● Alliance invited from Vadagalai, Non-Srivatsa employed Bank/Insurance/Central/Public Sector fair bride for handsome Boy, Anusham PG/28/163/Insurance/4500 having Sevai Dosham. Horoscope to Box No. 12383

● Atreya, Avittam, 28, Vadamal, handsome, fair, M.Sc.,

திருமண மலர் பகுதியில் விளம்பரம் செய்யக் கட்டணம் ரூ. 100/- தொகையை, 'மங்கையர் மலர்' பெயருக்குச் சென்னையில் மாற்றலாகக்கூடிய டிமாண்ட் டிராப்டாக மட்டுமே அனுப்ப வேண்டும். மணியார்டரோ, போஸ்டல் ஆர்டரோ ஏற்றுக் கொள்வதற்கில்லை. ஒரு விளம்பரத்தில் ஒரு வரனுக்கு 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தர வேண்டும். திருமண மலர் பகுதியில் விளம்பரம் செய்பவர்களின் விலாசங்களைக் கொடுப்பதற்கில்லை. விளம்பரங்களுக்குப் பதில் அனுப்புபவர்கள், 'விளம்பரதாரர், பெட்டி எண் : C/o. மங்கையர் மலர், 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097' என்ற விலாசத்திற்கு அனுப்ப வேண்டும். தபால் பெட்டி எண்ணிற்கு வரும் கடிதங்களை அதற்குரிய விலாசத்திற்கு 15 நாட்களுக்கு ஒருமுறை அனுப்பி வைக்கப்படும். தபால் செலவிற்குத் தனிக் கட்டணம் எதுவும் கிடையாது. இந்த இதழில் பிரசுரமாகும் பெட்டி எண்களுக்குப் பதில்கள் மார்ச் '96 31-ஆம் தேதிக்குள் எங்களுக்கு வந்து சேர வேண்டும். திருமண தகவல் நிலையங்கள் அனுப்பி வைக்கும் தபால்களை எங்கள் அலுவலகம் ஏற்றுக் கொள்வதில்லை. தனிப்பட்ட எந்தக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

(Hons), B.E. (Hons), M.S. (Hons), doing Ph.D., in Texas, U.S.A., seeks beautiful, well-qualified, above 160 cms girl. Box No. 12384

● Tamil, Iyer, Athreya, Visakam, 35, 5'.7", M.B.B.S., House surgeon seeks tall, fair girl, 25-29, graduate, Science, Commerce, Computer, Dental Paramedical, from educated affluent family. Brahmin subsects acceptable. Reply horoscope full particualars. Box No. 12385

● Alliance for Tamil, Iyer, Ashtasahasram, Vadhoola, Revathy, graduate boy 30/175 System Executive Limited Company Poona. Employed girl from Poona or with transferable job preferred. Reply with horoscope to Box No. 12386

● Alliance for Vadama, Keralite Kousika, Krithigai, 44, Bank Officer, Madras from good-looking, family girls, preferably graduates employed or unemployed. Box No. 12387

● மாத்வா, கன்னடா, பாரத்வாஜா, சித்திரை, 39/180 செ.மீ., எஸ்.எஸ்.எல்.சி. தியேட்டர் பங்குதாரர் மற்றும் பிஸினஸ் செய்யும் பையனுக்கு குணமுடைய பெண் தேவை. ஜாதகம் இல்லை. பெட்டி எண் : 12388

● ஐயர், கௌசிகம், 56, அரசுப் பணி, 6000, மனைவி குழந்தைகளற்றவர்க்கு, எதிர்கால உதவிக்கு 45-க்குள் பாசமுள்ள அன்புள்ள குடும்பப்பாங்கான தமிழ் அல்லது கேரள பிராமின் பெண் தேவை. கணவனால் கைவிடப்பட்டவர் விதவையும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண் : 12389

● Alliance for Vadama, Iyer Boy, Athreya Gothram, Avittam, 35 years, S.S.L.C., employed in Private firm at Madras. Salary Rs. 3000/- Madras based employed girls preferable. Contact to Box No. 12390

● Brahacharanam, Bharadwajam, Poorvabhadra, Iyer, Bachelor 41/168/Rs.8500 (M.E)., Senior Engineer, Central Govt at Trichy. Seeks graduate bride, unemployed is the must. Same subcaste is preferred. Box No. 12391

● Alliance invited for Iyer Boy, Vadamal, Kowndanya, Anusham, 30/5.4", fair, state govt. seeks from Vadama employed girls working in Govt/Public/Private transferable Job. Apply with horoscope to Box No. 12392

● சைவ பிள்ளை, விசாகம், +2, 28, 160 செ.மீ., 2500/- தனியார் கம்பெனியில் அக்கவுண்டன்ட் வேலை செய்யும் வரனுக்கு நிரந்தர வேலையில் உள்ள, வேலைக்குச் செல்லும் தகுதியுள்ள பெண் தேவை. பிள்ளை உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 12393

● பாரத்வாஜ கோத்திரம், பிரஹசரணம், ரேவதி நட்சத்திரம், வயது 30, உயரம் 5'.8", பி.எஸ்ஸி., (கெமிஸ்ட்ரி), நல்ல அழகுடைய ஐயர் பையனுக்கு படித்த பட்டதாரியான மணமகள் தேவை. Subject to no Bargain. பெட்டி எண் : 12394

● Alliance invited from Tamil, Iyer graduate employed girl for Kousika, Brahacharanam, Swathi, Nationalised Bank, Madras employed 32/158/5000 graduate sub-sect no bar. Horoscope details to Box No. 12395

● Alliance for Srivatsa Brahacharanam Boy, 30 years, 5'.6", B.A. (Eco.) working as Sr. Executive in Private Ltd., firm drawing Rs. 4500/- required good-looking girl from respectable family. Employed girl (Teacher preferred). Subsect no bar. Send horoscope to Box No. 12396

● பிரபல வாரப் பத்திரிகையில் மாதம் ரூ. 4000/- சம்பாதிக்கும் 37 வயது, ரேவதி நட்சத்திரப் பட்டதாரிக்கு, நாயக்கர் வகுப்பைச் சேர்ந்த மணமகள் தேவை. சென்னையில் வேலையில் இருத்தல் நலம். விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 12397

● கவரா நாயுடு, 31 வயது, பி.காம்., பூரட்டாதி, சென்னையில் பிரபல தனியார் நிறுவனத்தில் வேலை பார்க்கும் வரனுக்கு, வேலையிலுள்ள, வேலையில்லாத குடும்பப் பாங்கான பட்டதாரி மணமகள் தேவை. குடும்ப விவரம், ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 12398

● Tamil, Iyengar, Bharadwaja, Visakam, 29, Doctor, MD, FRCP, practising, USA, divorcee with no encumbrances traditional values parents of fair, graduate Brahmin girls to correspond to Box No. 12399 Tel No. Mds. 4833997, 2350257.

● A Pune based software engineer, Iyer, Rs. 12,000 p.m. 28, 165 cm, Kanva Gothram, good-looking Iyer girl, well-employed, preferably Pune based or transferable to Pune. Box No. 12400

● Wanted fair, good-looking, Kerala/Tamil graduate employed Iyer girl, for Palghat Iyer handsome boy, Srivatsam, Moolam 3rd part, graduate, 33, 5'.10", Sales Officer private company Rs. 3000/- Sisters married. no brothers. Reply full details to Box No. 12401

● ஐயர், பிரஹசரணம், சங்கிருதி, புனர்பூசம், வயது 32, 5'.7", எம்.ஏ., திருச்சி கல்லூரியில் லேப் அஸிஸ்டென்டாக மாநில அரசில் வேலை பார்க்கும் வரனுக்கு படித்த குடும்பப்பாங்கான பெண் தேவை. ஜாதகம் குடும்ப விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண் : 12402

● Alliance invited for Iyer Vadamal Boy, Bharadwaja Rohini, 32 years, 5'.9", employed in Defence preferably from Govt/Bank/LIC employed. Box No. 12403

● Good-looking, V.fair, Tanjore, Iyer boy, 34/5'.3", Vadamal, Bharadwajam, Chithrai, Sr. Clerk, Bank/7000 pm seeks good-looking, fair, graduate, below 30 girl. Subsect no bar. Box No. 12404

# நீங்கள் வெல்ல ரூ.6 லட்சத்துக்கும் மேல் மதிப்புள்ள தங்கமான பரிசுகள்!




இதோ! உங்கள் அபிமான டீ–யான சக்ரா கோல்ட் டீ வழங்கும் வித்தியாசமான போட்டி. உங்கள் குடும்பம் முழுதும் இதில் குதூகலத்துடன் பங்கு பெறப் போகிறது! நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் ஒரு சுலபமான கேள்விக்கு விடை அளித்து, படத்தில் உள்ள கணவர் மனைவியிடம் என்ன கூறுகிறார் என்பதைப் பூர்த்தி செய்ய வேண்டியதுதான். எத்தனை சுலபம், இல்லையா? உங்கள் நுழைவுத் தாள்களை விரைவில் அனுப்புங்கள். உண்மையிலேயே உங்கள் தங்கமான குடும்பத்துக்கு தங்கமான பரிசுகளை வெல்ல இது உங்களுக்கு ஒரு தங்கமான வாய்ப்பு.

## பம்பர் பரிசு



உங்கள் குடும்பம் எங்கும் செல்ல ஒரு மாருதி 800 கார்

**இரண்டு 2-வது பரிசுகள்:** உங்கள் இல்லத்துக்கு ஃப்ராஸ்ட்–ஃப்ரீ 185லி பிபிஎல் ரெஃப்ரிஜிரேட்டர்

**ஆறு 3-வது பரிசுகள்:** உங்கள் குடும்பம் கண்டு களிக்க பிபிஎல் (14) கலர் டிவி

**பத்து 4-வது பரிசுகள்:** உங்கள் இல்லத்தில் வேலையை எளிதாக்க ஒரு பிபிஎல் செமி ஆட்டோமேடிக் வாஷிங் மெஷின்

**முப்பது 5-வது பரிசுகள்:** தங்கமான குடும்பத்தின் தங்கமான தம்பதிக்கு டைட்டன் ஜோடி வாட்சுகள்

**ஐம்பத்தி இரண்டு 6-வது பரிசுகள்:** வெண் ஜ்வல் ஃபாமிலி டின்னர் செட்

**100 வாராந்திர பரிசுகள்:** ஒவ்வொரு வாரமும் கேள்வி 1–க்கான சரியான விடையுடன் முதலில் வந்து சேரும் 20 நுழைவுத் தாள்களுக்கு விசேஷ பரிசு – உங்கள் கையை அலங்கரிக்க தங்க முலாமிட்ட டைட்டன் கைக்கடிகாரம்

**200–க்கும் மேற்பட்ட பரிசுகளை வெல்லுங்கள்**

எண்ணமே எங்க ஏஜ்க்ரூப் பெண்களுக்குக் கிடையாது. என்ன படிக்கலாம்? எந்த கோர்ஸ் எடுக்கலாம்? நாங்க நிறையபேர் ஃபர்ஸ்ட் க்ரூப்தான் எடுத்திருக்கிறோம். அதிகப் பேருக்கு 'புரோஃபஷனல்தான்' எய்ம். அப்புறம் எம்.பி.ஏ.,எம்.சி.ஏ. இது பத்திதான் நாங்க ஃப்ரெண்ட்ஸ் எல்லாம் பேசுவோம்".

**ஜுகிரா :** "சில இன்டலிஜன்ட் குழந்தைகள் வேணுமானால் அப்படிச் சொல்லலாம். டி.வி பார்த்தே பல குழந்தைங்க கெட்டுப் போறாங்க. நான் பல சமூக அமைப்புகளிலே இருக்கிறதுனாலே இதைச் சொல்ல முடியுது. கவுன்சிலிங்குக்கும் வராங்க. ஸ்கூல்லேர்ந்து வரும்போது வீட்டிலே தாய் இருக்கறதில்லே. அந்தக் காலமானா வீட்டிலே அம்மா இருந்து காபி, பால்னு ஏதாவது சாப்பிட கொடுப் பாங்க. ஆன இன்று... வீட்டுக்கு வர கொழந்தை, யாரும் வீட்டிலே இல்லாததாலே நண்பர்கள் வீட்டுக்குப் போறான் – போதை மருந்துக்கு அடிமையாறான். இதுக்குப் பெற்றோர்தான் காரணம்."



**து. வே.:** குழந்தைகளுக்கு வழிகாட்டியாக இருக்க நெனைக்கிற பெற்றோர்களுடைய குழந்தைகள்தான் சுபா சொல்வது போல 'கரியர்' போகணும்னு தன்னம்பிக்கையோட – நல்ல ஒரு எண்ணங்களோட இருக்காங்க. பெற்றோர்கள் கவனிக்காம விடற குழந்தைகள் கெட்டுப் போக வாய்ப்பு அதிகம். அதுக்கு இந்த டி.வி. சினிமா மற்ற மீடியாக்களும் துணை நிற்கின்றன. பெரியவங்க அப்படிக் குழந்தைகளை கவனிக்காம விட முக்கிய காரணம் என்னன்னு நெனைக்கறீங்க?"

**ஜுகிரா:** "பெற்றவங்க இரண்டு பேருமே வேலைக்குப் போற குடும்பத்துலே குழந்தை கள் ரொம்பவும் தான் கஷ்டப்படறாங்க. பாட்டி இருந்தா ரொம்ப நல்லா கவனிப் பாங்க. கூட்டுக்குடும்பம்தான் இதுக்கெல்லாம் நல்லது. பாட்டி இருந்தா குழந்தைகளோட தேவைகளை கவனித்து– சாப்பாடு கொடுத்து பாடம் சொல்லிக் கொடுத்து–பெற்றோர் வரும் வரையில் அவர்களைப் பொறுப்புடன் பாது காப்பாங்க."

**உமா:** "சம்பாதிப்பதிப்பதற்காக மட்டும் அல்ல வேலைக்குப்போவது. கஷ்டப்பட்டு ஒரு பெண்ணை நன்கு படிக்க வைத்தபின்பு அவளுடைய திறமைகளை ஏன் வீணாக்க வேண்டும். எத்தனையோ பெண்கள் -ப்ரொப ஷனலி க்வாலிஃபைட்-கூட திருமணத்துக் குப்பின்பு அதை விட்டு வீட்டிலேயே இருந்து விடுகிறார்கள். இப்படித் திறமைகளை வீணாக்குவது நிச்சயம் குற்றம்தான். வீட்டி லிருந்தபடியே குழந்தையை கவனித்துக் கொண்டு செய்யக் கூடிய வேலைகள் எனச் சொல்வது சுலபம். ஆனால் இருவருமே வெளியே சென்று தங்கள் தொழிலைத் தொடர வேண்டிய நிலை என்றால்...

அதே போல இரண்டு மூன்று பிள்ளை களின் குடும்பங்கள் என்றால் தாத்தா, பாட்டி எல்லா குடும்பத்திலும் எப்படி இருக்க முடி யும்?"

**சுபா:** "நம் கவனம் முழுதும் நம் குறிக் கோளின்மேல் இருக்க வேண்டும் என்பார்கள். துரோணர் தன் மாணவர்களிடம் வில் வித்தைப் பயிற்சியின்போது, வில்லைக் குறி பார்க்கும்போது என்ன தெரிகிறதுன்னு கேட்டாராம். அர்ச்சுனன் மட்டும்தான் பறவையின் கண் மட்டும் தெரிகிறது என்றா னாம். அதேபோல லட்சியத்தை அடைய நம் கவனம் ஒருமித்த சிந்தனையாக அமைய வேண்டும் என்கிறார்கள். இன்றைய பெண்ணிற்கு அந்த மாதிரி முடிகிறதா? அவள் தினமும் பல பாத்திரங்களை ஏற்க வேண்டும். வீடு, வெளியில், வேலையில்– இப்படி எத் தனை?

அதனால் அவள் பல இடங்களில் விட்டுக் கொடுக்க வேண்டியநிலை. குழந்தை பிறந்து அதற்கு 4,5 வயதாகும்வரை தனக்கு வரவேண் டிய பதவி உயர்வுகளை விட்டுக் கொடுக்க வேண்டிய நிலை. உடன் பணிபுரியும் ஆண் களில் பலர் பலபதவி உயர்வுகள் பெற்று மேலே சென்றிருப்பார்கள்– எல்லாவற்றிலும் சிறப்பான இடம் பெற எப்படி முடியும்? வாழ்க்கையின் முக்கிய கட்டங்களில் எந்தத் துறையில் நாம் நம்முடைய கவனத்தை ஒரு மித்த சிந்தனையைச் செலுத்த வேண்டும் என் பதைத் தீர்மானம் செய்து கொள்ள வேண்டும்.

**து.வே:** "பெண்களுக்கு இது ஒரு இக் கட்டான நிலைதான். ஆண்களுக்கு அப்படி இல்லை. ஆனால் மாறிவரும் சமுதாயத்தில் பொறுப்புகளை பகிர்ந்து கொண்டு செய்தால் இந்தப் ப்ரச்னையை சமாளிக்கலாம். உங்க தாத்தாவும் அப்பாவும் ஆபீசிலிருந்து திரும்பி வந்தால் உட்கார்ந்து கொண்டு ஓய்வெடுத்த படியே காப்பி அல்லது டீ சாப்பிடுவார்கள். இளைஞரான நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் மதன்?"

**மதன் மோகன்:** "அந்தக் காலத்துலே







வளமான வாழ்விற்கு ஓர் வழிகாட்டி

# கற்பக விநாயகர் பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசு பதிவு எண் 181-5427/1994
196/28, ஐஸ்வர்யா கமர்சியல் சென்டர்,
திருவேங்கடசாமி ரோடு மேற்கு
ஆர்.எஸ். புரம், கோயம்புத்தூர் 641002. போன் : 442978

## எங்களது சிறப்பு சேமிப்புத் திட்டங்கள்

1. சேமிப்பு கணக்கிற்கு வட்டி 12%
2. மகாநிதி டெபாசிட் 40 மாதங்களில் இரட்டிப்பு
3. மகாலட்சுமி தங்கப்பத்திர திட்டம் உங்கள் முதலீடு 60 மாதங்களில் 3 மடங்காகிறது
4. ரெக்கரிங் டெப்பாசிட் திட்டத்திற்கு வருட வட்டி 20%
5. குமுலேட்டிவ் டெப்பாசிட்டின் வட்டி 23.1% சராசரி வருட வருமானம் 30%
6. உங்கள் முதலீடு ரூ 2,000 45 மாதங்களில் இரட்டிப்பு
   ரூ 3 லட்சம் மதிப்புள்ள பரிசுகள் பெறும் வாய்ப்பு. இத்திட்டத்தில் சேரும் அனைவருக்கும் பரிசு உண்டு.

## நிரந்தர மாத வருமானத்திட்டம்

இதில் ஒரேஒரு முறை ரூ.1,000/- அல்லது அதற்குமேல் டெபாசிட் செய்தால் 21 வருடங்கள் கழித்து மாதாமாதம் அதே தொகை கிடைக்கும்.

## வீட்டுமனை கடன் வசதி திட்டம்

இதில் உங்கள் விருப்பத்திற்கேற்ப மனை விலையில் நான்கில் ஒரு பாகம் செலுத்தினால் மீதியை சுலபத்தவணை முறையில் கடன் அளிக்கிறோம். வீடு கட்டவும் உதவுகிறோம்.

## சுபம் பிக்சட் டெப்பாசிட் (FIXED DEPOSIT)

| காலம் | 3 மாதம் | 6 மாதம் | 1 வருடம் | 2வருடம் | 3வருடம் |
|---|---|---|---|---|---|
| வட்டி | 15% | 16% | 19% | 20% | 21% |
| வட்டி வழங்கும் காலம் | முதிர்வடையும் போது | | மாதமொருமுறை | | |
| | ஊக்கத்தொகை 2% | | | | |

## தென்றல் தொடர் டெப்பாசிட் திட்டம்

வட்டி 20% (RECURRING DEPOSIT INTEREST)

| மாதம் டெபாசிட் | கால முடிவில் கிடைக்கும் தொகை | | | | |
|---|---|---|---|---|---|
| | 12 | 24 | 36 | 48 | 60 |
| 50 | 670 | 1485 | 2480 | 3693 | 5173 |
| 100 | 1340 | 2970 | 4960 | 7386 | 10346 |

## மகாநிதி குமுலேட்டிவ் டெப்பாசிட் திட்டம்

(CUMULATIVE DEPOSIT)

| தொகை | 12 மாதம் | 24 மாதம் | 36 மாதம் | 48 மாதம் | 60 மாதம் |
|---|---|---|---|---|---|
| ரூ1,000 மும் அதன் பெருக்கமும் | 1231 | 1516 | 1868 | 2000 | 2935 |
| சராசரி வருட வட்டி | 23.1% | 25.8% | 28.9% | 33.3% | 38.7% |
| | ஊக்கத்தொகை (3 ஆண்டு) 4 % | | | | |

## குறைந்தது ரூ.5000/- (MONEY BACK SCHEME)

| காலம் | 3 வருடம் | 6 வருடம் | 9 வருடம் | 12 வருடம் | 15 வருடம் | 18 வருடம் |
|---|---|---|---|---|---|---|
| திரும்பப் பெறும் தொகை | 2000 | 3000 | 4000 | 5000 | 6000 | 75,000 |
| | ஊக்கத்தொகை 3% | | | | | |

## அனுபவி பரிசுத் திட்டம்

இதற்கு உங்கள் முதலீடு ரூ.5,000 மட்டுமே உங்கள் முதலீட்டை மூன்று ஆண்டு முடிந்ததும் திரும்பப்பெறுவீர். 18 ஆண்டுகள் முடிந்ததும் பரிசாக கிடைக்கப்பெறுவது ரூ. ஒரு லட்சம்.

நல்ல சேமிப்பிற்கு உள்ளது இன்னும் பல திட்டங்கள்
இன்றைய சேமிப்பு நாளைய செழிப்பு

அம்மாவுக்குதான் வீட்டு பொறுப்புக்கள் எல்லாம். அப்பாவுக்குக் கிடையாது. பெண்கள் வேலைக்காக வெளியே போக ஆரம்பித்த பின்பு வீட்டில் பல பிரச்னைகள் ஏற்படத்தான் செய்கிறது. இந்த நிலைமாற வேண்டும். எங்கள் தலைமுறையிலாவது கணவனும் மனைவியும் நண்பர்களாகப் பழகி ஒருவரை ஒருவர் புரிந்து கொள்வதுடன் பெண்களின் பொறுப்புகளையும் பகிர்ந்து கொண்டு வாழ்க்கையை நடத்த வேண்டும். இதில் எந்த விதமான ஃபார்மேலிடியும் இருக்கக் கூடாது. 'அவன்தான் இதைச் செய்ய வேண்டும்' என்ற எண்ணமோ– 'ஈகோ'வோ இருக்கக் கூடாது."

**ஜகிரா :** "இப்போ சாதாரண குடும்பங்களில் அந்த நிலைமை இன்னும் வரலை. ஆனால் இப்போதைய பிரச்னைக்கு கொஞ்சம் மாமியாரோ, மருமகளோ 'அட்ஜஸ்' செய்துகிட்டு போனா குடும்பம் நல்லாயிருக்கும். தனிக்குடித்தனம் போனவங்களோட குழந்தைகளையும் பெரியவங்களோட வளரும் குழந்தைகளையும் 'கம்பேர்' பண்ணினா இந்தக் குழந்தைகள் நல்லாயிருக்கு. குழந்தைகளோட மன வளர்ச்சிக்கு பெரியவங்களோட தாத்தா பாட்டியோட பங்கு நிறைய இருக்கு என்பதை மீண்டும் அழுத்திச் சொல்லத்தான் விரும்பறேன்."

**து.வே.:** வேலைக்குப் போகும் பெண்களைப் பற்றி சொல்றிங்க. ஆனா தொழில் துறையில் பெண்களுக்கு வேலை வாய்ப்பு சற்றுக் குறைவுதான். இங்க 'கேம்பஸ்' இன்டர்வியுக்கு வரவங்ககிட்ட, 'ஏங்க இந்தப் பெண் இவ்வளவு நல்லா பண்ணியிருக்கு. நீங்க ஏன் செலக்ட் பண்ணலே?'–ன்னு கேட்டா, "ஸார், நாங்க ஆறு மாசம் ட்ரெயின் பண்ண பிறகு கல்யாணம் ஆயிடுச்சின்னு விட்டுவிட்டுப் போயிடறாங்க. கல்யாணமான பெண் என்றால் கணவருக்கு மாற்றல் வந்தாச்சு. அதனாலே போக வேண்டிய நிலைன்னு போயிடறாங்க" அப்படின்னு சொன்னாங்க. அதுவும் நியாயம்தான். முதலீடு செய்யறவங்க கோணத்துலேர்ந்து பார்த்தா அவுங்க சொல்றது சரிதானே?

பெண்களுக்கு சுய வேலை வாய்ப்பு இருந்தா இந்த பிரச்னை தீருமா? வேலை நேரம் என்பது அவர்களின் சௌகரியத்துக்கு ஏற்ப அமையும்படி வழிகள் இருந்தா நல்லா இருக்குமே. இப்போ கம்ப்யூட்டரெல்லாம் வந்த பின்பு வீட்டிலிருந்தபடியே வேறு நிறுவனங்களுக்காக வேலை செய்யறாங்க. பழைய காலத்திலே வீட்டிலிருந்த படியே பீடி சுற்றுதல் போல செய்தாங்க– இப்போ நவீன யுகத்துலே அவங்க கம்ப்யூட்டர்லே வேலை செய்யறாங்க. 'ஜாப் ஓரியன்ட்டெட் இன்கம்–ராதர் தேன் டைம் ஓரியன்ட்டெட் இன்கம்'– இது நல்லா இருக்கும் இல்லையா?"

**ரூபா :** ஆமாம், இன்டீரியர்டெகரேஷன், ஃபேஷன் டிசைனிங் – இப்படி எத்தனையோ வழிகள்– வாய்ப்புகள் இருக்கு."

**து.வே:** "ஆனா நம்ம சமூகத்துலே பெண்களுக்கென 'டெய்லரிங், எம்பிராய்டரி'– போன்ற சில 'குறிப்பிட்ட தொழில்களை ஒதுக்கி– பெண்கள் செய்யும் தொழில்கள்– என முத்திரையிட்டுள்ளனர். ஆனால் இந்தக் காலப் பெண்கள் இதை ஏற்பதில்லை. ஆண்கள் செய்வதை எங்களாலும் முடியும் என்கின்றனர்."

**உமா :** இரண்டு வழியும் சரிதான். நம் கலாசார வழியில் தொடர்ந்து வருவது எளியதும் கூட. பெண்களின் மனப் பக்குவம் இன்று நன்கு கூடியுள்ளது. மரபுவழியில் வந்தது என தையல் போன்றவைகளை ஒதுக்காமல் ஃபேஷன் டிசைனிங் என அதே தையல் கலையை கவர்ச்சிகரமாக செய்கின்றனர். இன்றைய பெண்கள் சமார்த்தியசாலிகள்தானே?"

(மீதி அடுத்த இதழில்)

கருத்து, ஏற்பாடு : **டி.ஆர்.ரமேஷ்**
தொகுப்பு : **வைதேகி தேசிகன்**

**ஒரு வேலையையும் செய்யாமல் சும்மா கிடப்பவன் மட்டுமல்ல சோம்பேறி. இப்போது செய்து கொண்டிருப்பதைக் காட்டிலும் சிறப்பாகப் பணியாற்றுவதற்குரிய திறமையும், வாய்ப்பும் இருந்தும் அப்படிச் செய்யாமல் இருக்கிறானே அவனும் சோம்பேறிதான்.**

**படித்ததிலிருந்து : பா. குணா**



If you're looking at maximum business advantage in terms of payload, plus all the benefits of an LCV, then the Ashok Leyland Cargo 709 is it.

## HIGHEST GVW AND PAYLOAD

Take a look at the Cargo's strong ladder-type frame. Its deep side members. Look at the heavy duty axles. The 709 is sturdier by design. It is rated for 7.35 T GVW and 3.95 T Payload - the highest among all LCVs.

## THE ONLY LCV WITH FULL-AIR BRAKES

It's nice to know that when you're cruising at high speeds and need to come to a grinding halt, the Cargo's dual line full-air brakes won't let you down. What's more, its self-adjusting mechanism makes it virtually maintenance free.

## KING SIZE CABIN

When you sink into the adjustable seats of the Cargo, feel the space around you and reach out for the ergonomically designed controls, you'll realise what a fatigue-free driver means to road safety.

Add to all this, features like tilt cab for easy maintenance, competitive pricing with finance support, easily available indigenous spares, a country-wide service back up... You'll agree the Ashok Leyland Cargo 709 is the undisputed heavy weight champion among LCVs today.

# Cargo 709.

# The heavy weight champion among LCVs.

ASHOK LEYLAND

IVECO

HTA.8096.96



Ashok Leyland

Cargo 709

*Also available in the Cargo Series, 9 tonne GVW trucks, to be followed by 13 and 16 tonne GVW trucks.*

# நமது நாட்டுப்பெண்கள் ஒருவர் கூடவா இல்லை?

❖ அட்டைப்படத்தில் டாக்டர் பாலாஜியுடன் என்னுடைய படத்தையும் பார்த்தபோது மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. முன்பற்களால் வருத்தப்பட்டுக் கொண்டிருந்த நான் டாக்டரின் திறமையால் இன்று மங்கையர் மலர் அட்டைப்படத்திலே வருமாவிற்குத் தகுதி பெற்றுவிட்டேன் என்று சொன்னால் அதற்கு டாக்டருக்குத்தானே நன்றி சொல்ல வேண்டும்.
சென்னை - 14, வைஷ்ணவி

❖ நீங்கள் புன்னகையரசி ஆக வேண்டுமா? கட்டுரை மிகவும் பயனுள்ளதாய் இருந்தது. பற்கள் சம்பந்தமாய் இத்தனை நோய்கள் உண்டா? அதற்கென நவீன சிகிச்சை முறைகளும் எளிமையாய் செய்யப்படுகிறதா? அடேங்கப்பா! புருவத்தை உயர வைத்த கட்டுரை.
பரமக்குடி, பா. உஷாராணி.

❖ "1995 ல், பரபரப்பாகப் பேசப்பட்ட பெண்மணிகள்" கட்டுரை, மிகவும் அழகாகவும், நேர்த்தியாகவும், தொகுக்கப்பட்டிருந்தது! பாராட்டுக்கள்! ஒரு சந்தேகம்! இந்த வரிசையில் நமது நாட்டுப் பெண்கள், ஒருவர் கூட இடம் பெறாதது ஏனோ?!
நீடாமங்கலம், ராணி கோவிந்தகுமார்.

❖ பெண்களுக்கு வரும் முக்கியமான குறிப்பிடத்தக்க வியாதி 'மூலம்'. நீங்கள் பெரும்பாலும் ஆண் டாக்டர்களையே பேட்டி கண்டு எழுதுகிறீர்கள். 'மாறிவரும் பெண்கள்' இதழிலாவது இந்த வியாதியைக் குணப்படுத்தும் சிறந்த பெண் வைத்தியர்களை விலாசத்தோடு பேட்டியும் கண்டு எழுதினால் மங்கையர் மலரின் ஆயிரக்கணக்கான வாசகிகள் பலனடைவார்கள்.
வேலூர் - 9, சியாமளா ராமசாமி.

❖ ப்ரெளன் கோல்ட் பற்றி இதுநாள் வரை நான் கேள்விப்பட்டதே இல்லை! மின்னுவதெல்லாம் பொன்னல்ல என்பது பழமொழி. மின்னாவிட்டாலும் அழகானவையாகயிருந்தால் அதுவும் பொன்தான் என்பதை லலிதா ஜுவல்லரி மேனேஜிங் டைரக்டர் திரு. சுகுமார் வெகு அழகாக தமது பேட்டியில் கூறியுள்ளார்.
தாத்தையங்கார்பேட்டை, எஸ். மோகனா சிவானந்தம்.



சொல்ல விரும்புகிறோம்

❖ டிசம்பர் '95 மங்கையர் மலர் இதழில் உமா ஸ்ரீதரன் அவர்கள் மோனோ சோடியம் குளுடோமேட் உப்பினை சேர்ப்பதால் தவறில்லை எனக் குறிப்பிட்டிருந்தார். ஆனால் 1955-ம் ஆண்டு உணவு கலப்பட தடுப்பு விதி 42 (எஸ்)-ன்படி "மோனோ சோடியம் குளுடோமேட் சேர்க்கப்பட்ட உணவு ஒரு வயதிற்கு உட்பட்ட குழந்தைகளுக்குக் கொடுக்கப்படக் கூடாது".
சென்னை - 6, கே.வி. சாந்தா, பொது சுகாதாரம் மற்றும் நோய் தடுப்பு மருந்து இயக்குநர்.

❖ பெண்ணின் வெளிப்பாடுகள் எல்லாம் ஆணின் சம்மதத்தின் பேரில்தான் அரங்கேற முடியும் என்பது இரவில் சூரியனின் தெளிவாகிறது. ஒரு பெண்ணை ஆண் முழுமையாகப் புரிந்து கொள்ள முயற்சிக்கும் வரை சூரியன்கள் மறைக்கப்பட்டுத் தான் இருக்க முடியும்.
சென்னை - 93, கவிதா அழகப்பன்.

❖ சில பிரச்னைகள், சில வார்த்தைகள் படித்தேன். நான் நினைத்ததை அப்படியே நீங்கள் எழுதி இருப்பதைப் பார்த்து எனக்கு ரொம்ப மகிழ்ச்சியாக, ஆச்சர்யமாக இருந்தது. 'ஆனால் நமக்கு வேண் டாமப்பா இந்த இரட்டை வேஷ வாழ்க்கை. நம் கையில் இருக்கும் சிறிய அகல் விளக்கில் தெய்வீகத்தைக் காண முடிகிறது. அதைக் கொண்டே எத்தனையோ காலங்களை அனுபவங்களை தாண்டிவிடலாம்! மனதை தொட்ட வரிகள். எல்லாருக்கும் நல்லதே நடக்கட்டும்.
நடேச நகர், ஹேமா ஸ்ரீனிவாஸன்.

❖ சி.வி. கிரிபிரசாத் அவர்களால் எழுதப்பட்டிருக்கும் 'கோடை மழை' தினமலர் பி.வி.ஆர். போட்டிக் கதையில் இரண்டாவது பரிசு பெற்ற கதையாகும். உலகத்தில் உண்மைக்கு மதிப்பே இல்லையே என்று மிகவும் வருத்தமாக இருக்கிறது.
மயிலாடுதுறை, எஸ்.எஸ்.எல்.

(இதே போல நிறைய வாசக வாசகியர் தவறினைச் சுட்டிக்காட்டி எழுதியுள்ளார்கள். நம்முடைய வாசகர்களின் பரந்துபட்ட அறிவாற்றலை அறியாத இப்படிப்பட்ட எழுத்தாளர்களுக்காக நாம் வருந்துகிறோம். இப்படித் தவறு செய்ய நினைப்பவர்கள் யாரேனும் இருந்தால் அவர்களும் திருந்த இறைவனைப் பிரார்த்திப்போம். - ஆர்.)

# பஜாஜ் அறிமுகம் செய்
# உற்சாக சவாரிக்கு இப்






இங்கும் அங்கும் அலைந்து திரிந்து களைத்து விட்டீர்களா? இதோ பஜாஜ் அளிக்கிறது ஓர் தீர்வு-புதிய ஸன்னி 'ஸிப்'. சிறந்த பிக்-அப் தர அதிக சக்தி வாய்ந்த 60 cc என்ஜினுடன் இது வருகிறது. அத்துடன், கவர்ச்சிகர பக்கவாட்டு இண்டிகேட்டர்களும் உண்டு. கியர்கள் இல்லை. 'கிக்' ஸ்டார்ட் வசதியும் உண்டு. எளிதான பயணம் மட்டுமே. ஆம். மேற்கண்ட அனைத்து வசதிகளும் ஓராண்டு கால இலவச மெயின்டனன்சுடன். எனவே, நீங்கள் சொகுசாக சீறி விரைய இது ஓர் அரிய வாய்ப்பன்றோ ! 'ஸிப்'பென விரையுங்கள். 'ஸிப்'பைக் கைப்பற்றுங்கள்.






கூந்தலுக்கு பாதுகாப்பு
தேங்காய் எண்ணெய்
அதனுடன்

# ரீடா ஹேர் ஆயில்

கலந்தால் முழுமையான
பாதுகாப்பு.




★ நீண்ட கூந்தலுக்கு

★ முடி உதிராமல் இருக்க

★ உடலுக்கு குளிர்ச்சி தர




## RITA

**VETO COMPANY**

II Floor, 13, Periya Naicken Street,
Sowcarpet,
Madras - 600 079.
Phone : 561953

**நகர வாரியாக விநியோகஸ்தர்கள் தேவை**

"ஆண்களுக்கு இணையாகப் பெண்களும் ஆட்டோவை குறுக்கும் நெடுக்கும் ஓட்டி, தடைகளைத் தாண்டி ஒரு பெண்ணே பரிசையும் தட்டிச் சென்றார் என்றால் அதற்கு அப்புறமும் அவர்களுடைய தன்னம்பிக்கை முன்னேற்றத்தைப் பற்றிச் சொல்ல என்ன இருக்கிறது!"

என்று வியந்து கூறுகிறார் வசந்த் & கோ நிறுவனத்தின் அதிபர் வசந்த குமார். சமீபத்தில் பொங்கல் திருநாளில் ஆட்டோ டிரைவர்களை அழைத்து அவர்களுக்காகப் போட்டிகளை வைத்தார். ஆண்கள் மட்டுமல்ல, சென்னையிலே ஆட்டோ ஓட்டும் தட்டிச் சென்றிருக்கிறார்.

"நான் சில வருடங்களுக்கு முன் இதே போல ஆட்டோ ரிக்ஷாக்களுக்காக ஒரு போட்டியை நடத்தினேன். ஆனால் அப்போது பெண்கள் கிடையாது. இந்தத் தடவை பெண்களும் கலந்து கொண்டு தங்கள் திறமையைக் காட்டியது அவர்களுடைய முன்னேற்றத்தைத்தான் காட்டுகிறது" என்றார் வசந்தகுமார்.

பெண் ஆட்டோ டிரைவர்கள் பலரும் மிக எளிய நிலையில்



# பாட்சாவை வென்ற பெண்மணி!

முப்பத்து ஐந்து பெண்களும் கலந்து கொண்டார்கள். இருவருக்கும் தனித்தனி போட்டிகள்தான். ஆட்டோ ரேஸ், பின்னால் ஓட்டுவது, தடைகளைத் தாண்டி ஓட்டுவது என நிறைய. ஆனால் ஒட்டுமொத்தமாக பாட்சா அவார்டு(!) என ஒன்றை வைத்து, அதனை இருபாலாருக்கும் பொது வாக்கி இருக்கிறார். அதில் வசந்தி என்ற பெண் ஆட்டோ டிரைவர் முதலாவதாக வந்து பாட்சா அவார்டை வென்று வாஷிங்மெஷினைப் பரிசாகத் இருப்பவர்களாம். "சார், நீங்க பரிசாகக் கொடுத்த பாத்திரங்களையெல்லாம் எங்க வீட்ல வெச்சா நாங்க வெளியே வந்துடணும். அவ்வளவு சின்ன இடம்" என்று அவர்கள் சொன்னபோது நெஞ்சம் நெகிழ்ந்தது என்றார். முப்பத்தைந்து பேர் கலந்து கொண்ட போட்டியில் முப்பத்து மூன்று பேருக்குப் பரிசுகள் கொடுத்திருக்கிறார்கள். அந்த இரண்டு பேருக்கு மட்டும் ஏன் இல்லையென்று இருப்பது என அவர்களுக்கும் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறாராம்.




மூந்நூறு பேருக்கு மேல் ஆண் ஆட்டோ ஓட்டுநர்கள் கலந்து கொண்டு இருக்கிறார்கள்.

"நான் டீ.வி.யில் சாப்பிட வாங்க நிகழ்ச்சியில் பரிசு கொடுத்தபோதே சாதாரண மக்களிடையே பிரபலமானேன். எங்கேயாவது போனா, 'அதோ பாருடா, வசந்த் & கோ' என்பார்கள். என் பேரே வசந்த் & கோ என்றாகிவிட்டது" என்று பளீ ரெனச் சிரித்தவர்,

"இந்த ஆட்டோ ரிக்ஷாக்களுக்கான போட்டி மனதிற்கு ஆத்மதிருப்தி அளித்தது என்றுதான் சொல்ல வேண்டும். எங்கோ சில ஆட்டோ ரிக்ஷாக்காரர்கள் தப்பு செய்தால் இந்த ஆட்டோக்காரர்களே இப்படித்தான் எனப் பொது மக்களிடையே அதிருப்தி ஏற்படுகின்றது. அதனால் அவர்கள் எரிச்சலில் பேச, பதிலுக்கு ஆட்டோ ரிக்ஷாக்காரர்களும் பேச ஒரு சுமுகமில்லாத நிலைதான் இன்றைக்கு. அதுவே நாம் அவர் களையும் மதித்து ஒரு நாள் பூரா அவர்களோடு இருக்கும்போது மிகவும் மகிழ்ச்சி அடைகிறார்கள். நம்மையும் இவர்கள் மதிக்கிறார்களே, நாமும் அப்படி நடக்க வேண்டும் என்ற மனிதநேயம் ஏற்படுகிறது."

"அதற்காகத்தான் இந்தப் போட்டிகளை நடத்தியதே. வியாபார ரீதியாக இதை நான் பார்க்கவில்லை. நானும் என்னால் இயன்ற சேவையைச் செய்தேன் என்ற சந்தோஷம் கிடைக்கிறது!" என்கிறார் வசந்த குமார்.

"லக்ஷ்மி என்ற ஆட்டோ ஓட்டுநர், 'நிறைய பேர் வந்துவிட்டால் போட்டியாளர் பெருகி வெற்றி வாய்ப்பு குறையலாம்' என்றெல்லாம் நினைக்காமல், சென்னையிலுள்ள அத்தனை பெண் ஆட்டோ ஓட்டுநர்களையும் அழைத்து வந்தாராம். அந்த ஒரு மனப்பான்மைக்காகவே அவர் பாராட்டப்பட வேண்டியவர் என்றார்" இப்போட்டிக்கான ஒருங்கிணைப்பாளர் ரங்கன். போட்டிகளைத் திட்டமிட்டு நடத்த ஒய்.எம்.சி.ஏ. உதவியதாம்.

"நாங்க ஆட்டோ ஓட்டும் தொழி லில் தைரியமாக இறங்கி இருக்கிறோம். பொதுமக்கள் மெதுவாகத்தான் அங்கீகரிக்கிறார்கள். 'ஆட்டோ' என்று கூப்பிட்டுவிட்டு, பிறகு ஓட்டுவது ஒரு பெண் என்று தெரிந்தவுடன், "என்னம்மா, உன்னை நம்பி ஆட்டோவில் ஏறலாமா? ஒழுங்கா கொண்டு போய்ச் சேர்ப்பியா?" எனக் கேட்பது - பெரும்பாலும் பெண்கள் தான். ஆனால் மெதுவாக எங்கள் திறமையை நிரூபித்துத்தான் வருகிறோம்" என்கிறார்கள்.

அதுதான் நிரூபித்துவிட்டார்களே, ஆட்டோ ஓட்டுநர் போட்டியில் அவார்டினை வென்று!

\- பவித்ரா


Dr. M. சபாபதி

# சர்க்கரை வியாதியா? இயலாமையா?
# புற்றுநோயா? ஆஸ்த்மாவா?
# அல்சரா? சிறுநீரகக் கோளாறா?
## கவலையே வேண்டாம்!


Dr.C.K. மாணிக்கவாசகம்

மிகப்பெரிய மருத்துவமனைகளில் கைவிடப்பட்ட, நம்பிக்கையிழந்த, இனி பிழைப்பது அரிது என்ற எண்ணத்திலுள்ள, திரவ உணவாவது வாயின் மூலம் உட்செல்லும் நிலைமையிலுள்ள எல்லாவகை நோய் - வலி - வியாதியுள்ளவர்களும் எமது திருப்பத்தூர் (N.A.A.Dt.) 84 - ரயில்வே ஸ்டேஷன் ரோட்டிலுள்ள தெய்வீக மூலிகை மருத்துவ ஆராய்ச்சி மையத்தில் தங்கி சிகிச்சைப்பெற்று வியக்கத்தக்க குணமடைந்து செல்கின்றனர். இவர்களை சிவனுக்குரிய வில்வம், சக்திக்குரிய வேப்பிலை, பிரம்மாவுக்குரிய அத்தி, திருமாலுக்குரிய துளசி, விநாயகருக்குரிய அருகம்புல், கங்கைக்குரிய மாவிலை போன்ற தெய்வீக மூலிகை சாறுகளும் அற்புத மருத்துவ குணங்கொண்ட தும்பை, கீழாநெல்லி, குப்பை மேனி, ஆடாதோடை, நாவல், வெற்றிலை, அம்மான் பச்சரிசி, தூதுவளை, சிறுகுறிஞ்சான் போன்ற மூலிகை கலவைப்பொடிகளுமே குணபடுத்துவது உறுதி! இதில் சந்தேகமேயில்லை! மேலும் ஆலோசனைக்கு:-

சென்னை முகவரி:
**Dr.C.K. மாணிக்கவாசகம்,**
**Dr.C.K.M. சபாபதி,**
115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை
(ரெடிமணி ஷாப் எதிரில் உள்ள சந்தில்)
கீழ்பாக்கம், சென்னை - 600 010.
போன் : 6424285, 6427638

திருப்பத்தூர் முகவரி:
ஞானோதய தெய்வீக மூலிகை வைத்தியர்
**Dr.C.K.மாணிக்கவாசகம்**
P.B. No: 30, (காலேஜ் எதிரில்)
திருப்பத்தூர் (N.A.A.) 635 601
போன் : 04179-20469, 22329.

**வைத்தியரிடம் நேரில் ஆலோசனை/மூலிகைப்பொடிப் பெற : 1996ம் வருட புதிய முகாம் விவரம்.**
**(முக்கிய பண்டிகை தினங்களிலும் முகாம் உண்டு)**

| | |
|---|---|
| 2-ந் தேதி - வேலூர் (N.A.) | : பிற்பகல் 1 to 2 மணி வரை ஹோட்டல் கன்னா, 16, ஆபீசர்ஸ் லைன், ஃபோன் : 0416 / 23060. |
| 3 & 19 ந்தேதி - சென்னை | : காலை 9 to 2 மேலே உள்ள சென்னை முகவரியில், ஃபோன் : 044 / 6424285, 6427638. |
| 4-ந் தேதி - கடலூர் (S.A.Dt.) | : காலை 9 to 11 ஆற்காடு கட்லண்ட்ஸ் ஹோட்டல், ஃபோன் : 04142 / 20707. |
| 4-ந் தேதி - விழுப்புரம் | : பிற்பகல் 2 to 3 ஹோட்டல் ஆனந்தா, பஸ்நிலையம் எதிரில், ஃபோன் : 04146 / 22962. |
| 4-ந் தேதி - திருவண்ணாமலை | : மாலை 5 to 6 ராதா லாட்ஜ் (பஸ் நிலையம் எதிரில்) ஃபோன்: 04175 / 22536. |
| 9-ந் தேதி - பெங்களூர் | : காலை 11 to 12.30 ஹோட்டல் பிராட்வே, (கல்பனா தியேட்டர் அருகில்) கெம்பே கவுடா ரோட். ✆ : 2872321. |
| 9-ந் தேதி - ஓசூர் | : மாலை 3 to 4 சீனிவாசா லாட்ஜ், பாகலூர் ரோட், ஃபோன் : 04344 / 22899. |
| 9-ந் தேதி - கிருஷ்ணகிரி | : மாலை 5 to 6 அமராவதி லாட்ஜ், ஃபோன் : 04343 / 22120. |
| 12-ந் தேதி - சேலம் | : காலை 11.30 to 12.30 ஹோட்டல் செல்வம், புதிய பஸ் நிலையம் எதிரில், ஃபோன் : 0427 / 449333. |
| 12-ந் தேதி - ஈரோடு | : மாலை 4 to 5 ஹோட்டல் ஆக்ஸ்ஃபோர்டு, பஸ் நிலையம் எதிரில், ஃபோன் : 0424 / 70761. |
| 13-ந் தேதி - கோயம்புத்தூர் | : காலை 9.30 to 12.30 தேசன் பேலஸ் லாட்ஜ் (சாந்தி தியேட்டர் பின்புறம்) ஃபோன் : 0422 / 210265, 216691. |
| 14-ந் தேதி - மதுரை | : காலை 9 to 11 ஹோட்டல் கிரவுன்ஸ் சென்ட்ரல், மேலப் பெருமாள் மேஸ்திரி தெரு, ✆ 0452 / 543940. |
| 14-ந் தேதி - தஞ்சாவூர் | : மாலை 5 to 6 அசோகா லாட்ஜ், ஃபோன் : 04362 / 30021. |
| 15-ந் தேதி - திருச்சி | : காலை 9 to 11 ஹோட்டல் ஆனந்த், சென்ட்ரல் பஸ் நிலையம் அருகில், ஃபோன்: 0431 / 460545. |
| 15-ந் தேதி - நாமக்கல் | : பிற்பகல் 2.30 to 3.30 ஹோட்டல் தேவி அன்னபூர்ணா, ஃபோன் : 04286 / 21336. |
| 18-ந் தேதி - ஆம்பூர் | : காலை 10 to 11 சம்பத்ஜி லாட்ஜ், ஃபோன்: 04176 / 43311. |
| 18-ந் தேதி - காஞ்சிபுரம் | : மாலை 4 to 5 ராஜம் லாட்ஜ், பஸ் நிலையம் அருகில் 9, காமராஜர் தெரு, ஃபோன் : 04112 / 22519. |
| 19-ந் தேதி - சென்னை | : காலை 9 to 2 மேலே உள்ள சென்னை முகவரியில், ஃபோன் : 044 / 6424285, 6427638. |
| 22-ந் தேதி - தர்மபுரி | : காலை 9 to 10 ஸ்ரீ மாதேஸ்வரா லாட்ஜ், ஃபோன்: 04342 / 60226. |
| 22-ந் தேதி - திருப்பூர் | : பிற்பகல் 2 to 3 ராமகிருஷ்ணா லாட்ஜ், ஃபோன் : 0421 / 20418. |
| 22-ந் தேதி - உடுமலைப்பேட்டை | : மாலை 6 to 7 குறிஞ்சி லாட்ஜ், பஸ் நிலையம் எதிரில் ஃபோன்: 04252 / 24353. |
| 23-ந் தேதி - திண்டுக்கல் | : காலை 9 to 10.30 ஹோட்டல் குறிஞ்சி, பஸ் நிலையம் பின்புறம் ஃபோன்: 0451 / 31206, 27017. |
| 23-ந் தேதி - தூத்துக்குடி | : மாலை 5 to 6 ஹோட்டல் ஆல்வின், தேவர் புரம் ரோடு, ஃபோன் : 0461 / 22780. |
| 24-ந் தேதி - திருநெல்வேலி | : காலை 8.30 to 11 ஹோட்டல் ஸ்ரீ சித்தாபதி, மதுரை ரோடு, ஃபோன் : 0462 / 23312. |
| 24-ந் தேதி - நாகர்கோவில் | : பிற்பகல் 2 to 3 ஹோட்டல் சரவணா, மீனாட்சிபுரம், ஃபோன்: 04652 / 25689. |
| 25-ந் தேதி - விருதுநகர் | : காலை 9 to 10 அன்னம் லாட்ஜ், மதுரை ரோடு, ஃபோன் : 04562 / 45537. |
| 25-ந் தேதி - கரூர் | : பிற்பகல் 2.30 to 3.30 மணி வரை அரசி லாட்ஜ், ஜவகர் பஜார், ஃபோன் : 04324 / 22663, 23763. |

குறிப்பு : டாக்டர் C.K மாணிக்கவாசகம் அவர்களால் 20 வருட அனுபவ ஆராய்ச்சியில் எழுதப்பட்ட "எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்" என்ற நூலை பதிவுத் தபாலில் பெற ரூ.50/-ம் "என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்" என்ற நூலினை பதிவுத் தபாலில் பெற ரூ.45/-ம், மூலிகை மருத்துவமனை பற்றிய விவரமும், T.V. பேட்டிகளின் சாராம்சமும், பத்திரிகை பேட்டிகளின் சுருக்கமும், இல்லற ரகசிய விளக்கமும் அடங்கிய ஆடியோ கேசட்டைப் பதிவு பார்சலில் பெற ரூ.37/-ம் மேலே உள்ள திருப்பத்தூர் முகவரிக்கு M.O. அனுப்புங்கள்.

# நிறமற்ற பெண்

உஷா சுப்பிரமணியன்

கார் கண்ணாடியை ஏற்றிப் பூட்டிவிட்டுத் திரும்புமுன் காதில் விழுந்த பேச்சில் திவ்யா உறைந்து நின்றாள்.

"டெலிவரி ஆயிடுத்தா..."

"ம்..."

"பொண்ணா, பிள்ளையா..."

ஒரு நிமிட மௌனம்... "பொண்ணுதான்..."

"முன்னாடி ஸ்கேன் பண்ணிப்பார்க்கலையா?"

"லீலா பண்ணிக்கமாட்டேன்னு பிடிவாதமா இருந்துட்டா..." மறுபடியும் மௌனம்...

"நெறமாவது இருக்கா?"

"உஹூம்.. அப்படியே லீலா புக்காத்து நிறம்... மாநிறத்தை விடவும் குறைச்சல்..."

"த்சு...த்சு..."

"அடுத்தது பிள்ளை பொறக்கும் கவலைப்படாதே. உங்க வீட்டைக் கொண்டு சிகப்பாய் பொறக்கும்..."

"ஆமாம்... பிள்ளையாப் பொறந்தப்புறம் என்ன நெறமா இருந்தா என்ன?"

திவ்யா தன்னைக் கடந்தவர்களை நிமிர்ந்து பார்த்தாள். வைரத்தோடும், மூக்குத்தியும், பட்டும் பளபளத்தது... பெண்கள்... மூத்த பெண்கள் கூட இல்லை.. நடுத்தரவயதில் நாற்பத்தைந்தும், ஐம்பதுமான பெண்கள். கட்டாயம் கலியாணத்துக்கு பாஸ்போர்ட்டாகவாவது ஒரு பட்டம் வாங்கியிருப்பார்கள். தாங்கள் பெண்ணாகப் பிறந்ததை வைரத்தாலும், பட்டாலும் வாழ்த்திக்கொண்டே, பெண்களை வெறுப்பவர்கள். பெண்ணின் ஒரே தகுதி அவள் நிறமும், அழகும் மட்டுமே என்று திடமாக நம்புபவர்கள்.

கேட்டுக் கேட்டுப் புளித்துப்போன கவலை.. பெண்ணைப் பற்றிய கவலை... ஊட்டமளித்து கொழுப்பேற்றிய பன்றி, சந்தையில் நல்ல விலைக்குப் போகுமோ என்று கவலைப்படும் கசாப்புக்காரனுக்கும் இந்த அம்மாக்களுக்கும் என்ன வித்யாசம்?

இருபதாவது வயதில் ஒரு வெறுத்துப்போன நேரத்தில் அம்மாவை நேர் எதிரே பார்த்து அவள் சொன்னாள்... 'சின்ன வயசிலே நல்ல நிறமாத்தான் இருந்தா, இப்படி வெயிலிலே சுத்தி, சுத்திதான் கருத்துட்டா. கலியாணம் ஆனா, பழைய நிறம் தன்னால வந்துடும்' என்று முன்னப்பின்ன தெரியாதவர்களிடம் பொய் சொல்றதை நிறுத்து... அதோட நெறமுமில்லை, இப்படிக் குச்சி, குச்சியாக கையுங்



காலுமாருந்தா எவன் கலியாணம் பண்ணிப் 'பான் என்று புலம்பறதையும் நிறுத்து. எனக்கு மாப்பிள்ளை தேடிக்க எனக்குத் தெரியும்."

அம்மா அரண்டுவிட்டாள்.... "அய்யய்யோ இவ பேசறதைக் கேளுங்களேன். தினம் சாயங் காலம் இந்த க்ளாஸ் அந்தக் க்ளாஸ் என்று நேரங்கழிச்சு வர்றபோதே தெரியும்..."

''அம்மா நிறுத்து...'' திவ்யா சீறினாள். "பிறந்த அன்னியிலிருந்து என்னைக் குத்திக் குத்தி ரணமாக்கியது போதும்... என் நிறத்தை மாற்ற முடியாது... ஆனால் என்னால் மாற்ற முடிந்த எல்லாவற்றையும் நான் மாத்திக்கப் போறேன்... ஒரு பெண்ணோட வாழ்க்கை கலியாணத்தோட முடிந்து போறதா நினைக்கிற உன் பத்தாம்பசலித்தனத்திலிருந்து மாறப் போறேன்.. புருசன், குழந்தைகளையும் விட எனக்கு இப்போ தேட, அடைய நிறைய



இருக்கு– அதெல்லாம் அடைஞ்சபிறகு, நானே புருஷனையும் தேடிப்பேன்... என் வாழ்க்கையிலே தலையிடாதே..."

இந்தப் பதினாறு வருடங்களில் அவள் வாழ்க்கையில் எத்தனை மாற்றங்கள்... நல்ல வேளை அவள் சிவப்பாகப் பிறக்கவில்லை... கல்லூரி நாட்களிலேயே எவனாவது காதல் கடிதம் கொடுத்திருப்பான். தூரத்து உறவுக்காரன் வழியில் பார்த்து விட்டுத் திருமண ஆசை ஊட்டியிருப்பான்... ஆஹா... என்னே என் அழகு என்ற இறுமாப்பிலேயே அவளும் இதைப் போல் ஒரு வைரத்தோடு பேசரி

பிரெட் டோஸ்டரில் மிகவும் சிறிய கரப்புகள் புகுந்து கொண்டு வெளியே வராமல் சண்டி பண்ணிக் கொண்டிருந்தன. மருமகள் கீழே மேலே பக்கவாட்டு என்று தட்டி தட்டிப்பார்த்தும் உள்ளுக்குள்ளேயே சுற்றி சுற்றி வந்ததே தவிர வெளியே வரவில்லை. நான் தலை உலர்த்தும் ஹேர் டிரையரை மெதுவாகச் சுழலவிட்டு டோஸ்டர் அருகே காட்டியவுடன் காற்று, மிதமான உஷ்ணம் தாங்காமல் வெளியே வந்து விட்டன.

— பத்மாமணி





திவ்யா, ஜூடியின் அருகிலிருந்த பிஞ்சின் முகத்தைத் தொட்டுப் பார்த்தாள். அந்தச் சின்னச் சின்ன விரல்களைப் பிரித்துப் பார்த்தாள். அவள் நடுமார்பில் புரியாத ஒரு உணர்வு எழுந்தது... 'சட்'டென்று அந்தக் குழந்தையைத் தூக்கி நெஞ்சோடு அணைக்க வேண்டும் போலிருந்தது. "ஷி ஈஸ் க்யூட் ஜூடி..." "ஆனால் மேம், குழந்தை பெறுவது அப்படி ஒன்றும் சுகமான அனுபவமாக இல்லை..."

"ம்.....அடுத்த வருடமே இன்னொன்று பெற்றுக் கொள்வாய்... அப்போது இந்த வார்த்தையை நினைவு படுத்துகிறேன்... ஓ.கே. ஜூடி... எது வேண்டுமானாலும் கிறிஸ்டோ பரை எனக்கு போன் செய்யச் சொல்... வரட்டுமா..."

பீச் ரோடில் அந்த மாருதி எஸ்டீம் வழுக்கிச் செல்லும்போது, ஒரே கேள்விதான் திவ்யாவின் மனதில் எழுந்தது... ஏம் ஐ மிஸ்ஸிங் சம்திங்... என் வாழ்க்கையில் நான் எதையாவது இழந்து விட்டதாக உணர்கிறேனா? அந்தச் சின்னப் பிஞ்சின் குட்டி விரல்களைத் தொட்டபோது தோன்றிய உணர்ச்சியின் பெயரென்ன... தாய்மையா... இல்லை... இல்லை... காலையில் புதிதாய்ப் பூத்திருக்கும் ரோசா இதழ்களை மெல்லத் தொடும்போது கூடத்தான் உடம்பு புல்லரிக்கிறது... அந்த உணர்வுக்கு என்ன பெயர்...

அலுவலக வாசலில் அவள் காரிலிருந்து இறங்கவும் காத்திருந்த ட்ரைவர் சாவியை வாங்கிக் கொண்டான்... வழியில் அனைவரும் ஒதுங்கி வழிவிட லிப்ட்டில் ஏறி அவள் நாலாம் மாடியை அடையும் போது திவ்யாவின் மனதில் ஜூடியும், அவள் குழந்தையும் மறந்து, அன்று க்ளையண்டுக்கு செய்ய வேண்டிய ப்ரசன்டேஷனே முன்னுரிமை பெற்றது.

கறுப்பு நிறமும், குச்சிகுச்சியா கைகாலும், பனைமரம் மாதிரி உசரமுமாக இருந்த மகள் எப்படி இன்று இந்தியாவின் மிக ஸ்மார்ட் டான, புத்திசாலியான பெண்களுள் ஒருத்தி

மாமியாகிப் பெண்களைப் பற்றிக் கேவலமாக மதித்திருப்பாள்... தேங்க் காட்...

அந்தப் பிரசவ ஆஸ்பத்திரியின் 13ம் அறை எண்ணைத் தேடுவது அவ்வளவு கஷ்டமாக இல்லை... ஜூடியின் கணவன் க்ருஸ்டோபர் தூரத்திலேயே அவளை அடையாளம் கண்டு ஓடி வந்தான். "மேடம்... நீங்களே ஆஸ்பத்திரிக்கு வருவீங்க என்று எதிர்பார்க்கலை... வாங்க... வாங்க..."

திவ்யா, ஜூடியின் அருகில் சிறிது நேரம் அமர்ந்து பேசினாள். ஆறுவருடங்கள் தொழிலதிபர், செகரட்ரி என்ற உறவுடன் மட்டும் அவர்கள் பழகவில்லை... "மேடம்... இன்று கான்பரன்ஸுக்கு லெக்சர் ரெடி" என்பதுடன் நில்லாமல்... "மேம் பச்சை ஓரிஸ்ஸா புடைவை கட்டிக் கொண்டு செல்லுங்கள்..."என்ற ஜூடியின் உத்தரவையும் அவள் சிரிப்புடன் ஏற்றிருக்கிறாள்.

கிறிஸ்டோபருக்கும், ஜூடிக்கும் காதல் துவங்கியபோது அவள் முதலில் பகிர்ந்து கொண்டது திவ்யாவிடம் தான்... டைரக்டர் அறையில் திவ்யாவுடன் அமர்ந்து நிறுத்தாமல் பேசிப் போரடிக்கும் உயர் அலுவலரையும் நாசூக்காக அப்புறப் படுத்தும் ஜூடியின் சாதுர்யத்தை எத்தனையோ முறை இருவரும் சிரித்து ரசித்திருக்கிறார்கள். இரு பெண்கள் பல ஆண்டுகள் தொடர்ந்து ஒரே வேலையில் ஈடுபடும்போது அவர்களுக்குள் எத்தகைய நட்பு உருவாகும் சாத்தியம் உள்ளது!

ஒரு நாள் ஜூடி கேட்டாள்... "மேம்... நாம ஒவ்வொரு நாளும் எட்டு மணிநேரம் சேர்ந்து உழைக்கிறோம்... நம்மால சேர்ந்து சிரிக்க முடிகிறது. ஆனால் 24 மணிநேரம் சேர்ந்து இருக்கிற ஒரு மாமியாராலும், மருமகளாலும் ஏன் சுமுகமா இருக்க முடிகிறதில்லை?" திவ்யா ஒரு நிமிடம் யோசித்தாள்... "நம்ம உறவில் பொருளாதாரம், பதவி, அதிகாரம் எல்லாம் பற்றி குறிப்பிட்ட அளவுகோல்கள் இருக்கு... மாமியார், மருமகள் உறவில் அது இல்லாததால தான் அந்தக் குழப்பம்..."

யாகக் கருதப்படுகிறாள் என்பது திவ்யாவின் அம்மாவுக்கு இன்றும் ஆச்சரியம்தான். வீட்டில் சண்டை போட்டுக் கொண்டு புருஷப் பையன் மாதிரி முறைத்துக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறிய பெண் என்ன செய்து இப்படி பெரிய பங்களாவும், சொந்த ஆபீசும், மூணு காரும், தினம் ஒரு ஊருமாக ஜ்வலிக்கிறாள் என்று புரியவில்லை. எவனெவனோ வருகிறான், போகிறான், வேளைகெட்ட வேளையில் இவள் புருஷத் துணையில்லாமல் ஹோட்டலுக்குப் போகிறாள், நடு இரவில் வீட்டுக்கு வருகிறாள் ஒன்றும் புரியவில்லை. இவ தப்பித் தவறி பெண் ஜென்மமாப் பிறந்து விட்டாள். அவ்வளவுதான் புரிகிறது. பணம் காசு இருந்தென்ன பலன், எல்லாப் பெண்களையும் போல, புருஷன், குடும்பம், குழந்தைகள் இருக்கக் கூடாதா?

திவ்யா வீட்டை விட்டு வெளியேற வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தவளே அம்மா தான். மகன் எம்.எஸ்.ஸி. படிக்கக் கூடாது என்று ஒரே பிடியாகத் தடை செய்ததும் அம்மாதான். ஒரே காரணம் கணிதம் கோ-எஜுகேஷன் காலேஜில்தான் படித்தாக வேண்டும். ஆண்களுடன் சேர்ந்து படிப்பது பஞ்சும், நெருப்பும் சேர்ந்து அருகருகே வைப்பது மாதிரி... நாளைக்கு ஒன்று கிடக்க ஒன்று ஆகிவிட்டால்...

திவ்யா அப்பாவிடம் கெஞ்சிப் பார்த்தாள். அப்பா கவர்மெண்ட் ஆபிஸில் க்ளார்க் வேலை பார்த்துப் பார்த்து, மூளையே மழுங்கி, எந்த முடிவு எடுக்கவும் பிறர் முகத்தைப் பார்க்கும் பரிதாபப் பிராணியாக இருந்தார். அம்மாவை அவரால் எதிர்க்க முடியாது.

கல்லூரிப் படிப்புக்கும் முற்றுப்புள்ளி... ஆண்கள் வராத நேரமா டைப்ரைட்டிங், ஷார்ட்ஹேண்ட், ஹிந்தி வகுப்பு, வீட்டில் அம்மாவுக்கு அடுப்பங்கரை உதவியுடன், சதா ஒத்து வராத வரன்களைப் பற்றிய புலம்பல்.

விசாரத் படிப்பித்த டீச்சர்தான் முதல் முதலாக அவள் புதிய உலகக் கதவைத் திறந்தவள். "திவ்யா, நீ டமிலியன் தானே.. இந்த ஜிங்கிளை டமிலில் மாற்றிக் கொடேன்..."

"ஜிங்கிளா... அப்படி என்றால்...?"

"விளம்பரத்திலே பின்னால பாடறாங்களே.... ரேடியோவில் கேட்டிருப்பியே..."

"ஓ நான் மாத்ஸ் க்ராஜுவேட்.... இருந்தாலும் தமிழில் ரொம்ப இன்ட்ரஸ்ட்... ட்ரை பண்ணுகிறேன்..."

டீச்சர் தந்த ஹிந்திக் கவிதையை சந்தம் மாறாமல் தமிழுக்கு மாற்றுவது ஒன்றும் பெரிய விஷயமாக இல்லை...

டீச்சர் அடுத்த வாரம் 100 ரூபாய்க்கு பம்பாய் செக் ஒன்றை அளித்தபோது திவ்யா திடுக்கிட்டாள்.... "செக்கா... எதுக்கு மேடம்... எனக்கு பாங்க் அகவுண்ட் கிடையாதே..."

"ஆரம்பித்து விடு.... அவ்வளவுதானே... என் அண்ணன் பம்பாயில் அட்வர்டைசிங் ஏஜென்ஸி நடத்துகிறான்... நான் பம்பாயிலிருந்த வரை விளம்பரக் காபி முழுவதும் கவனித்துக் கொண்டேன்.... திருமணமாகி சென்னைக்கு வந்த பிறகும் இங்கே என்னிடம் அனுப்புகிறான். ஹிந்தி நான் எழுதி விடுவேன். தமிழ், ஆங்கிலம் ட்ரை பண்ணேன்... நான் ரெகுலராக வேலை தர்றேன். வீட்டிலிருந்தபடியே செய்யலாமே..."

"தமிழில் முயற்சிக்கிறேன்... ஆனால் தமிழ் ஸ்கூலில் படித்த எனக்கு இங்கிலீஷில் கஷ்டம்..."

"ட்ரை பண்ணு, எல்லாம் வரும்..." டீச்சர் நிறைய உற்சாக மூட்டினாள்...

செக்கை அம்மாவிடம் காட்டியபோது, அவள் திவ்யாவை சந்தேகமாகப் பார்த்தாள். "என்னடீ செய்தே சண்டாளி, எவன்டி கொடுத்தான் பணம்..." திவ்யா துவண்டு விட்டாள்... அம்மா ஹிந்தி வகுப்புக்கு வந்து டீச்சரிடம் விவரம் கேட்டாள். அப்படியும் நம்பவில்லை. "கலியாணமானவளாக இருந்தாலும், அந்த ஹிந்திக்காரியைப் பார்த்தா எனக்கு





நல்ல காற்றோட்ட வசதியுள்ள ஹாலில் போடும் சோபா செட்களின் கவர்கள் காற்றினால் அலைபட்டு கீழே விழுந்து விடுகின்றன. அதற்கு நான் அழகிய முத்துக்களை குண்டூசியால் செருகி ஆங்காங்கு குத்தி வைத்து விட்டேன். பார்ப்பதற்கும் அழகாக இருந்தது. துணிகளும் கீழே விழவில்லை.

– பத்மாமணி

சந்தேகமாக இருக்கு. எதிலாவது இழுத்து விட்டுடப் போறா... ஆமாம்... இத்தோட நிறுத்திக்கோ. அவ இனிமேலும் ஏதாவது எழுதச் சொன்னா, வீட்டுலே பிள்ளை பார்த்துண்டு இருக்கான்னு திட்டமாகச் சொல்லிடு..."

விளையாட்டாக ஆரம்பித்தது முதல் மாத இறுதிக்குள் திவ்யா ஐந்து ஜிங்கிள் எழுதியிருந்தாள், மூன்று ப்ரஸ் ரிலீஸை ட்ரான்ஸ்லேட் செய்திருந்தாள். எழுதத் தொடங்கியதிலிருந்து அவளிடம் நிறைய மாறுதல் தோன்ற ஆரம்பித்தது. அம்மாவின் துணைத்தலோ, அப்பாவின் மச, மசப்போ அவளைப் பாதிக்கவில்லை. அம்மா நமஸ்காரம் செய்யச் சொன்ன வரன்களுக்கெல்லாம் நமஸ்காரம் செய்தாள். "பொண் கறுப்பு... அஞ்சு பவுன் கூடப் போடுங்க..." போன்ற டிமாண்டுகளைக் கேட்டுக் கோபப்படாமல் சிரித்தாள். அவள் தூங்கியிருப்பதாக நினைத்து அம்மா அவள் நோட்டுப் புத்தகத்தில் என்ன எழுதுகிறாள் என்று ஆராய்ச்சி செய்தபோது வருத்தமாகத்தான் இருந்தது. அம்மாவுக்காக, ஆத்திரம் வரவில்லை.

ஹிந்தி டீச்சரும், அவள் கணவரும் ஒரு நாள் நண்பர் ஒருவருடன் வீட்டுக்கே வந்துவிட்டார்கள்... "திவ்யா, இவர் ராகுல்... வி.அண்ட். எம் அட்வர்டைசிங்கில் க்ரியேடிவ் டைரக்டர். எங்கள் குடும்ப நண்பர். உன்னைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். நல்ல க்ரியேடிவ் டாலண்ட் இருக்கிறது என்றேன்.. எதற்காக வெறும் மொழிபெயர்ப்பு வேலை தருகிறாய்... ப்ரீலான்ஸாக புதுக் கருத்துக்களையே தரட்டுமே என்றார்... அதுதான் அழைத்து வந்தேன். அறிமுகப்படுத்த" ராகுல் ஒரு புதிய சோப்பைப் பற்றிக் கூறினார்... வழுக்கைத் தலையும், தடித்த கண்ணாடியுமான ராகுல் அந்த சோப்பின் அருமை பெருமைகளை விழிபிதுங்க ஆர்வத்துடன் விளக்கும்போது, திவ்யா ராகுல் முகத்தில் சோப் தடவி கற்பனை செய்து மனதுக்குள் சிரித்தாள்.

மறுநாள் ஹிந்தி டீச்சரிடம் வெட்கத்துடன் நோட்டுப் புஸ்தகத்தை நீட்டினாள்... குளியலறையில் ராகுல்... முகமெல்லாம் சோப்பு நுரையுடன்... எதிரே டேபிளில் ஆபிஸ் உபகரணங்கள்... "ம்... என்ன மணம்... நுரை... பிரியவே மனமில்லை... நான் ஆபீஸையே பாத்ரூமுக்கு மாற்றிவிட்டேன்"என்று அடியில் எழுதப்பட்டிருந்தது. டீச்சர் விழுந்து, விழுந்து சிரித்தாள். திவ்யா வெட்கத்துடன்... "டீச்சர் எனக்கு க்ரியேடிவ்வும் தெரியாது, ஒண்ணும் தெரியாது. அந்த குண்டு ராகுல் சோப்பைப் பற்றிச் சொன்னபோது எனக்கு இப்படித்தான் கற்பனை ஓடியது..."

"உனக்கா க்ரியேடிவ் தெரியாது. திஸ் ஈஸ் தி பெஸ்ட் க்ரியேடிவ் பார் எ சோப்..." சிறிய மாற்றங்களுடன் வந்த இந்த விளம்பரம் சக்கை

போடு போட்டது. ராகுல் ஐந்தாயிரம் ரூபாய்க்கு செக் தந்தார். விளம்பர நிறுவனங்களிலிருந்து சிலர் அவளை அணுகினார்கள். தன்னிடம் திறமை இருக்கிறது என்று அவளே புரிந்து கொள்ளும் முன்பே அடுத்தவர்கள் தெரிந்து கொண்டார்கள். வெளி மனிதர்களுடன் திவ்யா பேசிப் பழகியதில்லை. ஆங்கிலம் சரளமாகப் பேச வராது. குடும்பம், பள்ளி, காலேஜுக்கு வெளியே உலகமே தெரியாது. ஆனால் ஹிந்தி டீச்சர் மிகப்பெரிய ஆசானாக இருந்து வழிகாட்டினார்.

"திவ்யா இன்று ஒரு புதிய கம்பெனியில் ப்ரீஃபிங் (brief.) இருக்கு. நீயும் போனால் காபி எழுதுவது சுலபமாக இருக்கும்..." ராகுல் அழைத்ததன் பேரில், ஹிந்தி டீச்சர் அம்மாவிடம் விளக்கி பர்மிஷன் வாங்கிய பின், திவ்யா மவுண்ட் ரோடில் அந்த விளம்பர கம்பெனிக்குச் சென்றாள்... ராகுல் வரும்வரை ரிசப்ஷனில் காத்திருக்கும்போது, தாண்டிச் செல்பவர்கள் ஒவ்வொருவராக முன்பின் அறியாத அவளிடம் ஹாய், ஹலோ என்றெல்லாம் சொன்னது வியப்பாக இருந்தது. பாப் வெட்டிய பெண்கள், குட்டைப் பாவாடை அணிந்த பெண்கள், அவர்களிடம் சரளமாகப் பேசும் ஆண்கள்... இப்படிக் கூட ஒரு உலகமிருக்கா...

"ஹாய் திவ்யா..." ராகுல் அவசரமாக அவளருகில் வந்து கைகுலுக்கியபோது பயத்தில் கையே துவண்டது. "திவ்யா. திஸ் ஈஸ் குமார், ஜோதி, அர்விந்த், பிள்ளை... கம் ஆன் லெட்ஸ் கோ..." ஜோதி படு ஸ்மார்ட்டாக இருந்தாள். அவளருகில் தான் காட்டன் புடவையும், எண்ணெய் தலையுமாகப் பரிதாபமாக இருப்பதாக திவ்யா உணர்ந்தாள்... ஆனால் யாரும் அவள் தோற்றத்தைப் பற்றிக் கவலைப்படாமல் புதிய மிக்ஸியைப் பற்றியே வழிநெடுகப் பேசினார்கள்.

அனைவரும் மிகப் ப்ரம்மாண்டமான ஒரு கம்பெனிக்குச் சென்றார்கள். அந்த கான்பரன்ஸ் அறையிலிருந்த கண்ணாடி மேஜை, நாற்காலிகள், ஏர்கண்டிஷன் குளிர், புத்தம் புது மலர்கள் எல்லாமே புதுமையாக இருந்தது. மூன்று மணிக்கு ஆரம்பித்த ப்ரீஃப் முடியும் போது மணி ஆறடித்திருந்தது. ஐந்து மணிக்குக் கட்டாயம் திரும்பி வந்துவிட வேண்டும் என்று அம்மா கறாராகச் சொல்லியிருந்தாள். இந்த சீரியஸ்ஸான டிஸ்கஷனில் நடுவே அதை எப்படி யாரிடம் சொல்வது?

அனைவரும் விளம்பர அலுவலகம் திரும்பி, க்ளையண்ட் பேசியதைக் குறிப்பெடுக்கும் போது மணி ஏழடித்தது. மெல்ல ராகுலிடம் தான் கிளம்ப வேண்டிய அவசியத்தைச் சொன்ன போது அவர். "டோன்ட் ஒர்ரி.. நான் ஜோதியை ஹாஸ்டலிலும், உன்னை வீட்டிலும் ட்ராப் செய்து விடுகிறேன். நீ வீட்டுக்கு போன் செய்து விடு" என்றார். திவ்யா வீட்டருகே டெலிபோன் வசதி ஏது? "கம் ஆன் திவ்யா... ரிலாக்ஸ்... விளம்பர வாழ்க்கையில் நேரம், காலம் ஏது? ஹாஸ்டலிலிருக்கும் நானே கவலைப்படவில்லை... நீ என்ன குழந்தையா, உங்கம்மா கவலைப்பட...?" ஜோதி தோழமையுடன் தோளில் தட்டினாள்.

எட்டு மணிக்கு ராகுல் காரிலிருந்து வீட்டு வாசலில் இறங்கியபோது அம்மா பத்ரகாளியாக வாசலில் நின்றிருந்தாள். அவள் முடியைப் பற்றி உள்ளே இழுத்தாள். "அடிப்பாவி, சண்டாளி... இப்படிக் கண்டவனோடு காரில் வந்து இறங்கறியே... உன்னைக் கரையேத்த வழிதெரியாம நான் தவிச்சுண்டு நிக்கறபோது இப்படி வயத்துல நெருப்பைக் கொட்டறியே..." அவள் தலையை சுவற்றில் இடித்தாள்... நெற்றி வலியை விட நெஞ்சு வலி அதிகமாயிருந்தது.

அப்பா முதல் முறையாகக் குறுக்கிட்டார்... "வயசுக்கு வந்த பெண்ணை அடிக்காதே லஷ்மி.. மொதல்ல விவரம் கேளு..." திவ்யா எவ்வளவோ பொறுமையாக விளக்கியும், அம்மாவின் ஆத்திரம் குறையவில்லை. "தடித் தடியா ஆம்பிள்ளைகளுடன் இருட்டினப்புறம்





தீபாவளிக்கு மனோகரம் செய்ய அரைத்த மாவு (கடலை+பயத்தம்பருப்பு+அரிசி) மீந்து விட்டது. ஒரு நாள் விருந்தினர் வந்தபோது சிறிது டால்டா சமையல் சோடா, வெங்காயம், பச்சை மிளகாய், இஞ்சி நறுக்கிப்போட்டு கொஞ்சமாக தண்ணீர் விட்டுப் பிசைந்து சிறுசிறு உருண்டைகளாகப் பொரித்து எடுத்தேன். சட்னியுடன் சேர்த்து சாப்பிடக் கொடுத்தபோது மெது பகோடா மிகவும் ருசியாக உள்ளது என்று விருந்தினர்கள் பாராட்டினார்கள்.

–பத்மாமணி

பதிவு எண்: 26383 போன்: 583241




# கல்பதரு பெனிபிட் பண்டு லிமிடெட்

(கம்பெனிகள் சட்டப்படி பதிவு செய்து நிறுவப்பட்டது)
பதிவு அலுவலகம்: 134, ராசப்ப செட்டி தெரு,
(ஸ்ரீ கந்தகோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-600 003.

**பிக்சட் டிபாசிட் திட்டம் மாத வட்டிக்கான காசோலைகள் முன் கூட்டியே வழங்கப்படும்**

| காலம் | 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|
| வருட வட்டி விதம் | 14% | 15% | 16% | 17.5% | 18.5% | 19% | 19.5% | 20% * |



## குபேரன் வைப்பு திட்டம்

வட்டி 21% குறைந்த அளவு டிபாசிட் ரூ. 50,000/- காலம் : 5 வருடம்.
மாத வட்டிக்கான செக்குகள் முன்னதாகவே வழங்கப்படும்



## அமுத சுரபி டிபாசிட் திட்டம்

| டிபாசிட் தொகை | காலம் | கிடைக்கும் தொகை |
|---|---|---|
| ரூ. 5,600 | 15 வருடம் | ரூ. 1,00,000 |
| ரூ. 7,000 | | ரூ. 1,25,000 |



## கல்பதரு மணிபேக் திட்டம்

அ) பிரதி மாதம் ரூ.100/- வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்த வேண்டும்.
முதல் 5ம் ஆண்டு முடிவில் நீங்கள் செலுத்திய ரூ. 6000/-ஐ பெறுவீர் !
2வது 5ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ.6000/-ஐ பெறுவீர் !
3வது 5ம் ஆண்டு முடிவில் ரூ.51,000/-ஐ பெறுவீர் !



## முதியவர் நலத்திட்டம்: வயோதிகர் விதவைகள் கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

| தொகை | காலம் | வட்டிவிதம் |
|---|---|---|
| ரூ. 10,000 | 12 மாதங்கள் | 20% |
| ரூ. 10,000 கீழ் | | 19% |

## சேமிப்பு டிபாசிட் திட்டம் - 10% வரை வட்டி வழங்கப்படும்




**கடன்**

நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்
சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும்

**வட்டி விகிதம் ரூ.1.95**

அலுவலக நேரம் : காலை 8.30 முதல் 12.30 வரை மாலை 2.00 முதல் 6.00 வரை ஞாயிறு காலை 8.30 முதல் 12.30 வரை

பயன் பெற ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். (செவ்வாய் விடுமுறை) பாதுகாப்பு • சேவை • சுபிட்சம்

பெரியவர்கள் 'நல்லா வாய்விட்டுப் பாடு; உரக்கப்படி. என்றெல்லாம் சொல்வார்கள். உண்மையில் உரக்கப்பாடுவதினாலும், வாசிப்பதினாலும் குரலுறுப்புகள் தேறி, பலம் பெறும். இதனால் மார்பு விரிவடைந்து, சுவாசப்பைகள் நன்கு விரிந்து சுருங்கி ஆரோக்கியமடையும்.

— உமா



உனக்கென்ன வேலை?" என்ற குற்றச்சாட்டுக் கேள்வியிலிருந்து விடுபடவில்லை...

ஜோதி ஒருநாள் விளக்கினாள்... "திவ்யா.. உங்கம்மா மேல் எந்தத் தப்பும் இல்லை. அவரைப் போன்ற பெண்கள் வாழ்க்கையில் ஆண், பெண் உறவு, கணவன், பிள்ளைகள், உறவினர்கள் என்ற குறுகிய வட்டத்துக்குள் அமைந்தது. அதுக்கு வெளியிலே தொழில் ரீதியான உறவுக்கு அவங்களுக்கு அர்த்தம் தெரியாது. ஒரு பெண் தனியா ஓட்டலுக்குப் போனாள் என்றால், அவள் எவனுடனோ படுத்துக் கொள்ளத்தான் சென்றாள் என்பது அந்தத் தலைமுறையின் எண்ணம். எத்தகைய பிஸினஸ் டிஸ்கஷனோ என்று கவலைப்படுவது நம்ம தலைமுறை... யாரையும் குற்றம் சொல்லக் கூடாது."

ஜோதி கொங்கணிப் பெண்... தாய், தந்தையை சிறு வயதில் இழந்தவள். விளம்பரத் துறையில் இருந்த ஆர்வத்தால் பெல்காம் இருந்து தனியே சென்னை வந்து பெண்கள் விடுதியிலிருந்து வேலை செய்து கொண்டிருந்தாள். அண்ணன், அண்ணியிடம் மரியாதையும், அன்பும் கொண்டவள். அம்மாவின் போதனையால், நாகரிகமான பெண்கள் அனைவருமே நடத்தை கெட்டவர்கள் என்று நம்பிய திவ்யாவின் எண்ணத்தை முழுவதும் மாற்றியவள் ஜோதி.

"வெளி உலகில் ஒரு பெண் பலரைச் சந்திக்கும் போது, அவளுக்குத் தேவைப்படுவது அழகோ, அடக்கமோ இல்லை திவ்யா.. இன்னும் சொல்லப்போனால் ஒரு பெண் தொழிலில் முன்னேறவேண்டுமென்றால் அவள் மறக்க வேண்டிய முதல் விஷயம் gender defference நான் பெண் என்று சலுகை எதிர்பார்ப்பது தவறு. அதே சமயம் தன் பெண்மைக் கவர்ச்சியால் காரியம் சாதித்துக் கொள்வது கேவலம். தன்னம்பிக்கை கௌரவமான, தோற்றத்தாலும், சௌகரியமான உடையாலும் கூட வரலாம்." இன்று ஜோதி தில்லியில் பெரிய விளம்பர நிர்வாகத் தலைவி... உடன் வேலை செய்த பஞ்சாபி இளைஞனை மணந்து இரண்டு குழந்தைகளுக்கும் தாய்...

ஒரு நாள் ஜோதிக்கும், ராகுலுக்கும் ஏற்பட்ட தகராறில் ஜோதி ராஜினாமா செய்ய, ராகுல் அந்த வேலையை திவ்யாவுக்கு அளிக்க முன்வர, திகைத்து நின்றாள் திவ்யா... அம்மா, அப்பா இருவரையும் ஒருங்கே உட்காரவைத்துப் பேசினாள். பதினைந்து ஆண்டுகளுக்கு முன் ஆயிரம் ரூபாய் ஆரம்ப சம்பளம் என்பது அப்பாவால் நம்பக் கூடியதாக இல்லை... பொருளாதாரம் அம்மாவின் சம்மதத்தை வாங்கித் தந்தது. அதே சமயம் நிறைய கண்டிஷன்கள்... ஐந்து மணிக்கு ஆபீஸ் முடிந்தால் நேரே பஸ் பிடித்து வீட்டுக்கு வர வேண்டும். ஆபீஸ் தடியன்கள் யாரும் வீட்டுக்கு வரக் கூடாது. ஆம்பிளைகளுடன் காரிலோ, ஸ்கூட்டரிலோ ஏறக் கூடாது, இத்யாதி, இத்யாதி... எப்படியோ சம்மதம் கிடைத்தது.

விளம்பர நிறுவனத்தில் ஆரம்ப நாட்களில் அவள் பட்ட சிரமங்கள், ஆங்கிலம் சரியாகப் பேசத் தெரியாது. உலக ஞானமோ சுத்த பூஜ்யம்... அவர்கள் பேசும் பல விஷயங்கள் புரியவேயில்லை... பலமுறை தாழ்வு மனப்பான்மையில் விலகிவிடுவோம் என்றே நினைத்தாள். குடும்ப உறவு வேறு... வர்த்தக உறவு வேறு.. ஆயிரம் கத்தினாலும், வெறுப்பேற்றினாலும், அம்மா, 'தலையை வலிக்கிறது' என்றால் துடித்துப் போய் விடுவாள்.. படித்துப் படித்துக் கண் பொங்கி விட்டது, தலையில் ஒரு கை எண்ணெய் வைக்கிறேன் என்பாள். வெளியே உலகம் அப்படியில்லை... ஒவ்வொருவரும் தன் முன்னேற்றத்திற்கு எத்தனை தலைகளை மிதிக்க முடியுமோ மிதித்தார்கள்... அடுத்தவன் தடுக்கி விழுவதில் ஆனந்தமடைந்தார்கள்... அதிலும் வலுவற்றவனை குப்புறத்தள்ளுவதில் கவனமாக இருந்தார்கள். எங்கும் போட்டி... உரசல்கள்... இதன் மத்தியில் தோன்றும் உறவுகளிலும் போலித்தனமிருந்தது. இந்தப் போட்டியில் திவ்யாவைப் போல் அடித்தளமில்லாதவள் தலைதூக்குவது சுலபமாக இல்லை... ஒவ்வொரு

உரசலும் வலித்தது. தாங்கமுடியாமல் வலித்தது. ஒவ்வொரு வலியும், அதைத் தாங்கும் பலத்தையும், எதிர்க்கும் வலிமையையும் தந்தது.

"திவ்யா நீ சாதாரணப் பெண்ணில்லை. உன்னிடம் சிலத் தனித் திறமைகள் உள்ளன. அவற்றை வளர்த்துக்கொள். உனக்கு அரண் உன் தொழில் திறமைதான். அதில் கவனம் செலுத்து... உன் கவனத்தைச் சிதறவிடாதே..." தனக்குத் தானே ஹிப்னாஸிஸ் செய்து கொண்டாள். திறமையும், உழைப்பும் உள்ளவர்கள் ஒரு முனைப்புடன் செயல்பட்டால் வெகுவிரைவில் முன்னேறக் கூடிய துறை விளம்பரத்துறை. திவ்யா க்ரியேடிவ்வுடன் நிற்கவில்லை. நேரம் கிடைத்த போது ஸ்டூடியோவுக்குச் சென்றாள். ஆர்ட் டிபார்ட்மெண்டில் விளக்கம் தேடிக் கொண்டாள். பிலிம் எக்ஸிக்யூடிவ்வுடன் பேசி பீடாகேம், ஹைஹபேண்ட் என்று நிறைய டெக்னிகல் விஷயங்களைப் புரிந்து கொண்டாள். இரவில் தனியே மொட்டைமாடியில் இல்லாத எதிராளியிடம் ஆங்கிலம் பேசிப் பழகிக் கொண்டாள்.

தொழில் துறையில் முன்னேற, முன்னேற வீட்டில் கழிக்கும் நேரம் குறைந்தது. அம்மாவுக்கும், அப்பாவுக்கும் அவள் சம்பளம் மிகவும் அவசியமாக இருந்தது. ஆனால் நேரங்கழித்து வரும் ஒவ்வொரு நாளும் அம்மா நாராசமாகச் சாடினாள். "அம்மா, பொம்மனாட்டிக்குப் பொம்மனாட்டியே இப்படி நடத்தையைக் கேவலப்படுத்தறது எனக்குத் தாங்கலை"என்ன சொல்லியும் அம்மா புரிந்து கொள்ளவில்லை. அந்த நிலையில் தான் அவள் அப்படி ஒரு முடிவெடுத்தாள்.

அம்மாவை என்னால் மாற்றமுடியாது. அவள் மாறும் வரை என்னால் காத்திருக்கவும் முடியாது.. காலங் கடந்து விடும்... மீறித் தான் ஆக வேண்டும்... திட்டமிட்டே செயல்பட்டாள்... பொருளாதார ரீதியாக அப்பாவையோ, அம்மாவையோ, சார்ந்திருக்க அவசியமில்லை என்ற துணிவில் நிதானமாகச் செயல்பட்டாள்.

ஒரே அறை, சமையலறை. நுங்கப்பாக்கத்தில் சின்ன ப்ளாட்டில் தனியே குடியேறப் போவதைச் சொன்னபோது அம்மா 'ஓடுகாலி' என்று திட்டினாள். கலியாணமாகாத பொண்ணுக்கு எதுக்குத் தனி வீடு.. கண்டவர்களை வீட்டுக்கு அழைக்கத்தான் இந்த ஏற்பாடு என்று சபித்தாள்... அப்பா முகத்தைத் திருப்பிக் கொண்டு பேச மறுத்தார்.

இருபத்தி மூன்று வயதுக்கு வியாபார முடிவுகள் எடுக்கத் தெரிந்த ஒரு பெண்ணுக்கு, வாழ்க்கை முடிவுகளும் எடுக்கத் தெரிய வேண்டும். திவ்யா எடுத்த முடிவு அவள் முன்னேற்றத்திற்குத் தான் வழி வகுத்தது... குடும்பத்திலிருந்து பிரிந்ததனால் மனித உறவுகளை அவள் மதிக்காமல் இல்லை... சம்பளத்தின் பெரும்பகுதி அப்பா, அம்மாவிடம் கொடுத்தாள்.. விடுமுறை நாட்களை அவர்களுடன் தான் கழித்தாள்.. அம்மா 'இந்த வரன், அந்த வரன்' என்று பேச்செடுத்தபோது மட்டும், "அம்மா, கொஞ்சம் காத்திரும்மா... நான் தயாரானதும் உன்கிட்ட சொல்றேன்... நீயே நல்ல வரனாகப் பார்..."என்று சிரித்தாள்.

"தயார், என்ன ஸ்பெஷல் தயார்... பெரிய வளானதுமே பெண் கலியாணத்துக்குத் தயார் தான்''என்று அம்மா சொன்னபோது விளக்கினாள்.. "இல்லேம்மா.. ஒரு பெண் அப்போ உடம்பு ரீதியா குழந்தைபெறத் தயாராகிறா.. ஆனா, மனசளவிலே ஒரு புருஷனோட சரிசமமான உறவிலே கௌரவமா அவ வாழணும்னா, அவளுக்குத் தன்னைக் காத்துக்கற, தன் சுயக் காலில் நிற்கிற பலம் வேணும்மா..."

"ஆமாம்... நாங்கள்ளாம் எங்க காலில் நிற்காம, பிறர் காலில் தான் நிக்கிறமாக்கும்.." அம்மா சூள் கொட்டினாள்.

தானாகத் தன் முடிவுகளை எடுக்கத் துவங்கிய பின், வாழ்வே மாறிப்போனது. வெளியூர் ட்ரிப்புகள், செமினார்கள், மீட்டிங்கு



ஃப்ரெட்டை சாப்பிடும் குழந்தைகள் காய்கறிகளைச் சாப்பிடுவதில்லை என்ற குறை வேண்டாம். நீங்கள் செய்த கறிவகைகளில் ஒரு கரண்டி எடுத்து அத்துடன் ஒரு கரண்டி ரசம்விட்டு மிக்ஸியில் ஒரு திருப்பு திருப்பி, எடுத்து, அதை ஃப்ரெட்டில் தடவி டிபன் பாக்ஸில் வைத்துவிடுங்கள். குழந்தைகள் விருப்பமும் நிறைவேறும். உங்கள் மனமும் திருப்தி அடையும்.

– உமா

இரவில் மீந்த சாதத்தில் ஒரு சுக்குத்துண்டைப் போட்டு, கொதிக்க வைத்து ஆறிய வெந்நீரை ஊற்றி வைத்து, மறுநாள் நீருடன் அந்த சாதத்தைச் சாப்பிட்டால் வாதம், பித்தம் நீங்கும். தாகம் நீங்கும். நல்ல பசியும் ஏற்படும்.

— உமா நாராயணசாமி



கள் என உலகம் வேறாகியது. செயல் மட்டுமா மாறியது... தோற்றம் கூடத்தான் மாறியது... உடம்பு சற்றே பூசி, தன்னம்பிக்கையுடன் தலை நிமிர்ந்து பேசியபோது "திவ்யா ஈஸ் ப்யூட்டிபுல்"என்று பலரும் சொன்னார்கள். அழகு தோல் நிறத்தில் இல்லை charismaவில் இருக்கிறது என்று புரிந்தது.

அவள் முதல் ப்ளாட்டை இருபத்தெட்டு வயதில் வாங்கிய போது உறவினர் மத்தியில் நிறைய கசமுசா எழுந்தது... 'எவனையோ வச்சிண்டுருக்கா... இல்லேன்னா இந்தச் சின்ன வயதில் சொந்த ப்ளாட்டா' என்ற முணு, முணுப்பு எழுந்தது.. ஒரு பெண் வாழ்வில் முன்னேறினால் அவன் கட்டாயமாக ஒரு ஆணின் கவனிப்பால் தான் எனும் அப்பாவித்தனம்... ஒரு பெண்ணின் ஸெக்ஸ் ஏற்கப்படு மளவுக்கு அவள் புத்தி ஏற்கப்படாத அவலம். நடுத்தர வர்க்கக் கோட்பாடுகளிலிருந்து ஒரு பெண் மனத்தளவில் வெளிப்படுவது அவளைப் பொறுத்தவரையிலே சங்கடம்.. அதைப் பிறர் ஏற்பது அதை விடக் கஷ்டம்.

முப்பதாவது வயதில் சொந்தமாக விளம்பர நிறுவனம் துவங்கினாள். நான்காண்டுகளில் டெல்லி, பம்பாய், பெங்களூர் என்று கிளை பரவியது. பல முறை வெளிநாடு சென்று வந்தாள். பெருகி வரும் மல்டி நாஷனல் நிறுவனங்களுக்கு ஈடுகொடுக்க அமெரிக்க விளம்பர நிறுவனத்துடன் கொலாபரேஷனும் முடிந்து விட்டது. சென்ற ஆண்டு டர்ன் ஓவர் நூற்றி இருபத்தி மூணு கோடி.

நூறு ரூபாய் மிகப் பெரிய எண்ணிக்கையாகக் கருதப்படும் குடும்பத்துப் பெண் கோடிக் கணக்கில் வியாபாரம் பேச சாத்யமாக்கியது எது? முனைந்த உழைப்பு, வளர்த்துக் கொண்ட திறமைகள், தேர்ந்தெடுத்த துறை... அவளைப் பற்றி வாய்கிழிய அவதூறு பேசிய உறவினர் பலரும், இப்போது அவள் அவர்கள் குடும்ப விசேஷங்களுக்குச் செல்லும்போது, எதிரே உட்காரவே தயங்குகிறார்கள். சமூகத்தில் என்ன மரியாதை... அவள் வெற்றிபெற்றவள்... ஷி ஈஸ் எ வின்னர்.

அப்பாவின் மறைவுக்குப் பிறகு அம்மா, திவ்யாவுடன் தான் இருக்கிறாள். திவ்யாவின் வாழ்க்கை முறை அவளுக்குப் பரிச்சயமில்லாத ஒன்று. அவளை சமூகம் பெரிய மனுஷியாக மதிக்கலாம். ஆனால், காலா காலத்தில் கலியாணம், கார்த்தி ஆகாமல் என்ன பெண் ஜன்மம்... புரியவில்லை அம்மாவிற்கு.

"அம்மா, எனக்குக் கலியாணத்தின் மேல் எந்தக் கோபமும் இல்லை. அதற்காக கலியாணம் செய்துக்கணும்னு முன்பின் தெரியாத ஒருத்தரோட வாழ்க்கைய அமைச்சுக்க நான் தயாராக இல்லை. தேடிண்டு இருக்கேன். நீ சாவதற்குள் பேரன், பேத்தி பிறக்கும் கவலைப் படாதே."

தனியே ப்ளேனில் பறக்கும்போது, ஐந்து நட்சத்திர ஓட்டலில் ப்ரேக்பாஸ்ட் சாப்பிடும் போது, இரவில் ப்ரம்மாண்டமான படுக்கையில் தூக்கம் வராமல் தவிக்கும்போது என்று பலமுறை திவ்யாவும் இந்த விஷயத்தைப் பற்றிச் சிந்தித்திருக்கிறாள். மனசு ஒரு ஆணின் நெருக்கத்திற்கு நிறையவே ஏங்குகிறது. பதினைந்து ஆண்டுகளுக்கு முன் என்னால் ஜாதகம், குலம், கோத்திரம், வேலை மட்டும் பார்த்துவிட்டு அப்பா, அம்மா காண்பிக்கும் ஆணுடன் சுகமாக வாழ்க்கை அமைத்துக் கொண்டிருக்க முடியும்... எப்போது ஒரு பெண் சுயமாகச் சிந்தித்துச் செயல்படத் துவங்கி விட்டாளோ, அப்போதே வாழ்க்கை முடிவுகள் கஷ்டமாகி விடுகின்றன.

இனி அவள் தேடும் கணவன், அவளைக் காப்பாற்றுபவனாக இருக்க வேண்டிய அவசியமில்லை. திருமணத்திலிருந்து அவள் எதிர்பார்க்கும் ஒரே விஷயம் நட்பு, அன்பு, பரிமாறல் enrichment. வாழ்வில் பல படிகளை ஏறி வந்து விட்ட பின் அவள் விரும்பும் நண்பன், அவளுடன் ஈகோ போராட்டம் நடத்தாதவனாக இருக்க வேண்டும். அவள் வெற்றியைக் கண்டு பொறாமைப்படாதவனாக இருக்க வேண்டும். ஆணாதிக்க சமுதாயத்தில் பிறந்து, வளர்ந்து,

சிந்திக்கப் பழகிவிட்ட எத்தனை ஆண்களால் இது சாத்யம்? அவள் தேடும் கணவனை முப்பத்தாறு வயது வரை அவள் சந்திக்காத காரணமும் இதுதானோ.

இருபத்தி நாலு வயதில் உடன் வேலை செய்த கிருஷ்ணன் கலியாண ஆசையை நிறையவே ஊட்டினான். அப்பா, அம்மாவிடம் தெரிவிக்குமுன் "கலியாணமானால் வேலையை விட்டுவிட வேண்டும்" என்று கண்டிஷன் போட்டபோது அவள் விழித்துக் கொண்டாள். "நான் சம்பாதிக்கிறதில சௌகரியமாகக் குடித்தனம் நடத்த முடியும், நீ வேறு எதற்கு வேலைக்குப் போகவேணும்?" என்றபோது "கிருஷ்ணன், நான் சம்பளத்துக்காகவும், சௌகரியத்துக்காவும் மட்டும் வேலை செய்ய வில்லை. என் தொழில், அதிலே கிடைக்கிற திருப்தி இல்லாம என்னால் நிறைவான வாழ்க்கை வாழ முடியாது ஸாரி..." கிருஷ்ணன் இப்போது அவள் பெங்களூர் கிளையின் க்ளையண்ட் சர்வீஸ் டிபார்மெண்டில் ஒரு மானேஜர். மூன்று குழந்தைகளின் தந்தை. அவன் எதிர்பார்ப்பு நிறைவேறியது. அவள் எதிர்பார்ப்புகள்...?

விடியற்காலை ப்ளைட் என்றாலே திவ்யாவுக்குப் பிடிக்காது. ஆனால் எல்லாப் பெரிய நகரங்களுக்கான ப்ளைட்டும் அதிகாலையில் தான் கிளம்பும். நாலுமணிக்கு எழுந்து குளித்து ரெடியாகும்போது அலுப்பாக இருந்தது. ஜூடி விடுப்பெடுத்திருந்தது வேறு கை உடைந்தாற் போலிருந்தது. ஒவ்வொரு பேப்பரையும் சரி பார்க்க வேண்டி யிருந்தது. அவளுடைய சீனியர் மானேஜர்கள் மூவர் ஏற்கெனவே இரண்டு நாளாக டில்லியில் அமெரிக்கன் பெட்ரோலியம் கம்பெனி அதிகாரிகளுடன் பேச்சுவார்த்தையில் ஈடுபட்டிருந்தார்கள். ஒரு ஆண்டுக்கான பன்னிரண்டு கோடி விளம்பர பட்ஜெட்டைப் பெற அத்தனை விளம்பர ஏஜென்ஸிகளும் போட்டி போட்டு நின்றன. திவ்யா மெகன் ஸியின் மாபெரும் வெற்றி. இன்று அவள் தலைமையில் ஒப்பந்தம் கையெழுத்தாகிறது... மெகன்ஸியின் அதிகாரியும் அமெரிக்காவி லிருந்து வருகிறார்... மதியம் அமெரிக்க பெட்ரோலியம் அதிகாரிகளுடன் லஞ்ச். மூன்று மணிக்கு தொழிலதிபர் நந்தாவுடன் மீட்டிங். இரவு ப்ளைட்டில் சென்னை திரும்ப வேண்டும். இந்த கம்பெனியின் அகௌண்ட் கிடைப்பதற்காக உழைத்த டில்லி கிளையைச் சேர்ந்த மூன்று மானேஜர்களுக்குப் பாராட்டாகக் குடும்பத்துடன் சிங்கப்பூர் செல்ல டிக்கெட் அளிக்கப்போவது அவர்களுக்குப் பெரிய ஆச்சரியமாக இருக்கப்போகிறது. தேவில் லவ் இட்...

அவள் தனக்கே ஒரு சிங்கப்பூர் விடுமுறை அளித்துக் கொள்ளலாம். ஆனால் தொழில் முடிந்த நேரங்களில் அவள் தனியே என்ன செய்யப் போகிறாள். தனிமை.. உயரச் செல்லச் செல்ல அதிகமாகவே உறுத்தும் தனிமை உணர்வு. மனமும், உடம்பும் நெருக்கமான ஒரு உறவுக்கு ஏங்குகிறது. இத்தகைய ஏக்கத்தி லிருந்து விடுபட வழி தெரியாமல் தான் பிரபல மான, புத்திசாலி நடிகைகள் கூட ஏற்கெனவே திருமணமான ஒருவனிடம் தங்களை இழந்து, இரண்டாம் தாரமாக சமூக அங்கீகாரம் பெற்று வாழ்கிறார்களோ.

டில்லி விமான நிலையத்தில் திவ்யா மெகன்ஸியின் உயர் அதிகாரிகள் கூட்டமாக அவளை வரவேற்றனர். மெரிடியன் ஹோட்டலை அடையும் வரை காரிலேயே அன்றைய மீட்டிங்கின் அஜெண்டாவை விளக்கினார்கள். திவ்யாவின் கம்ப்யூட்டர் மூளை அவர்களுக்குப் பரிச்சயமான ஒன்று. பேசி முடிக்கு முன்பே நுணுக்கமான கேள்விகள் பல முனையி லிருந்தும் எழும். சரியான பதில்கள் இல்லை என்றால் மேடத்திற்குக் கோபம் வரும். மேடம்



எங்கள் வீட்டில் பிறந்த நாள் விழாவுக்கு நான்கு பக்க சுவர்களிலும் இரண்டு தளிர் வெற்றிலைகளை சுவரில் வைத்து அதன் காம்புகளின் மேல் ஒரு சிகப்பு ரோஜாப்பூவை வைத்து சுவரோடு செல்லோடேப் துண்டால் ஒட்டினேன். கலை நயத்துடன் இவ்வாறு ஏற்ற இறக்கமாக அதிக அளவில் ஒட்டியது மிக அழகாக இருந்ததுடன் வந்திருந்தவர்கள் கவனத்தை ஈர்த்து 'அதென்ன பிளாஸ்டிக் வெற்றிலைகளா' என்று வியந்து கேட்க வைத்தது.

-விஜயா சுப்பிரமணியம்

# நீங்கள் 30 வயதைத் தாண்டிவிட்டீர்களா, இறுக்கமுற்றவர்களா

## உங்களுக்குத் தேவை 30+ வழங்கும் சக்தி!!

உடலூரத்தை மீண்டும் மீட்டுத்தரும். புது வலுவூட்டும் காப்ஸ்யூல் தேர்ட்டி ப்ளஸை உபயோகித்து உங்கள் சக்தியை கண்டறிய முயற்சியுங்கள். உடல் சோர்வையும், மனத் தளர்ச்சியையும் போக்குகிறது. உங்களுடைய உடம்புக்கு ஒரு டானிக் போல் இது செயல்படுகிறது.

உங்கள் வயது உங்களை வயோதிகமாக்க அனுமதிக்காதீர்கள். உங்களுடைய உடலுக்கு மீண்டும் சக்தியூட்டி, என்றும் திடகாத்திரமாக வைத்துக்கொள்கிற தேர்ட்டி ப்ளஸின் சக்தியைப் பெறுங்கள்.

ஒரு பாக்கெட்டை வாங்கிடுங்கள் இன்றே!

தேர்ட்டி ப்ளஸ் பற்றிய மேலும் விவரங்களைப் பெற, ஒரு இலவச சிறு புத்தகத்திற்கு எழுதுங்கள்.




**Thirty Plus©**
ENERGY
RE-CHARGERS

வலுவிற்கும் சக்திக்கும்.

கத்தரிக்காய் துவையலுக்கு பூண்டு வைத்து அரைப்பவர்கள் பூண்டை தனியாக எண்ணெயில் வதக்க வேண்டும். கத்தரிக்காயை நெருப்பில் சுடும் முன்னர், கத்தரிக்காயில் நடுவில் கத்தியால் கீறி, அதற்குள் இரண்டு அல்லது மூன்று உரித்த பூண்டை சொருகி வைத்துச் சுட்டு, பின்னர் அரைக்கலாம். இதில் வாசனையும் சுவையும் அதிகம்.

– உமா



மிகவும் அன்பானவர், ஆனால் வேலை விஷயத்தில் படு கண்டிப்பு. திறமையின்மையை அவரால் பொறுக்கவே முடியாது.

சோப்ரா கையிலிருந்த லேப்டேப் கம்யூட்டரில் புள்ளி விவரங்களைக் குடைய ஆரம்பித்தபோது திவ்யா குறுக்கிட்டாள். "மிஸ்டர், சோப்ரா, நீங்கள் தயாரித்த திட்டம் இது. இவற்றின் புள்ளி விவரங்கள் உங்கள் மூளையில் அடுக்கப்பட்டிருக்க வேண்டும். கை நுனியால் மிஷினில் தேடக் கூடாது." சோப்ராவுக்கு வியர்த்து விட்டது... "ஸாரி..." "கம் ஆன் ரிலாக்ஸ்..." திவ்யா சோப்ராவின் தோளை மெல்ல அழுத்தினாள்... ஒரு மேலதிகாரி தோழமையுடன் தொடும்போது, நரம்புகள் எப்படி ரிலாக்ஸ் ஆகும் என்பது அவள் அறிந்த ஒன்று...

மெரிடியன் ஹோட்டல் இந்திரலோகமாக இருந்தது. அம்மா, இப்படிப்பட்ட ஒரு இடத்தைக் கனவிலாவது பார்த்திருப்பாளா? அம்மா மாதிரி எத்தனை ஜனங்கள் இந்தியாவில்... ஏன் இருபது ஆண்டுகளுக்கு முன் ஒரு ஆழாக்குப் பாலில் இரண்டாழாக்குத் தண்ணீர் சேர்த்து மூன்று பேருக்கு, இருமுறை காபி கலந்த அவளுக்கே இப்படிப்பட்ட வாழ்க்கை பற்றி ஏதும் தெரியுமா? இன்று எல்லாம் கிடைத்து விட்ட நிலையில் நாளைக்குப் பத்தாயிரம் ரூபாய் சூவிட் அறையும், காத்திருக்கும் காரும், ஒரு சாப்பாட்டுக்கு இரண்டாயிரம் ரூபாய் பில்லும் மிகவும் சகஜமாகிவிட்டது.

போர்டர் ஒவர்நைட்டரைக் காரிலிருந்து இறக்க "ஐ வில் பி ரெடி இன் பார்ட்டி மினிட்ஸ்..." திவ்யா லாபியில் நுழையும் போது... "ஹாய்... ஐ நோ யூ..." உரத்த குரலுடன் அவள் இரு கைகளையும் பற்றியது... பழக்கமான முகம்... ஆனால் 'சட்'டென அடையாளம் தெரியவில்லை. மிக காஷுவலான ஜீன்ஸ், டீ ஷர்ட், ப்ளேசர்... சற்றே முன் வழுக்கை... தங்க ப்ரேம் கண்ணாடி... யார் இந்தப் பார்த்த முகம்...

"ஹாய்... நீ திவ்யா இல்ல... அல்லது திவ்யாவின் சிறு வயதில் காணாமல் போன இரட்டையரில் ஒருத்தியா?"

திவ்யா குபீரெனச் சிரித்தாள். கண்ணை சிமிட்டி சிமிட்டிக் குறும்பாகப் பேசுவது அரவிந்த்... அவள் ஆரம்ப காலங்களில் வி அண்ட் எம்மில் உடன் வேலை செய்த அரவிந்த்... ஜோதி இவளுக்கு நட்பாய்ப் பல விஷயங்களைக் கற்றுத் தந்தாள் என்றால், இந்த அரவிந்த் தன் கேலியாலேயே அவளுக்குப் பல விஷயங்களைப் புரிய வைத்திருக்கிறான்.

"ஹாய்... இப்போதெல்லாம் தலையில் வேப்பெண்ணை தடவிக் கொள்வதில்லையா... கண்ணிலேயிருந்து கரைந்து கன்னத்தில் ஓடுமே கறுப்பான மை அதையும் காணோம்... அட, அட, நிமிர்த்த முடியாத நாய் வால் மாதிரி நிற்குமே அந்த எலிவால் பின்னல் – அதையுமில்ல காணும்... இது யாரு... திவ்யாவின் மறு பிறப்பா...?"

"உஷ்... அரவிந்த்... லாபியில் எல்லாரும் நம்மை வேடிக்கை பார்க்கிறாங்க... யூ ஹேவ் நாட் சேஞ்ட்..."

"நான் என்ன திவ்யாவா, ஆளே மாறிப் போக... உன்னைப் பற்றி பிஸினஸ் மேகஸின்களில் படித்தேன்... ஏதாவது மாயாஜால மாஜிக் வித்தை கற்றுக் கொண்டாயா... நான் அறிந்த கட்டுப்பெட்டி திவ்யா... 'ஜிம்'முன்னு ஆகாசத்திற்குப் போய் திவ்யா மெகன்ஸியின் தலைவியாகி வந்துவிட்டாளா?"

"அரவிந்த்... எனக்கு நாற்பது நிமிடத்தில் கார் வந்துவிடும்... அதற்குள் ப்ரேக்பாஸ்ட், சேன்ஜ் எல்லாம் முடித்தாக வேண்டும்... பேச நேரமில்லை..."

"தெரியும், தெரியும்... உன் ஒவ்வொரு நிமிடத்தின் விலையும் என்ன என்பது எனக்குத் தெரியும். அதற்காக, பழைய நண்பனுக்காக அரை மணி ஒதுக்கக் கூடாதா?"

"அப்கோர்ஸ், அரவிந்த்... அரைமணி என்ன, உன்னோடு உட்கார்ந்து நான் முழுவதும் அரட்டை அடிக்க வேண்டும் போலிருக்கு. ஆனால் பத்தரைக்கு அமெரிக்கன் பெட்ரோலியம் மீட்டிங். லஞ்ச் முடிந்தவுடன் நேரே நந்தாவின் ஆபீஸ்... அதன் பிறகு

ஆபீஸில் ஸ்ட்ராடஜி மீட்... நேரே ஏர்போர்ட்..."

"கட் யுவர் ஏர்போர்ட்... உன் டிக்கெட்டைக் கொடு... நான் டிக்கெட்டை நாளைக்கு மாற்றுகிறேன்... சாயந்திரம் அடியேனுடன் பழைய நட்புக்காக ஒரு டின்னர்..."

"மாற்ற முடியாதே... நாளைக்குச் சென்னையில் முக்கியமான வேலையிருக்கே...?"

"ஸ்டுபிட் திவ்யா... உன் வாழ்க்கையை நீ நடத்துகிறாயா? உன் பிஸினஸ் நடத்துகிறதா? உன்னைவிட உனக்கு எதுவுமே முக்கியமாக இருக்கக் கூடாது... புருஷன் ஆபீஸிலிருந்து திரும்பும் நேரமாகிவிட்டது என்று லேடீஸ் க்ளப் மீட்டிங்கிலிருந்து பாதியில் ஓடும் குடும்பத் தலைவி மாடல் பெண்ணுக்கும், உன் பிஸினஸ் மாடலுக்கும் என்ன வித்தியாசம்? ஒரு பழைய நண்பனுடன் பேச விருப்பமிருந்தால் உன் விருப்பப்படி முடிவு செய்..."

"ஓ.கே... இந்தா டிக்கெட்... ஏழரை மணிக்கு லாபியில் சந்திப்போம்..."

"அதுதான் புத்திசாலிக்கு அடையாளம்... வீ வில் மீட்..."

திவ்யா ப்ரேக்பாஸ்ட்டைக் கடித்தவாறே அரவிந்தைப் பற்றிச் சிந்தித்தாள். எங்கே வேலை செய்கிறான் என்று கூடக் கேட்கவில்லை. சுற்றி, சுற்றி மரியாதை தரும் மனிதர்கள் மத்தியில், அவன் தந்த சரிசமமான தோழமை தந்த ஷாக்கில் எல்லாமே மறந்து விட்டது. ஆரம்ப நாட்களில் இந்த அரவிந்த் அவளை எவ்வளவு கேலி செய்திருக்கிறான்! இவன் காரணமாகவே அவள் பல முறை விளம்பரத் துறையை விட்டே விலக நினைத்ததுண்டு. "தாழ்வு மனப்பான்மையால் சின்ன விஷயங்களைப் படு சீரியஸாக எடுத்துக் கொண்டு மாய்ந்து போகாதே... உன் ஆங்கிலத்தைக் கேலி செய்தால், நாம ஆங்கிலம் பேசக் கற்றுக் கொள்ள இது ஒரு சவால் என்று நினைத்துக் கொள்" என்று ஜோதிதான் எடுத்துக் கூறினாள்.

அரவிந்துடன் அவன் மனைவி குழந்தைகளும் தங்கியிருக்கக் கூடும்... ஒரு குடும்பத்துடன் பேசிச் சிரித்து உணவருந்தும் அனுபவம் அவளுக்கு இருந்ததேயில்லை... அற்ப அனுபவத்திற்காக ஓர் அதிகப்படி மாலையை தில்லியில் கழிப்பதில் தவறில்லை...

முகம் கழுவி, நல்ல பச்சை நிற ப்ளெயின் ஷிஃபான் புடைவையை அணிந்து கொண்டாள். "மேம்... சேஞ்ச் டு பிஸினஸ் சூட்..." என்று ஜூடி பலமுறை கூறியும் கூட ஏனோ உடை விஷயத்தில் அவளால் இன்னும் மாற முடியவில்லை. கணுக்கால் தெரிந்தாலே சின்ன வயசில் அம்மா தலையில் 'ணங்' என்று குட்டுவாள். அந்த வலியின் பிரதிபலிப்பாக இருக்கலாம்... மூன்றுவட ஜப்பானிய முத்துமாலையையும், காதணிகளையும் அணிந்து கொண்டாள். குட்டையாக வெட்டிய முடி இரண்டே வாரவில் அடங்கிவிட்டது. மெல்லிய உதட்டுச் சாயம்... காரிலிருந்து இறங்கிய முப்பத்து ஒன்பதாவது நிமிடம் திவ்யா லாபியில் இருந்தாள்... நாற்பதாவது நிமிடம் காத்திருந்த காரில் ஏறினாள்.

அதன் பிறகு திவ்யா தன்னை மறந்து போனாள்... அரவிந்தை மறந்து போனாள்... பிஸினஸ்... பிஸினஸ்... ஒருமுனைப்புத்தான்...

ஆறரை மணிக்கு ஹோட்டலுக்குத் திரும்பும்போதுதான் மறுபடியும் இரவு டின்னர் பற்றிய ஞாபகம் வந்தது...

இந்த டென்ஷனுக்குப் பிறகு ஒரு ரிலாக்சேஷனும் அவசியம்தான்...

அரவிந்த் அவளுக்காக லாபியில் காத்திருந்தான். "இந்தா உன் டிக்கெட்... நாளைக் காலை ப்ளைட்டுக்கு மாற்றிவிட்டேன்..."

"தேங்க்ஸ் அரவிந்த்..."

"ஓகே... நம்மிடம் மூன்று மணி நேரம் இருக்கு. என்ன செய்யலாம் சொல்லு... திவ்யா மெகன்ஸியின் தலைவியாக இருக்க விரும்பினால் ஸ்விம்மிங் பூல் எதிரே ரெஸ்டாரெண்டில் தாழ்ந்த குரலில் பேசியபடி சாப்பிடலாம். வெறும் திவ்யாவாக வந்தால் டில்லித் தெருக்களில் நடந்தபடியே வம்படிக்கலாம்..."



குழந்தைகளுக்குத் தேங்காயை வில்லைகளாகச் செய்து கடித்துச் சாப்பிட கொடுக்க வேண்டும். பசும்பாலைவிட அதிக சத்து வாய்ந்தது தேங்காய்ப்பால். ~~இதை நான் சொல்லவில்லைங்க~~! ~~டிவியில் ஒரு டாக்டர் சொன்னதுதான் இது~~.

— ஜானகி

# ROLLS

EMERGENCY LIGHTS



இந்தியாவில் அதிகமாக
விற்பனையாகும்
எமர்ஜென்சி லைட்கள்

**ROLLS
APPLIANCES (P) LTD**

32, 10th Street, Gandhipuram,
Coimbatore - 641 012.
Ph : (0422) 434638 Grams : ROLLS

Available at all leading Electrical
and Appliances Shops

**Dealers Enquiry Solicited
in unrepresented areas**

# Always Ask



Key BRAND

**ICE
CREAM
POWDER**

**CUSTARD
POWDER**

**BAKING
POWDER**

**JELLY
CRYSTALS**




Unique Advtg. Ph:457828

MFD. BY
ROOPAM ENTERPRISES
MADRAS-600 035.
✆ 452293

இல்லத்தரசிகளே! ஒரு மாறுதல் அல்லது அவ சரத்திற்கு தனியாப்பொடி, பருப்புப்பொடி அல்லது தேங்காய்ப்பொடி ஏதாவது ஒன்றை எடுத்துக் கொள்ளுங்கள். சாப்பிடுவதற்கு அரைமணி முன்பு தேவையான அளவு நீர் சேர்த்து, சற்று தளர கலந்து வைத்து விடுங்கள். சிறிது தேங்காய் எண்ணெயில் கடுகு, காயம் தாளித்து விடுங்கள். அவ்வளவுதான்! கமகமக்கும் துவையல் ரெடி!

–ஜெயா



"கம் ஆன்... வி வில் கோ அவுட்" காத்திருந்த கார் டிரைவரை மறுத்துவிட்டு இருவரும் வேர்க்கடலை கொறித்தபடியே புதுதில்லித் தெருக்களில் காலாற நடந்தார்கள்.

"எனக்கு விளம்பரத் துறை, அதன் அவசரம், நேரமற்ற தன்மை எல்லாம் அலுப்பாக இருந்தது. அதனால்தான் வேறு துறைக்கு மாற விரும்பினேன். எம் அண்ட் எம்மை விட்டவுடன் அமெரிக்கா சென்றுவிட்டேன். கம்ப்யூட்டர் துறையில் பிஎச்.டி. செய்தேன். அடிக்கடி இந்தியா வந்து போகும்போது, ஜோதியைச் சந்திப்பேன். உன்னைப் பற்றி எல்லா விஷயங்களும் தெரிந்தாலும் சந்திக்க வாய்ப்புக் கிடைக்கவில்லை."

"திவ்யா... உன்னை நான் ரொம்ப அட்மையர் செய்கிறேன். ஒரு மிகச் சாதாரணமான நடுத்தர வர்க்கச் சூழலிலிருந்து வரும் பெண் விளம்பரத்துறையில் இத்தகைய சாதனைகள் செய்வது சாதாரணமான விஷயமல்ல..."

"நிறைய உழைத்திருக்கிறேன் அரவிந்த். ரொம்ப நிறைய..."

"ம்... சொல்லு... நடுவில் உனக்கென்ன செய்து கொண்டாய்? கல்யாணம் செய்து கொள்ளவில்லை, தெரியும்... அட்லீஸ்ட் ஒரு நல்ல பாய் ஃப்ரண்ட்... காதலன் ஏதாவது...?"

"நோ... ஏனோ தெரியவில்லை. அத்தகைய உறவே ஏற்படவில்லை. திடீரென்று இப்போது தான் காலங்கடந்துவிட்டதோ என்ற ஒரு பயம் தோன்றுகிறது. வாட் அபௌட் யூ?"

"ஐ வாஸ் மேரீட்... மார்கரெட் அமெரிக்கப் பெண்... எட்டு வயது மகள் கூட இருக்கிறாள்... ஆனால் எங்கள் வாழ்க்கை முறைகள் மாறிவிட்டன. நான் இந்தியாவில் சாஃப்ட்வேர் கன்ஸல்டன்ஸி துவங்கியிருக்கிறேன். தில்லி ஹெட்குவார்ட்டர்ஸ்... வருடத்தில் எட்டு மாதமாவது இந்தியாவில் இருந்தாக வேண்டும். மார்கரெட்டுக்கு இந்த வாழ்க்கை முறை பிடிக்கவில்லை... பிரிந்துவிட்டாள்... அதோடு என் மகளையும் நானே வளர்க்க வேண்டும் என விரும்புகிறாள். எனக்கு ஒரு தந்தையாக இருப்பது சந்தோஷமான விஷயமாக இருக்கிறது. ரீதாவை தில்லியில் போர்டிங் ஸ்கூலில் சேர்க்கலாம் என்றிருக்கிறேன்..."

"தமிழ்நாட்டிலேயே ஊட்டியில் சேர்த்துவிடு... நானும் அடிக்கடி பார்த்துக் கொள்ள முடியும்... இல்லாவிட்டால், சென்னையில் என்னுடன் தங்கட்டுமே...?"

"ஏன், உனக்கிருக்கும் வேலைகள் போதாதா? உனக்கு ஏது நேரம்?"

"வீட்டில் அம்மா இருக்கிறாள், வேலைக்காரர்கள் இருக்கிறார்கள்... என்றாலும் கட்டாயமாக க்வாலிடி டயம் ஒதுக்க முடியும்..."

அரவிந்தும், திவ்யாவும் தில்லிக் குளிரில் கைகோத்துக் கொண்டு இந்தியாகேட்டில் நடந்தார்கள். வழியிலிருந்த தாபாவில் ஆலு பரோட்டா சாப்பிட்டார்கள். பட்படாவில் ஏறி ஹோட்டலுக்குத் திரும்பும்போது நடு இரவைக் கடந்திருந்தது. "தேங்க்ஸ் அரவிந்த்... தேங்க்ஸ் ஃபார் எ லவ்லி ஈவினிங்... நான் நானாக இருந்தது இன்றைக்கு மட்டும்தான்... உன் கம்பெனியை ரொம்பவே ரசித்தேன். நாம மறுபடியும் எப்போது சந்திக்கலாம்...?"

அடுத்த வாரம் அரவிந்த் சென்னை வந்தான். அரவிந்தின் நட்பு போலித்தனமான அலுவலக உறவுகளிலிருந்து மாறுபட்டிருந்தது. இந்த நட்பில் அவன் உயர் அதிகாரியுமில்லை. பதில் சொல்ல வேண்டிய ஊழியருமில்லை. இமேஜைப் பற்றிக் கவலைப்பட வேண்டிய அவசியமுமில்லை.

அவள் வாழ்வில் ஒரு புது வசந்தம்... "ஏண்டிம்மா... அந்த அரவிந்தன் வந்தா அப்படித் துள்ளறியே... இருவது வயசுப் பொண்ணு மாதிரி குதிக்கறியே... பேசாம அவனைக் கல்யாணம் பண்ணிக்கறது தானே...?" அம்மா இடித்துக் காட்டினாள்.

"அம்மா, அரவிந்த் அமெரிக்காவிலே ஒரு காலும், தில்லியில் மறுகாலுமாக வாழ்பவர். அவருக்குக் கல்யாணமாகி ஒரு பெண் கூட இருக்கா."

ஒருமுறை அரவிந்த் ரீதாவை அழைத்து வந்தான். பொம்மை மாதிரியிருந்த ரீதாவின்

அமெரிக்க ஆங்கிலம் புரியவில்லை.. ஆனால் அவன் 'ஹாய், பாட்டி' என்றபோது அம்மா "வெள்ளை வெளேர்னு என்ன நிறம்டீ" என்று சிரித்தாள். அம்மாவும் காரில் ஏறிக் கொண்டு அவளுடன் கிஷ்கிந்தா, மஹாபலிபுரம் என்று சென்று வந்தாள். "அந்த ரீதா அநியாயச் சமர்த்து. அந்தத் தடியனைத்தான் எனக்குப் பிடிக்கவில்லை" என்றாள்.

"பேசாம ரீதாவை இங்கே ஸ்கூலில் சேர்த்து விடலாமா?" திவ்யா கேட்டபோது அம்மாவின் கண்களில் பிரகாசம் தோன்றியது.

"நிஜமாத்தான் சொல்றியா திவ்யா...? அவப்பா தப்பா நினைக்க மாட்டானா...? அவ இங்கே இருந்தா எனக்குப் பொழுது போகும்.." திவ்யா அம்மாவை வினோதமாகப் பார்த்தாள்... புரிந்தது... அவளுடைய வியப்பான வாழ்வு, செயல் எதுவும் அம்மாவுக்குப் புரியவில்லை.. ஆனால், எட்டு வயதுக் குழந்தையின் செயல்களில் பரிச்சயம் தென்படுகிறது...

இப்போதெல்லாம் திவ்யா மாதாமாதம் அரவிந்தின் வரவுக்காக ஏங்குகிறாள். அவன் சான்ப்ரான்சிஸ்கோவில் இருந்தாலும் சரி, தில்லியிலே இருந்தாலும் சரி, தினம் ஒரு முறையேனும் திவ்யாவைத் தொலைபேசியில் அழைக்கிறான். லவ்டேலில் சேர்ந்த ரீதாவை இருவருமாகச் சென்று பார்க்கிறார்கள். சின்ன விடுமுறைகளில் அவள் சென்னையில் திவ்யாவுடன் தங்குகிறாள். பாட்டியுடன் கேரம் விளையாடுகிறாள். மழலைத் தமிழில் ஸ்லோகம் கற்றுக் கொள்கிறாள். பாட்டியின் முடியில் பத்து பின்னல் போட்டுக் கைகொட்டிச் சிரிக்கிறாள். ரீதா திரும்பப் பள்ளிக்குச் செல்லும்போது அம்மாவின் முகம் வாடிவிடுகிறது.

அரவிந்த் தில்லியில் ஒரு சின்ன ஃப்ளாட் வாங்கிவிட்டான். ஒவ்வொரு முறையும் ஹோட்டலில் தங்குவதைவிட இது மிகவும் சுலபமாக உள்ளது. "திவ்யா, உனக்கு மெட்ராவில் ரிலாக்சேஷனே கிடையாது. இங்கே கால் நீட்டி உட்கார்ந்து கொள். நான் சப்பாத்தியும், கோப்தாவும் செய்து தருகிறேன்..." ஹவுஸ் கோட் அணிந்து கால் நீட்டி சோபாவில் அமர்ந்து திவ்யா, சப்பாத்திக் குழவியை உருட்டும் அரவிந்தைப் பார்க்கிறாள். ஓர் ஆண், அதுவும் கௌரவமான உயர் அந்தஸ்திலுள்ள ஆண் சமையலறையில் வேலை செய்யும்போது, தான் சொகுசாக அமர்ந்திருப்பது சங்கடமாகக் கூட இருக்கிறது. அவளுடைய அப்பாவோ, மற்ற ஆண் உறவினர்களோ, பால் காய்ச்சக் கூட கற்றுக் கொண்டதில்லை.

"வெளிநாட்டில் வசிப்பதில் அதுதான் லாபம் திவ்யா. அந்தக் கலாசாரத்தில் எந்த வேலைக்கும் பிறர் தயவை எதிர்பார்க்காத கர்வம் உண்டு. இங்கே சமையலறையை எட்டிப் பார்த்திராத பல மாணவர்களும் அங்கே சென்ற பிறகு நன்கு சமைக்கக் கற்றுக் கொண்டு விடுகிறார்கள். நம் சமூகத்திலே, குடும்ப வாழ்க்கையிலே சார்புத்தன்மை ரொம்ப அதிகம்... மனைவி வீட்டில் இல்லாவிட்டால் கணவன் ஹோட்டலைத்தான் தேடிப் போவான். வீட்டு வேலைகளில் கணவனுக்கு மனைவி மேல் சார்பு. பொருளாதார ரீதியாக மனைவிக்குக் கணவனிடம் சார்பு. இது நம்ம திருமணங்களுக்கு ஸ்திரத்தன்மையைத் தந்திருக்கலாம். ஆனால், இதுவே அனாவசிய பொறாமை, அதிகாரம், ஆத்திரம், கோபம் எல்லாவற்றிற்கும் நிறைய இடம் தந்துவிட்டது..."

திவ்யா அரவிந்தின் வாதத்தை மெல்லக் கிரகித்தாள். "உண்மை அரவிந்த். நான் ஏன் கல்யாணம் செய்து கொள்ளவில்லை என்று கேட்டாயே... இதுதான் காரணம்.. நான் பொருளாதார ரீதியாக ஒருவனைச் சார்ந்து நிற்க வேண்டிய அவசியமில்லை. வீட்டு வேலைகளை அவன் விரும்பியபடி நான் செய்யவும், அவனுக்காகக் காத்திருக்கவும் என் ப்ரொபஷனல் டிமாண்ட்ஸ் இடம் கொடுக்காது. வீண் பிரச்னை ஏன் என்று விலகிவிட்டேன்..."

"வாட் யூ நீட் ஈஸ் ஒன்லி ஷேரிங்..." இருவருமாக சமையலை ருசித்துச் சாப்பிட்டார்கள். வெகுநேரம் வீடியோவில் படம் பார்த்தார்கள். அரவணைப்பின் ஆனந்தத்தில் உறங்கிப் போனார்கள். திவ்யாவுக்கு மறுபடி

---



ஜாமூன் ஜீரா மீந்து விட்டது. அதை வீணாக்க மனமில்லை. ஜீராவில் ஒரு கப் தேங்காய்த் துருவல் சிறிது ஏலக்காய்த்தூள், தேவையான அளவு மைதா மாவு சேர்த்து கெட்டியாகக் கரைத்து எண்ணெயில் சிறிது சிறிதாக பக்கோடா போல் போட்டு எடுத்தேன். சுவையான இனிப்பு போண்டா நொடியில் காலியாகி விட்டது.

— புவனாபிரகாஷ்

இல்லதரசிகளுக்கு புதிய துணை
சமையல் கலையில் திருப்புமுனை
மில்க் பாய்லர், இட்லி குக்கர்,
வாட்டர் ஃபில்டர், குழிகரண்டி
எல்லாம் தந்திடும்

# Murugan

முருகன் மெட்டல் என்றாலே
முகம் மலரும் தன்னாலே


















## முருகன் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ்

21, பொன்னப்ப செட்டி தெரு, சென்னை-3.
போன்: 582182

யும் அதிகாலை ஃப்ளைட்...

“அம்மா, உன்னோட கொஞ்சம் பேசணும்...”

அம்மா வியப்புடன் பார்த்தாள். அம்மா - மகளுக்கான உறவு என்றுமே சந்தேகத்திலும், எதிர்ப்பிலும்தான் இருந்திருக்கிறதே தவிர ஒருவர் கருத்தை மற்றவர் ஏற்கும் நிலையில் இருந்ததில்லை.

“நீ அரவிந்தைப் பற்றி என்ன நினைக்கிறே?”

“என்னைக் கேட்டுக் கொண்டா பழகறே?”

“அவர் வேற ஜாதி...”

“ஆமாம்... ஜாதி என்ன ஜாதி... குலம், கோத்திரம், ஜாதகம் பார்த்து இனிமே உனக்குக் கல்யாணம் பண்ண முடியுமா... உன் ஜாதியே மாறிப் போயிடுத்தே...!”

ஓ... அம்மா இப்போது ஜாதிக்கு வேறு விளக்கம் தருகிறாள்.

“சரிம்மா... நான் விளக்கமாகவே சொல்லிடறேன். கல்யாணம் செய்துக்கறியான்னு அரவிந்த் என்னைக் கேட்கிறார். எனக்கு ஒண்ணும் புரியலை... அதான் உன்னைக் கேட்டேன். அரவிந்த் ஏற்கெனவே கல்யாணமாகி டைவர்ஸ் ஆனவர். குழந்தையும் இருக்கு... அவர் நிரந்தரமா இந்தியாவில் தங்கப் போறதும் இல்லை... முக்கியமா மெட்ராஸில தங்கப் போறதில்லை... இது எந்த மாதிரிக் கல்யாணமா இருக்கும்னு எனக்குப் புரியலை...”

“உன்னை மாதிரி எல்லாம் தெரிஞ்சவாளுக்கெல்லாம் அதெல்லாம் புரியத்தான் செய்யாது. எனக்குக் கல்யாணமான போது மாமனார், மாமியார், நாத்தனார், மச்சினர்னு கூட்டுக் குடும்பத்திலே லால்குடியிலே இருந்தோம். அங்க ஆபீஸ்லேதான் உங்கப்பா க்ளார்க்கா இருந்தார். திடீர்னு திருச்சிக்கு மாத்தலாயிடுத்து... உங்க பாட்டி, தாத்தா, திருச்சியிலே குடித்தனம் போட சம்மதிக்கவில்லை. அவர்களுக்கு வீட்டிலே மாடு, கன்றைக் கவனிக்க வீட்டு வேலையைச் செய்யன்னு நான் தேவைப்பட்டேன். பண்டிகை, லீவுன்னா உங்கப்பா லால்குடிக்கு வருவார். அப்பதான் நீயும் பொறந்தே. ஒரு வருஷம் இல்ல; எட்டு வருஷம் இப்படித்தான். அதனால எங்க கலியாணத்துக்கு என்ன ஆச்சு...? அந்நியோன்னியமாத்தான் இருந்தோம். அவர் கடமையை அவர் பார்த்தார். குடும்பத்துலே என் கடமையை நான் பார்த்தேன். இன்னிக்கு உன் தொழிலை நீ பார்க்கிறே. அவர் தொழிலை அவர் பார்க்கப் போறார். அதனால அந்நியோன்னியம் குறைஞ்சுடுமா என்ன...? புருஷன், பெண்டாட்டிங்கற பந்தம்தான் போயிடுமா...? இன்னும் சொல்லப் போனா நெருக்கம் அதிகமாகவே ஆகும்...

உனக்கும் முப்பத்தேழு முடிஞ்சு போச்சு. இந்த வயசிலே பத்து மாசம் வயத்துலே சுமந்து பெற்றுப் போட உனக்கு நேரமுமில்லை. வயசும் இல்லை... ரெடிமேடாக் குடும்பம் வர்றபோது வேண்டாம்னு எதுக்குச் சொல்லணும்...?”

திவ்யா திகைத்து நின்றாள். திடீரென்று அவளுக்கு எல்லாம் புரிந்தது. அன்று அம்மாவுக்காக யாரோ முடிவெடுத்தார்கள். இன்று இவள் தன் வாழ்க்கை முறை எப்படி அமைய வேண்டும் என்று தான் முடிவெடுக்கப் போகிறாள்... ஆனால் முடிவில் பெரிய வித்தியாசமில்லை...

சோர்வான ஒரு நேரத்தில் பகிர்ந்து கொள்ள ஓர் உறவு, சேர்ந்து சிரிக்க ஓர் உறவு, அரவிந்தை விடச் சிறந்த சாய்ஸ் வேறு இருக்க முடியுமா? திவ்யா போனைச் சுழற்றினாள்...

“அரவிந்த் லெட் அஸ் ஹேவ் எ ஸிம்பிள் மேரேஜ்...”

அம்மா ரீதாவுக்கு பட்டுப் பாவாடை வாங்க நல்லி கடைக்கு ஓடினாள்.

(முற்றும்)



சிலர் தலைச்சன் பிரசவத்துக்கு இருக்கும் பெண்களிடம், தாங்கள் பட்ட கஷ்டங்களைச் சொல்லி அதைரியப்படுத்தி விடுவார்கள். அதேபோல சினிமா பிரசவக் காட்சிகளும் அலற வைக்கிறது. பிரசவம் என்றாலே கஷ்டம்தான். ஆனால், இப்படியா பயமுறுத்துவது? கர்ப்பிணிகளுக்கு இதமான ஊக்கமான பேச்சுதான் தேவை.

— பார்வதி

## பொருள் : சட்னி

### முதல் பரிசு ரூ. 300/-

### லெப்ட் ஓவர் சட்னி

நம் வீட்டில் விசேஷமென்றால் மாலையில் கட்டாயம் சாப்பாடெல்லாம் கொஞ்சமாவது மிஞ்சித்தான் போகும். மிச்சம் மீதியிலிருந்து கத்தரிக்காய் கறி - 1 கப், சாதம் - 2 கப், புளி இஞ்சி ¼ கப், டொமேடோ சட்னி - ¼ கப், கோங்கூறாச் சட்னி - 4 ஸ்பூன், தோசை மிளகாய்ப் பொடி - 4 ஸ்பூன், பச்சை மிளகாய் - 4, கொத்தமல்லிக் கறிவேப்பிலை புதினா கொஞ்சம், புளி இஞ்சியில் வெல்லம் இல்லாவிட்டால் ஒரு அச்சு வெல்லம். எல்லாவற்றையும் சேர்த்து மிக்ஸியில் சட்னியாக அரைக்கவும் கடுகு பெருங்காயம் தாளித்து, கொத்தமல்லி கருவேப்பிலை கிள்ளி போட்டால் வெகு ருசியாக இருக்கும். சாதத்திற்கும் பிசைந்து கொள்ளலாம். ரொட்டி பூரிக்கும் பறிமாறலாம். நெய் போட்டு பிசைந்து சாப்பிட்டால் பறந்து போகும். ஆனால் எதனால் செய்தது என்று மட்டும் சொல்லக் கூடாது.

-உமா ரங்கன், செகந்தராபாத்.

• பத்மினி



### இரண்டாம் பரிசு ரூ. 200/-

### வாழை மடல் பூ சட்னி

*தேவையான பொருட்கள்:*

இளம் வாழை மடல் - 5 (அ) 6,
புளி - சிறு எலுமிச்சை அளவு,
ப. மிளகாய் - 5,
பெரிய வெங்காயம் - 1,
தேங்காய் - ½ மூடி,
உப்பு - தேவையான அளவு,
எண்ணெய் - 2 டேபிள் ஸ்பூன்,
கடுகு - ½ டேபிள் ஸ்பூன்,
உ. பருப்பு - 1 டேபிள் ஸ்பூன்,
க. பருப்பு - 1 " "
கொள்ளு - 1 " "

*செய்முறை:*

வாழைப் பூவை உபயோகத்திற்கு எடுத்த பின் மடல்கள் இருக்கும். பின்னால் வரும் சந்தன நிறமுள்ள இளம் மடல்களை சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ள வேண்டும். வெங்காயத்தையும் நறுக்கிக் கொண்டு, வாணலியில் இட்டு எண்ணை விட்டுக் காய்ந்தவுடன் இந்தத் தூள்களை, பச்சை மிளகாயும் சேர்த்து இரண்டு நிமிடம் வதக்கவும். காஸை அணைத்து மூடி வைக்கவும். இரண்டு நிமிடத்தில் அந்த சூட்டிலேயே ஓரளவு வெந்து விடும்.





தனியே எடுத்து வைத்துக் கொள்ளவும் அதே வாணலியில் சிறிது எண்ணெய் விட்டுக் காய்ந்ததும் கடுகு தாளித்து உ. பருப்பு, க. பருப்பு போட்டு பாதி வறுபடும் போது கொள்ளு போடவும். இல்லாவிட்டால் கருகிவிடும். புளி, உப்பு வெந்த கலவை சேர்த்து நன்கு அரைக்கவும். தாளித்த பருப்புப் வகைகளைச் சேர்த்து ஒரு சுற்று சுற்றவும் (மிக்ஸியில்). இதையே வெங்காயத்திற்கு பதில் தேங்காய் சேர்த்தும் செய்யலாம். இது தோசை, இட்லி, சப்பாத்தி, உப்புமா, பொங்கல் முதலியவற்றிற்கு தொட்டுக் கொள்ள சிறந்த சத்துள்ள சட்னி.

நார்ச் சத்து மிகுந்தது. பெண்களுக்கு கர்ப்பப்பை, மாதவிடாய் கோளாறுகளுக்கு நல்லது. கொள்ளும் உடம்பிற்குச் சிறந்த உணவு!

–எல். பத்மினி, சென்னை–113.

## மூன்றாம் பரிசு ரூ.100/-

## கஜுர்-அனார் கட்டா மீட்டா சட்னி

***தேவையான பொருட்கள் :***

(கஜுர்) பேரிச்சம்பழம் – 25,
புளி – ஓர் எலுமிச்சை அளவு,
மாதுளம்பழம் – உரித்த மணிகள் ½ கப்,
காலா நமக் – 1 டேபிள் ஸ்பூன்,
உப்பு – 1 "
மி. பொடி – 1 "
கரம் மசாலா பொடி – 1 "
வாழைப்பழம் – 1
வெல்லம் – ½ கப் தூள் செய்தது,
பச்சை கொத்துமல்லி – ஆய்ந்து, கழுவி, பொடியாக நறுக்கியது – ¼ கப்,
பச்சை மிளகாய் – 1

***செய்முறை :***

பிரஷர் குக்கரில் கொட்டை எடுத்த பேரிச்சம் பழங்கள், புளி, வெல்லம் இவற்றைப் போட்டு ½ கப் தண்ணீர் ஊற்றி, 2 விசில் வந்தவுடன் இறக்கி வைக்கவும். ஆறியவுடன் நன்றாகக் கையால் பிசைந்து வடிகட்டியால் வடிகட்டி குழம்பு பதத்தில் எடுத்து வைக்கவும். ரொம்பவும் கெட்டியாக விழுதாக இருந்தால் ¼ கப் வென்னீர் சேர்க்கவும்.

அடுப்பில் கடாயைப் போட்டு, இந்த விழுதையும் போட்டு, எல்லா மசாலா சாமான்களையும் போட்டு (காலா நமக் வகையறா) அடுப்பை குறைந்த தீயில் 2 நிமிடங்களுக்கு குழம்பை வைத்து இறக்கி விடவும். மற்றொரு பரிமாறும் பாத்திரத்தில் இந்தக் குழம்பை ஊற்றி, மாதுளை முத்துக்களைப் போடவும். வாழைப் பழத்தை மெல்லிய வில்லைகளாக நறுக்கிப் போடவும். பச்சை மிளகாயையும் சிறு துண்டுகளாக்கிப் போடவும். பிறகு கொத்துமல்லித்தழையால் அலங்கரிக்கவும்.

இந்தச் சட்னி தயிர்வடை, Chat முதலியவற்றிற்கு மிகவும் நன்றாக இருக்கும்.

–ராஜேஸ்வரி, புதுடில்லி – 16

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

## பாகற் பழ சட்னி

***தேவையான பொருட்கள் :***

பாகற்காய் பழம் – 100 கிராம்,
தக்காளி – 1 மீடியம் சைஸ்,
கொத்தமல்லி தழை – 50 கிராம்,
மிளகாய் வத்தல்பொடி – 2 ஸ்பூன்,
கடுகு, உளுத்தம்பருப்பு – 1 ஸ்பூன்,
வெந்தயம் – ½ டீஸ்பூன்,
பூண்டு – 4 அல்லது 5 பல்,
நல்லெண்ணெய் – 50 கிராம்,
தேவையான அளவு உப்பு,
சீனி – 1 ஸ்பூன்,

***செய்முறை :***

முதலில் பாகற்காய் பழத்தை நறுக்கி, விதை நீக்கி எடுத்துக் கொள்ளவும். மல்லித் தழையையும் சுத்தம் செய்து நறுக்கி வைத்துக் கொள்ளவும். தக்காளியையும் நறுக்கிக் கொண்டு புளியை லேசாக தண்ணீரில் ஊற வைத்து எடுத்து,




ஒரு மளிகைக் கடையில் நான் பொருள்கள் வாங்கும்போது ஒருவர் வந்து 'கேரளபப்படம்' கேட்டார். மளிகைக் கடைக்காரர், ஃப்ரிட்ஜ் திறந்து பப்படத்தை எடுத்துக் கொடுத்தார். அட! இப்படி ஒரு வழி இருக்கிறதா, பப்படம் எப்போதும் 'புதியது' போல இருக்க என புரிந்து கொண்டேன். பிளாஸ்டிக் கவரோடு ஃப்ரிட்ஜில் இருந்தால் தான் அப்படி இருக்கும். பப்படம் 4-5 நாட்கள்தான் உப்பியபடி வரும். பின் உப்பல் நிற்கும். பின் சில நாட்களில் பூசணம் பிடித்துவிடும். இதைத் தவிர்க்க ஃப்ரிட்ஜ் நல்ல ஐடியாவாச்சே!

— கமலா

எல்லாவற்றையும் பூண்டோடு சேர்த்து மிக்ஸியில் போட்டு அரைத்து விழுதாக எடுத்து வைத்துக் கொள்ளவும்.

இனி ஒரு கடாயை அடுப்பில் வைத்து எண்ணெயை ஊற்றவும். எண்ணெய் காய்ந்தவுடன் கடுகு உளுத்தம் பருப்பு வெந்தயத்தைப் போட்டு அவை வெடிக்கவும் முதலில் மிளகா வத்தல் பொடியை போட்டு உடன் அரைத்து வைத்துள்ள விழுதைக் கலந்து தேவையான உப்பையும் போட்டுக் கிண்டவும். தண்ணீர் வற்றி எண்ணெய் மேலாக வரும்போது சீனியைத் தூவி  கிளறி இறக்கி ஆறவும் பாட்டிலில் எடுத்து வைத்துக் கொண்டு ஒரு வாரத்திற்கு உபயோகிக்கலாம்.

இது சாதத்தில் பிசைந்து சாப்பிடவும், இட்லி, வடைக்குத் தொட்டுக் கொள்ளவும் நன்றாக இருக்கும்.

*- மீனாட்சி அமர்நாத், மணிபால் - 119*

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

## பம்பாய் சட்னி

ஒரு ஆழாக்குக் கடலை மாவைப் போதிய அளவு உப்புத் தண்ணீர் விட்டு தோசை மாவுப் பதமாகக் கரைத்துக் கொள்ளவும்.

பத்து பச்சை மிளகாயை வளையம் வளையமாய் அரிந்து கொள்ளவும். ஐந்து வெங்காயத்தைப் பொடிப் பொடியாய் அரிந்து கொள்ளவும். கொட்டைப் பாக்கு அளவு இஞ்சியை அரிசி அளவு அரிந்து கொள்ளவும். கறிவேப்பிலை ஆர்க்கு இரண்டை உருவிக் கொள்ளவும்.

பிறகு வாணலியை அடுப்பில் வைத்து மூன்று தேக்கரண்டி நல்லெண்ணெய் விட்டுக் காய்ந்ததும், சீரகம் கால் தேக்கரண்டி, உளுத்தம் பருப்பு ஒரு தேக்கரண்டி, இவற்றைப் போட்டுத் தாளித்து , வெங்காயம், கறிவேப்பிலை, பச்சை மிளகாய், இஞ்சி ஆகியவற்றையும் போட்டு வதக்கி, மஞ்சள் தூள் அரைத் தேக்கரண்டி போட்டு, கரைத்து வைத்திருக்கும் கடலை மாவை விட்டுக் கிளறிக் கொண்டே இருந்து, கெட்டியானதும் இறக்கவும்.

*- ராஜேஸ்வரி பிரபாகரன்,*
*மதுரை - 18.*

---

# வடகிழக்கு இந்தியாவிலிருந்து 5000 இளம் பெண்கள் ஏற்றுமதி!

அழகான இளம்பெண்கள் 5,000 பேரைச் சிங்கப்பூர் நாட்டுக்கு ஏற்றுமதி செய்ய மேகாலய மாநில அரசு அனுமதி அளித்துள்ளது. "வீட்டு வேலைக்கு என்று கொண்டு செல்லப்படும் இந்த இளம் பெண்கள் உண்மையில் விபச்சாரத்தில் ஈடுபடுத்தப்படவே அழைத்துச் செல்லப்படுகிறார்கள்"என்று (இ.எ.5.8.95) வடகிழக்கு இந்தியாவில் உள்ள 20-க்கு மேற்பட்ட பெண்கள் நல அமைப்புகள் எச்சரித்தும் கேளாமல், அந்த வியாபார நடவடிக்கை தொடர்வதாகத் தெரிகிறது.

ஏற்கனவே பிலிப்பைன்சு நாட்டிலிருந்து இதே 'வீட்டு வேலைக்கு'என்று சிங்கப்பூருக்கு அழைத்து வரப்பட்ட ஆயிரக் கணக்கான இளம் பெண்கள், விபச்சாரத்தில் ஈடுபடுத் தப்பட்டதாகக் குற்றம் சாட்டித் தங்கள் நாட்டுக்குத் திரும்பி விட்டார்கள். இதனால் சிங்கப்பூர் விபச்சார விடுதிகளில் ஏற்பட்ட இளம் பெண்கள் பற்றாக் குறையை ஈடுசெய்யவே மேகாலயத் தின் அப்பாவிப் பெண்கள் ஏற்றுமதி செய்யப்படுகிறார்கள் என்கிற ஐயம் பரவலாக ஏற்பட்டுள் ளது.

இந்த நிலையில், மேகாலய அரசாங்கம், இந்த இளம் பெண்களின் சிங்கப்பூர் போக்கு வரத்துச் செலவுக்கு என்று ஒவ்வொருவருக்கும் ரூ.10,000/-வரை உதவி செய்வதாக வாக் களித்துள்ளது. இந்த அறிவிப்பைச் சுட்டிக்காட்டி, வடகிழக்கு இந்தியாவில் உள்ள பெண்கள் நல அமைப்புகளைச் சேர்ந்தவர்கள்,

"நம்முடைய இளம் பெண்களை எங்கேயோ கொண்டு தள்ளுவதற்கு இவ்வளவு தொகை செலவிடத் தயாராக உள்ள மேகாலய அரசு அந்தப் பெண்கள் இங்கேயே மானம் மரியாதையோடு சுயவேலை வாய்ப்புக்களைத் தேடிக் கொள்ள இந்தத் தொகையைக் கொடுத்து உதவலாமே"என்று ஆலோசனை சொல்லியுள்ளார்கள்.

- பேராசிரியர் சாலை இளந்திரையன்

## மங்கையர் மலர் &
## மீரா ஹெர்பல் பவுடர்

### இணைந்து வழங்கும்

### கூந்தல் பராமரிப்புப் பக்கங்கள்



# பொடுகு நீங்க என்ன

***தலை முடிக்கு ஷாம்பூ போட்டுக் குளிப்பது நல்லதா? அப்படிக் குளிப்பதானால் எத்தனை நாளைக்கு ஒருமுறை குளிக்கலாம்?***

***இரா. புவனேஸ்வரி, பேரளம்.***

ஷாம்பூ போட்டுக் குளிப்பது முடிக்கு நல்லது தான். ஆனால், நீங்கள் உபயோகிக்கும் ஷாம்பூவில் 'கண்டிஷனர்' இருந்தால் மிகவும் நல்லது. வாரம் இருமுறை ஷாம்பூ போட்டுக் குளிக்கலாம். பொதுவாகவே நாம் வீட்டிலேயே மூலிகைப் பொருட்களுடன் சீயக்காய் வாங்கிக் கலந்து அரைத்து வைத்து உபயோகிப்பது மிகவும் நல்லது.

***என் முகத்தில் எந்த நேரமும் எண்ணெய் வடிந்து கொண்டே இருக்கிறது. எதனால் அப்படி இருக்கிறது?***

***கார்த்திகா, திருக்கோவிலூர்.***

முகத்தில் எண்ணெய் வடிந்து கொண்டிருப்பதற்கு நிறைய காரணங்கள் உள்ளன. சிலருக்கு Oily Skin இருப்பதாலும் இவ்வாறு இருக்கும். சிலருக்கு உடம்பில் கொழுப்புச் சத்து அதிகமாவதாலும் இவ்வாறு இருக்கும்.

***என் தலையில் நிறைய பொடுகு உள்ளது. இதனால் அதிகமாக முடி உதிர்கிறது. முடி உதிர்வதைத் தடுக்கவும், பொடுகுகள் போகவும் உங்கள் ஆலோசனை தேவை. பியூட்டி பார்லர் செல்லாமல் (வீட்டில்) இயற்கை முறையில் நீக்க வழிகூறவும். எங்கள் ஊரில் பியூட்டி பார்லர் கிடையாது. அதனால் தான் இப்படி எழுதுகிறேன்.***

***ககன்யா, ராஜேந்திரசோழபுரம்.***

பொடுகு நீங்க வைத்தியம் பற்றி ஏற்கெனவே கூறியுள்ளோம். நீங்கள் வீட்டிலேயே பண்ணக் கூடிய வைத்தியம் முதல் நாள் இரவு தயிரில் ஊற வைத்த வெந்தயத்தை காலை வெறும் வயிற்றில் சாப்பிடுவதுதான். மூலிகைப் பொருட்கள் கலந்த எண்ணெயைத் தயாரித்து உபயோகிப்பதும் நல்லது. பொடுகைத் தலை யில் இருந்து நீக்கினாலொழிய, முடி உதிர்வதைத் தடுக்க முடியாது.



# செய்யலாம்?

**பதில்கள் : மைதிலி பாபு**

***தலைமுடியில் நுனி தெருப்பு பட்டு கருகி விட்டது. இனி முடி வளர வேண்டுமென்றால் என்ன செய்ய வேண்டும்?***

***ஆர். ஸ்வர்ணலதா, பெசன்ட் நகர்.***

முடியில் நுனி கருகிய பாகம் வரை சீராக கட் பண்ணிவிட்டு, பின் தலையை நல்ல முறையில் பராமரித்தால் வளரும் முடி அதே ஷேப்பில் அழகாக வளரும்.

***முட்டையின் வெள்ளைக் கருவை தலைக்குத் தேய்த்துக் குளித்தால் முடி செழித்து வளரும் என்கிறார்களே, உண்மையா? முட்டையை உபயோகிக்க அருவருப்பாய் உள்ள என் போன்றவர்கள் மாற்றாய் எதை உபயோகப்படுத்தலாம்?***

***அனுபல்லவி, சென்னை - 90.***

முடிக்கு முட்டையின் வெள்ளைக் கரு மிகவும் நல்லதுதான். முட்டையின் வெள்ளைக்கரு சிறந்த கண்டிஷனர் ஆகும். முட்டை அருவருப்பாய் இருப்பின், தயிர் உபயோகிக்கலாம். தயிருடன் சிறிது சாதம் வடி கஞ்சியையும் சேர்த்துத் தலையில் பூசி, சிறிது நேரம் கழித்து சியக்காய் தேய்த்துக் குளிக்கலாம்.

***கூந்தல் வளருவதற்கும், சுத்தமாகவும் பளபளப்பாகவும் இருப்பதற்கு என்ன செய்ய வேண்டும்? ஹென்னா கலரிங் என்று கூறுவது பற்றியும், அதை உபயோகிப்பது எப்படி என்பதைப் பற்றியும் வீட்டிலேயே செய்து கொள்ளும்படி விவரமாகக் கூறி விளக்கவும்.***

***டி. எஸ். தேவி, சிங்கபெருமாள் கோவில்.***

கூந்தல் வளர, நல்ல தேங்காயெண்ணெயை உபயோகித்து வந்தாலே போதும். சுத்தமாக, பளபளப்பாக இருக்க வாரம் இருமுறை சியக்காய்த்தூள் (மூலிகைப் பொருட்கள் கலந்து வீட்டில் அரைத்தது) தேய்த்துக் குளிப்பது நல்லது. ஹென்னா கலரிங் என்பது - சிறிது புளி, வெந்தயம், எலுமிச்சைத் தோல், டீத்தூள் கலந்து கொதிக்க வைத்த நீருடன் ஹென்னா பவுடரைக் கலந்து முதல் நாளே நன்கு ஊற வைத்து மறுநாள் தலையில் போட வேண்டும். இந்தக் கலவை நீண்ட நேரம் ஊறினால் தலைக்கு நல்ல நிறத்தையும் மிருதுத் தன்மையையும் கொடுக்கும். பொதுவாக இளநரை உள்ளவர்களுக்கு இது ஒரு வரப் பிரசாதம்.

***என் பாதங்கள், கெண்டைக்கால்களைவிட நிறம் குறைந்து நல்ல வித்தியாசத்துடன் காணப்படுகிறது. பாதங்கள் வெண்மையாக என்ன வழி?***

***பிரியதர்ஷினி, கரட்டூர்.***

பாதங்களை நீங்கள் நல்லபடியாகப் பராமரித்தாலே வெண்மையாக இருக்கும். தினமும் வீட்டு வேலை முடிந்ததும் இரவு பாதங்களை லேசான சுடுநீரில் சிறிதுநேரம் வைத்திருந்து பின் பாதங்களை **moisturiser** அல்லது ஆலிவ் ஆயில் போட்டு மசாஜ் செய்யலாம். தினந்தோறும் குளிக்கும் போது **Foot Scrapper** உபயோகிப்பது பித்த வெடிப்புகளை நீக்கும்.

பரிசு பெற்ற கட்டுரை

# என்னை கவர்ந்த ஹேர் ஸ்டைல்

## கண்கொட்டாமல் பார்த்தேன்

எவ்வகைப் புது பொருள் மீதும் எனக்குச் சொல்லொணா ரசிப்பு, ஈர்ப்பு, அதைச் செய்து விடும் ஆர்வமும் உண்டு.

ஒரு முறை எங்கள் உறவினர் வீட்டு விசேஷத்திற்குப் போயிருந்தேன். எங்கள் வரிசையில் நான்கு வரிசை முன் அமர்ந்திருந்த பெண்ணின் 'சிகையலங்காரம்' என்னை வெகுவாக ஈர்த்தது. ஒரு சிலரின் சலசல பேச்சின் பொருளும் அதுவே.

எப்படியோ இரு வரிசைகள் முன்னேறி அமர்ந்து, கண்கொட்டாது நோட்டம். அதிர்ஷ்டம் அவளின் பின் இருக்கையை, ப்ரியாக்கியதும் ஒரே 'லாங்ஜம்ப்' சேர் ஆடி நின்றது.

என்ன எழில் வடிவமான அலங்காரம். எனக்கு சிகையலங்காரம் படித்ததின் பலன், ரசிப்பும், அமைப்பும், அலங்கரிக்கும் விதமும் மனதில் பதிந்தன. இறையருளுக்கு நன்றி.

முன்புறம், பின்புறம், பக்கவாட்டிலும், அடியிலிருந்து தூக்கிவார வேண்டும். பகுதி பகுதி பல சிறு பிரிவுகள், நேர்த்தியாக வாரி, லேசான முறுக்கலுடன் விட்டிருந்தார்கள். பின் உச்சந்தலையின் பக்கவாட்டங்களிலிருந்து, முடி எடுத்து ஒரு வட்டம் பின்னல் போன்ற அழுத்த மான நாட்ஸ்ுடனும், அடுத்த வட்டமும் அதே போல சற்று தளர்த்தியான முடியுடன், பின்னல் பின்னி மீறும் நுனி முடியை மத்தியில் அழகானதொரு சூழியில் முடிச்சிட்டு, சேப்டிக்காக, ஆரம்பத்திலிருந்தே சிறுசிறு கொண்டை ஊசிகள். பின் விருப்பப்படி பொருட்கள் கொண்டு அலங்காரம். இங்கே உச்சந்தலை அழுத்தப் பகுதியிலிருந்து, ஆங்காங்கே, நான்கைந்து இடங்களில் பக்குவமாக சலங்கையுடன் காணப்பட்ட வெள்ளி செயின். மிக மிக அழகாக இருந்தது.

சிகையலங்காரத்தால் அப்பெண்ணிற்கு அழகா? அப்பெண்ணின் அழகு சிகை யலங்காரத்துடன் – சூப்பர்!

நான் பலருக்கும் போட்டுப்பார்த்து, அலங்காரப் பொருட்கள் மட்டும் மாற்றி அழகூட்டினேன்.

பொதுவாக, எந்த நிகழ்ச்சிக்கு சிகையை அலங்கரிக்கணும்னாலே, துல்லியமாக, துளி எண்ணெய் பிசுக்கும், இன்றி, நல்ல வாசமிகு சிறந்த ஷாம்பு கொண்டு தலைக் குளித்து, வாரி டிரையர் போட்டு, அழகானதொரு சுழற்சியிருந்த கூந்தலாக்கி, அலங்கரிக்க வேண்டும்.

அலங்காரம் முடிந்து, 'ஹேர் ஸ்ப்ரே' அடிப்பது மிக மிக முக்கியம். கலையாமலிருக்கும்.

என்னைக் கவர்ந்த இந்த ஸ்டைல் உங்களுக்கும் பிடிக்கும் என்று நம்பலாமா?

**பரிமளவல்லி சீதாராமன்,**
**சென்னை - 24.**



## ப்ரசுரத்திற்கு...

## 'மித்தாஸ்' ஸ்டைல்!

நான் திருமணத்துக்கு முன் கல்கத்தாவில் வேலை பார்த்துக் கொண் டிருந்த சமயம். அன்று ஆபீஸ் பவுண் டேஷன் டே. வருடா வருடம் அன்று ஏதாவது போட்டி நடக்கும். ஒரு தரம் பெண்களுக்கு சிகை அலங்காரப் போட்டி நடந்தது. என்னுடன் வேலை பார்த்த தோழி "மதுமிதா" ஒரு பெங்காலி பெண். தினமுமே விதவிதமான ஹேர் ஸ்டைலில் வருவாள். நாங்கள் எல்லாம் அவளுக்குத் தான் பரிசு என்று தீர்மானித்தோம். போட்டி நாளும் வந்தது.

தினமும் போல மதுமிதாவும் என்னை அழைக்க வீட்டுக்கு வந்து விட்டாள்.

நான் ஈரண்டு மணிநேரமாக கண்ணாடி

இந்த மாதம்
பரிசுக் கட்டுரைக்கு
மீராவின்
அன்பளிப்பு
ரூ. 1000
மதிப்புள்ள குக்கர்

அடுத்த மாதம்
போட்டிக்கான
கட்டுரை...
பொருள் : ஆபீஸில்
கண்ட அலங்காரம்!

கடைசி தேதி : 15.2.96

முன் உட்கார்ந்ததுதான் மிச்சம். ஒன்னும் சரியா வரலை. 'ஏய் என்ன இப்படி இருக்கே? டயமாச்சு! சரி கொண்டா நானே ஏதாவது சிக்கிரமா பண்ணி விடறேன்' என்று சீப்பை எடுத்து என் தலையை நன்கு வாரி நாம் நுனிமுடிச்சு போடுவோமே அதையே கழுத்துபின் பக்கத்தில் டைட்டாக போட்டு அந்த முடிச்சை அப்படியே மேலே உயர்த்தி திருப்பி கொண்டை ஊசியால் பின் பண்ணி விட்டான்.. அந்தக் கொண்டையில் ரோஜா இதழ், முத்து இவற்றைக் கொண்டு என் பெயரின் முதல் எழுத்தான 'ஆர்' என அலங்கரித்தான். முத்து இல்லைன்னா மல்லிகைப்பூவாலும் செய்யலாம் என குறிப்பும் கொடுத்தான்.

ஆபீஸ் போனோம். போட்டி முடிவு என்ன என்கிறீர்களா? என்னுடைய ஹேர்-ஸ்டைலுக்குத்தான் முதல் பரிசு கிடைத்தது. என் சக தோழிகள் என்னைக் கேட்டனர் இந்த ஹேர் ஸ்டைலுக்கு என்ன பெயர் என்று. நான் சிரித்து கொண்டே "மித்தாஸ் ஹேர்ஸ்டைல்" என்றேன்.

**- எஸ். ரமா, பம்பாய்.**

## விசித்திர அழகு!

சுமார் இரண்டரை ஆண்டுகளுக்கு முன்பு நாங்கள் நைஜீரியா நாடு செல்ல லண்டனிலிருந்து விமானத்தில் புறப்பட்டோம். நிம்மதியாக உட்கார்ந் திருப்பதை விட்டு விட்டு அக்கம் பக்கம் எங்கள் கண்களை உலவ விட்டுக் கொண்டிருந்தோம். காரணம் பயணம் செய்து கொண்டிருந்த பல பெண்களின் ஹேர் ஸ்டைல்கள்தான். விமான நிலையத்தை விட்டு வெளியே வந்த பிறகும் பலவித தலையலங்காரங்களைக் காண முடிந்தது.

அந்நாட்டு மக்களின் தலைமுடி சுருண்ட குட்டையான அளவு கொண்டது. ஏழையானாலும் சரி. பணக்காரர் களானாலும் சரி. தலையங்காரத்துக்குத் தனி கவனம் செலுத்துகிறார்கள். முடியைச் சிறுசிறு பகுதிகளாக பலவித டிசைன் களில் பிரித்து பளபளக்கும் கருப்பு நூலால் முடியைச் சுற்றிச் சுற்றி முழு முடி நீள அளவையும் சுற்றியிருப் பார்கள். அதைப் பார்க்க தலையிலிருந்து புழுக்கள் தொங்கிக் கொண்டிருப்பது போலிருக்கும்.

பல வடிவ விகிடு எடுத்து தலை யுடன் ஒட்டினார் போல சடை பின்னி யிருப்பார்கள். அந்த மாதிரி அலங் காரம்.

முடியைப் பலவித கோணங்களில் சிறிது சிறிதாக பிரித்து செயற்கை சடைகளை இணைத்து பின்னி பலவித மணிகளினால் அலங்காரம் செய்து கொள்வார்கள். ஐம்பது, அறுபது சடைகள் கூட அவ்வாறு தொங்கிக் கொண்டிருக்கும். அல்லது சடைகளைச் சேர்த்து குதிரை வால்போல் கட்டிக் கொண்டிருப்பார்கள்.

சிறுமிகளுக்கும் பலவிதமான தலையலங்காரங்கள் வெகு சிரத்தையுடன் செய்கிறார்கள். ஒருமுறை அவ்வாறு அலங்காரம் செய்து கொண்டால் இரண்டிலிருந்து 3 வாரங்கள் வரைகூட தண்ணீர் கூட படாமல் அப்படியே வைத்துக் கொள்வார்களாம். இந்த அலங்காரங்களை தனியே தனக்குத் தானே செய்து கொள்ள முடியாது. இவைகளைச் செய்ய 3 மணிநேரங்கள் கூட பிடிக்குமாம்.

அந்த விசித்திரமான அழகு என்னை மிகவும் கவர்ந்தது.

**கஸ்தூரி நிகோலஸ், நாகர்கோவில்**



# சுலிவன் கார்டன் பெனிபிட் பண்ட் லிட்.

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம்

பதிவு அலுவலகம் : 8, கற்பகாம்பாள் நகர், மயிலாப்பூர், சென்னை - 600 004.
ஃபேக்ஸ் & போன் : 4993241 / 4990953

நிர்வாக அலுவலகம் : 132, ராசப்ப செட்டி தெரு, பார்க் டவுன் (முதல் மாடி)
சென்னை - 600 003. போன் : 563055.

## அமுததாரா பிக்ஸட் டெபாஸிட் திட்டம்

| ● | 90 நாட்கள் | 6 மாதங்கள் | 1 ஆண்டு | 2 ஆண்டுகள் | 3 ஆண்டுகள் | 4 ஆண்டுகள் | 5 ஆண்டுகள் |
|---|---|---|---|---|---|---|---|
| | 15% | 16% | 18% | 19% | 19.5% | 20% | 21% |

## கேஷ் சர்டிபிகேட் முதலீட்டுத் தொகை 1000

| மாதங்கள் | 12 | 24 | 36 | 42 | 60 |
|---|---|---|---|---|---|
| முதிர்வுத் தொகை | 1196 | 1458 | 1787 | 2000 | 2832 |

## சங்கரா கல்வி டெபாஸிட் திட்டம்

ரூ. 8000/- முதலீடு செய்யுங்கள். 3-ம் ஆண்டு முடிவில் ஒவ்வொரு ஆண்டும் ரூ. 2500/- பெறுங்கள். 3 ஆண்டுகளுக்குப் பிறகு கணக்கை எப்போது முடிக்க விரும்பினாலும் ரூ. 11,500/- + ரூ. 2500 பெறலாம்.

## ஓய்வூதிய திட்ட தொகை

ரூ. 5,000 அல்லது அதற்கு மேல்

| காலம் | வட்டி |
|---|---|
| 12 மாதங்கள் அல்லது அதற்கு மேல் | 21% |

**Annual yield 23.15%**

## சப்தகிரி பாண்ட்ஸ்

| மாதம் | தொகை | முதிர்வுத் தொகை |
|---|---|---|
| 25 | 50,000 | 75,000 |
| 36 | 55,000 | 1,05,000 |

அங்கத்தினர்களுக்கு மட்டுமே வரவு, செலவுகள் செய்யப்படும்

வேலைநேரம் : வாரநாட்கள் : காலை 8.30 முதல் மாலை 5.30 வரை. வெள்ளி விடுமுறை

P.K.C. RAMESH - Director - P.K. Vaduvammal Group

# வலிகள்

**டாக்டர் எஸ். அக்பர் கவுஸர்**

மனிதனின் சிரிப்பையும், சந்தோஷத்தையும் பறிக்கும் நோய்களில் வலிகளும் ஒன்றாகும். வலி நிவாரணி மாத்திரைகள், ஊசிகள், தைலங்களைப் பயன்படுத்தி வலிகளைப் போக்கிக் கொள்ளும் சிலர் அம்மருந்துகளுக்கே அடிமையாகிவிடுகின்றனர். வலி! இது நோயல்ல! ஒரு குறிப்பிட்ட நோயின் அறிகுறியேயாகும். இதற்கு முறையான சிகிச்சை அளிக்கப்பட்டால் நிரந்தரமாக குணமாக்கலாம் என்று கூறுகிறார் பிரபல யுனானி மருத்துவர் டாக்டர் எஸ். அக்பர் கவுஸர் அவர்கள்.

வலிகளை இரண்டு விதமாகப் பிரிக்கலாம். ஒன்று தற்காலிகமாக, சூழ்நிலைக்கு ஏற்றபடி அவ்வப்போது தோன்றும் வலிகள், இரண்டாவது கல்லீரல், மண்ணீரல், வயிறு, குடல், ஆசனவாய், நரம்புகள், எலும்புகள் தசைகள் போன்ற முக்கிய உறுப்புகளின் கோளாறுகளினால் உண்டாகும் வலிகள், எந்த ஒரு வலியும் ஒரு வாரத்திற்குள் குணம் பெறவில்லை என்றால் எக்ஸ்ரே, ஸ்கேனிங், இரத்தப் பரிசோதனை, எம்.ஆர்.ஐ. போன்ற நவீன பரிசோதனை மூலம் வலிக்குக் காரணமான நோயைப் பற்றி அறிந்து சிகிச்சை அளிக்கப்பட வேண்டும். அன்றாட வாழ்க்கையில் உண்டாகும் வலிகளுக்கு எளிய மருந்துகளைப் பார்க்கலாம்.



**எலும்பு, மூட்டு வலிகள் :**

மனிதனின் உடல் அமைப்பில் எலும்புகள் பெரும்பங்காற்றுகின்றன. கழுத்து, முழங்கால் மூட்டு, இடுப்பு, தோள்பட்டை, மூட்டு எலும்புகளின் வளையங்களாகத் தொடர்புகள் வைத்து அவைகள் எளிதில் அசைய எண்ணெய்ப் பசையும், மெல்லிய ஜவ்வும் இறைவன் ஏற்படுத்தியிருக்கிறான். கழுத்து எலும்பு மூட்டுகளில் தேய்வு, வீக்கம் ஏற்படும்போது அடிக்கடி தலைவலி, வாந்தி, குமட்டல், கழுத்துவலி, கிறுகிறுப்பு, முழங்கையில் மின்னலடிக்கும் வலி உண்டாகும். எக்ஸ்ரே எடுத்துப் பார்த்தால் 'சர்விக்கல் ஸ்பாண்ட்டிலிட்டிஸ் நோய் ஏற்பட்டிருக்கின்றது. கழுத்துக்கு காலர் பட்டி போட்டுக் கொண்டால் மேலும் எலும்பு வளையங்களில் தேய்வு உண்டாகாது. தலையணை வைத்துப் படுப்பதைத் தவிர்த்துக் கொள்ளுங்கள்' என்று ஆலோசனை கூறுவார்கள். நடந்தால், உட்கார்ந்தால், மடக்கினால் கால் எலும்பு மூட்டுகளில் 'கட்கட்' என்ற சப்தம் வரும். தொட்டுப் பார்த்தால்

சூடாக இருக்கும். மடங்கி உட்காருவதற்குக் கஷ்டப்படுவார்கள். எக்ஸ்ரே எடுத்துப் பார்த்தால் மூட்டுகளில் எண்ணெய்ப்பசை குறைந்துவிட்டது. ஜவ்வு அறுந்துவிட்டிருக்கின்றது. எலும்புகளில் தேய்மானம் ஏற்பட்டிருக்கின்றது. இதற்கு 'ஆஸ்டியோ ஆர்த்ரைட்டிஸ்' என்றழைப்பார்கள். இன்னும் இது போலப் பல மூட்டுவலிகள் உண்டு. யுனானி வைத்தியத்தில் இதற்கு மூட்டுவாதம் எனக் கூறுவார்கள்.



அரசாங்கத்தில் உயர் பதவி வகிக்கும் ஒருவருக்கு இரண்டு முழங்கால் மூட்டுகளிலும் தேய்வு ஏற்பட்டு நடக்க முடியாத அளவிற்கு வலியுடன் வேதனை அடைந்து கொண்டிருந்தார். அவருக்குப் பரங்கிச் சக்கை லேகியத்தைக், கொடுத்தேன். மூன்று மாத சிகிச்சைக்குப் பின் எக்ஸ்ரே எடுத்துப் பார்த்த போது தேய்ந்து போன எலும்புகளுக்குள் அசைவுண்டானது. வீக்கம், வலி குணம் பெற்று ஆரோக்கியமாக இருக்கின்றார். லவங்கப்பூ, ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, ரோஜாப்பூ, காட்டு இஞ்சி, சிற்றரத்தை, கோரைக் கிழங்கு. அக்கடகாரம், ஜத்வார் ஒவ்வொன்றிலும் பத்து கிராம் பரங்கிச் சக்கை 50 கிராம் அனைத்தையும் பவுடராக்கித் தேனில் கலந்து கொள்ள வேண்டும். இவைகளைத் தேடி அலையத் தேவையில்லை. அருகிலுள்ள நாட்டு மருந்துக் கடைகளில் கேட்டால் கிடைக்கும். இதை காலை மாலை அரை டீஸ்பூன் அளவில் பயன்படுத்தி வந்தால் முழங்கால் மூட்டு வலி, வீக்கம், தேய்வு குணம் பெறும்.



கழுத்து எலும்பு வலி கண்ட ஒருவருக்கும் மேற்கண்ட பரங்கிச்சக்கை லேகியத்தை மூன்று மாதத்திற்குக் கொடுத்து மீண்டும் எக்ஸ்ரே எடுத்துப் பார்த்ததில் நகங்கிப் போன நரம்புகளுக்குள் மீண்டும் இரத்த ஓட்டம் ஏற்பட்டதைக் காண முடிந்தது. தேய்ந்து போன எலும்புகளுக்குள் மீண்டும் எண்ணெய்ப் பசை சுரந்து கொண்டிருந்தது. ஆகவே எலும்பு நரம்பு வலிகளுக்கு முறையாகச் சிகிச்சை செய்ய வேண்டும். வலிகள் நீங்க குழந்தைகளை வலியுள்ள இடத்தில் ஏறச் செய்து மிதிக்கச் செய்வார்கள். இடிக்கச் செய்வார்கள். இது ஆபத்தான செயலாகும். இதனால் எலும்பு வளையங்கள் நழுவிக் கொள்ளும். நரம்புகள் சேதமடையும். இரத்த ஓட்டம் தடைப்படும். சில சமயம் உடல் ஊனமாகி நடமாட முடியாமல் கிடப்பார்கள்.

## இடுப்பு வலி :

இடுப்பு வலி என்றால் படித்தவர்களும் படிக்காதவர்களும் கவிழ்ந்து படுத்துக் கொண்டு இடுப்பின் மீது குழந்தைகளை ஏற வைத்து மிதிக்கச் செய்வார்கள். இதனால் சற்று நேரத்திற்கு வலி குறையும். இது மிகவும் ஆபத்தான செயலாகும். இடுப்புப் பாகத்தில் தான் சிறுநீரகங்கள் அமைந்திருக்கின்றன அதற்குள் கற்கள் கூடியிருந்தாலோ அல்லது சிறுநீரகங்களில் புண் ஏற்பட்டிருந்தாலோ மேலும் நகங்கிவிடும்.

இதேபோல் சிறுநீரகங்களில் புண் ஏற்பட்டிருந்தால் இடுப்பின் பின் பாகத்தில் சுருக் சுருக்கென்ற வலி இருக்கும். சிறுநீர் கழிக்கும் போது எரிச்சல் உண்டாகும். சிறுநீரில் அல்புமின், புரோட்டீன் வெளியேறிக் கொண்டிருக்கும். நாளடைவில் கிட்னி ஃபெயிலியர் நோய் உண்டாகும்.

## தலைவலி :

உஷ்ணத்தால் உண்டாகும் தலைவலி நீங்க மஞ்சள் கடுக்காய் தோல், பிஞ்சுக்கடுக்காய் தோல், நெல்லிக்காய் வற்றல், தனியா

ஒவ்வொன்றிலும் 50 கிராம் எடுத்துப் பவுடராக்கி 125 கிராம் நெய்யில் பிசைந்து கொள்ள வேண்டும். அதன்பின் ஒரு கிலோ தேனில் கலந்து லேகியமாக்கிக் கொள்ளலாம். இதை காலை மாலை ஒரு டீஸ்பூன் அளவில் சாப்பிட்டால் உஷ்ண உடல்நிலை உள்ளவர்களுக்கு உண்டாகும் தலைவலி, கண்ணெரிச்சல், தும்மல், அலர்ஜி, மலச்சிக்கல், மூலம், தூக்கமின்மை குணம்பெறும். இதை ஒரு டீஸ்பூன் அளவில் படுக்கும்போது தண்ணீருடன் சாப்பிடலாம்.

ஈரத்தால், குளிர்ச்சியால், மண்டைச் சளியால் உண்டாகும் தலைவலி நீங்க மேற்கண்ட லேகியத்தில் ஆகாஷவல்லி, கிஷ்மிஷ் பழம், உஸ்த்துக்குத்தூஸ், நிலாவரை ஒவ்வொன்றிலும் 25 கிராம் அளவிற்குச் சேர்த்துக் கொள்ளலாம். காலை மாலை இரண்டு வேளை சாப்பிட்டால் தலைவலி குணம் பெறும்.

**பதற்றத்தால் உண்டாகும் தலைவலி :**

அன்றாட வாழ்க்கையில் நிம்மதியை இழக்கச் செய்யும் செயல்களால் தலை வலி வரும். அதற்கு டென்ஷன் தலை வலி என்பார்கள். இதைக் குணமாக்க ஒரு கிராம் சர்ப்பகந்தி வேரைப் பவுடராக்கி இரவில் ஒரு வேளை தண்ணீருடன் சாப்பிடலாம்.

**பல்வலி :**

கருவேலமரப்பட்டை 12 கிராம், உப்பு 2 கிராம், படிகாரம் 2 கிராம் அனைத்தையும் பவுடராக்கி ஈறுகளின் மேல் தேய்த்தால் ஆடுகின்ற பற்கள் கெட்டியாகும். பல்வலியும் நீங்கும்.

**தொண்டைவலி :**

வெங்காரம் தேவையான அளவிற்கு எடுத்து அதைத் தேனில் கலந்து தொண்டையின் மீது பூசினால் தொண்டை வலி குணம் பெறும். 25 கிராம் ஓமத்தை அரை லிட்டர் தண்ணீரில் கொதிக்க வைத்து அதன் ஆவியை வாயின் மூலம் முகர்ந்தால் அல்லது கஷாயத்தை வாய் கொப்பளித்தால் தொண்டை வலி நீங்கும்.

**மார்பு வலி :**

மான் கொம்பு ஒரு துண்டு எடுத்து சந்தனக்கல்லில் சிறிது தண்ணீரிட்டுப் பசையாக்கி 125 மில்லி அளவில் தினசரி இரண்டு வேளை சாப்பிடலாம். லோபான் சாம்பிராணி ஒரு கிராம், தேன்மெழுகு ஒரு கிராம் இரண்டையும் சுட வைத்து மாத்திரைகளாக

---

**வெண்கலப் பானையில் காய்கறிகளை வைத்தால் வாடாமல் இருக்கும் என்று ஒரு வாசகி எழுதியிருந்தார். வெண்கலப் பாத்திரங்கள் தற்போது புழக்கத்தில் இல்லை. வாங்குவதானாலும் விலை அதிகம். அதைவிட ஓர் எளிய, சிக்கன முறை. ஒரு சிறிய, புதிய பானையை அதைவிட அகலவாட்டில் சற்று பெரியதான கள்ளிப் (அல்லது ஏதாவது) பெட்டிக்குள் வைக்க வேண்டும். பெட்டியின் உயரம் பானையின் உயரத்தைவிடக் குறைவாக இருக்க வேண் டும். பானையைச் சுற்றிப் பெட்டியில் ஆற்று மணலை நிரப்பவும். அன்றாடம் இரண்டொரு முறை நீர்விட்டு மணல் ஈரமாகவே இருக்கும்படி பார்த்துக் கொள்ளவும். அதிக நீர் வடிய பெட்டியின் பக்கவாட்டில் அடியில் ஒரு சிறு துளை இருக்கலாம். பானைக்குள் காய்கறிகளை வைத்து (காற்றுப் போகும் வண்ணம்) சல்லடைக் கண்களுடைய ஈரக்கோணித் துண்டால் அதன் வாயைக் கட்டவும். ஒரே நாளில் வாடும் காய்கறிகள் மூன்று நாட்கள் வரை பசுமையாக இருக்கும். இது சர்வோதய சங்கத்தால் வடிவமைக்கப்பட்டது. ஏழைகளின் குளிர்சாதனப் பெட்டி என்றே இதற்குப் பெயர்.**



**- எஸ். சரோஜினி**



இப்பொழுது அநேகமாக மொசைக் தரைதான் போடுகிறார்கள். இந்த மாதிரி தரை உள்ள வீடுகளில் பொடிக் கோலம் போட்டால் எடுபடாது. முதலில் தரையை கோலம் போடத் தேவையான அளவுக்குச் செம்மண் அல்லது காவி கொண்டு சதுரமாக, பரவலாக மெழுகிவிடுங்கள். அதன்மேல் ரங்கோலி போடுங்கள். பளிச்சென்று இருக்கும்.

- கே. நீலா

---

உருட்டி வேளைக்கு ஒரு மாத்திரை வீதம் வெந்நீருடன் சாப்பிடலாம். வெந்தயம் 12 கிராம், தேன் 12 கிராம், இரண்டையும் 120 மில்லி தண்ணீரில் கொதிக்க வைத்து தினசரி இரண்டு வேளை குடிக்கலாம்.

**வயிற்று வலி :**

குழந்தைகளுக்குப் பொதுவாக அஜீரணத்தால் வயிற்றுவலி உண்டாகும். 10 கிராம் கறுப்பு உப்பு, 10 கிராம் பன்னீர், இரண்டையும் கலந்து வைத்துக் கொண்டு சிறிதளவில் குழந்தையைச் சாப்பிட வைக்கலாம். அல்லது வசம்பு ஒரு துண்டு எடுத்து லேசாக வறுத்தெடுத்துப் பவுடராக்கி 250 மில்லி கிராம் அளவில் தினசரி இரண்டு வேளை தண்ணீருடன் சாப்பிட வைக்கலாம். 125 மில்லி கிராம் பெருங்காயத்தைப் பவுடராக்கி வெதுவெதுப்பான வெந்நீருடன் சாப்பிட்டால் குடல் வலி குணம் பெறும். சோம்பு, ஓமம், கருப்புப்பு மூன்றையும் சம எடையில் பவுடராக்கி ஒரு கிராம் அளவில் வெதுவெதுப்பான தண்ணீருடன் தினசரி இரண்டு வேளை உணவுக்குப் பிறகு சாப்பிட்டால் கேஸ் டிரபிள் என்னும் வாய்வுக் கோளாறுகளினால் உண்டாகும் வயிற்றுவலி குணம்பெறும்.

**வயிற்றுப்புண் :**

மூங்கிலுப்பு 10 கிராம், சந்தனத்தூள் 20 கிராம், நெல்லிக்காய் 30 கிராம், ரோஜாப்பூ 40 கிராம், தனியா 50 கிராம் அனைத்தையும் பவுடராக்கி தேனில் கலந்து வைத்துக் கொள்ளலாம். இதை காலை மாலை இரண்டு வேளை சாப்பிட்டு வந்தால் வயிற்றுப்புண், வயிற்றுக் கொப்பளங்கள், வயிறு வீக்கம், குடல் வீக்கம், வயிற்றெரிச்சல் குணம்பெறும். வயிற்றுப்புண் குணம் பெற்றதை எக்ஸ்ரே மூலம் கண்டறியலாம்.

**நாக்குப் பூச்சிகள் :**

2 கிராம் வாய்விளங்கத்தை 2 கிராம் சர்க்கரையுடன் கலந்து இரவில் படுக்கும்போது தினசரி இரண்டு வேளை சாப்பிட்டால் நாக்குப்பூச்சித் தொல்லை நீங்கும். அதனால் உண்டாகும் வலி குணம்பெறும்.

**விரைவாதம் :**

ஆண்களில் விதைகளில் வலி, வீக்கம் ஏற்பட்டால் நவாச்சாரம் 1 கிராம் எடுத்து 60 மில்லி பிராந்தியில் கலந்து பஞ்சில் நனைத்து விதைகளின் மீது கட்டினால் குணம் பெறும்.

**கர்ப்பப்பை புண், வலி :**

500 மில்லி கிராம் பெருங்காயத்தை 6 கிராம் வெல்லத்துடன் கலந்து மாதவிடாய் காலத்தில் மூன்றிலிருந்து ஐந்து நாட்கள் வரை தினம் காலையில் சாப்பிட்டு வந்தால் வலியுடன் வரும் விலக்கு குணம்பெறும். சோம்பு, உலர்ந்த மணத்தக்காளி, நெருஞ்சி முள், வெள்ளரி விதை, ஒவ்வொன்றிலும் 6 கிராம் எடுத்து 150 மில்லி தண்ணீரில் கொதிக்க வைத்து வடிகட்டி தினசரி இரண்டு வேளை சாப்பிட்டால் கர்ப்பப்பையில் புண், வீக்கம், வீக்கம் ஏற்படுவதால் உண்டாகும் வலி குணம்பெறும்."

வலிகளுக்கு மேற்கண்ட எளிய மருத்துவக் குறிப்புகளை கூறிய டாக்டர் அக்பர் கவுஸர் நாள்பட்ட வலிகளுக்கு அக்குபஞ்சர், காந்த சிகிச்சை மற்றுமொரு சிறந்த சிகிச்சை முறை என்று விளக்குகிறார். 100 படுக்கை வசதி கொண்ட அக்குபஞ்சர் மருத்துவமனையையும் கடந்த 16 ஆண்டு காலமாக நடத்தி வருகின்றார். மத்திய அரசின் சுகாதார அமைச்சகத்தின் ஆலோசகராகவும், சுகாரதார கமிஷனின் தலைவராகவும் உள்ள டாக்டர் அக்பர் கவுஸரிடம் கடிதம் மூலம் இலவச ஆலோசனை பெற விரும்புவோர் - அல்கவுஸர் யுனானி கிட்னி ஃபவுண்டேஷ், 370, மசூதி வீதி, நியூ டவுன், வாணியம்பாடி - 635 752 வடாற்காடு அம்பேத்கர் மாவட்டம். தொலைபேசி : 04174 - 24095 எனும் முகவரிக்கு எழுதலாம்.

— புவனா

**பெண்களுக்குப் பயனுள்ள செய்திகள்**
உடை, உணவு என நிறைய விஷயங்களில் யோசனை கூறுபவர் புலவர் ச. சுப்ரமணியம்.
பக்கங்கள் - 104 விலை ரூ. 17.00

**ஓலைப்பட்டாசு**
சுஜாதாவின் சிறுகதைகள். வழக்கம் போல அவருடைய பாணியில் கேலி, நகைச்சுவையுடன் சமூக ப்ரக்ஞையுள்ள கதைகள்.
பக்கங்கள் 169 விலை ரூ. 30.00
(இரண்டும்- குமரிப் பதிப்பகம், 8. நீலா தெற்கு வீதி, நாகப்பட்டினம் - 611 001).

**சின்ன விஷயம்தான்!**
அன்றாட வாழ்க்கையில் ஏற்படும் மன இறுக்கத்திலிருந்து, பல் விளக்குவது வரை நிறைய பயனுள்ள ஆலோசனைகள். ஆக்கியோர் - மணிமேகலை பிரசுர ஆசிரியர் குழு.
பக்கங்கள் - 112, விலை ரூ. 15.50

**கரையோரப் பூவே...!**
தஞ்சை செல்வனின் நாவல். கிராமிய மணம் கமழும் கதை.
பக்கங்கள் - 375, விலை ரூ. 52.00
(இரண்டும் - மணிமேகலை பிரசுரம், த.பெ. எண். 1447, 4. தணிகாசலம் சாலை, தி. நகர், சென்னை - 17)

**ரமணமுனிவர்**
பகவான் ரமணரின் வாழ்க்கைச் சரிதம். எழுதியவர் - அ. ஜெயக்குமார்.
பக்கங்கள் - 112, விலை ரூ. 18.00

**சிற்றுண்டிகளுக்குத் தேவையான சட்னி வகைகள் 100**
ஆசிரியர் - எல். சகுந்தலை,
பக்கங்கள் - 96, விலை ரூ. 15.00
(இரண்டும் உமா பதிப்பகம், 58. ஐயப்ப செட்டி தெரு, மண்ணடி, சென்னை -1)

**சொப்பன சாஸ்திரம் என்னும் கனவுகளின் பலன்**
அறுபது வகையான கனவுகளின் பலன்களைக் கூறுபவர் சிவசங்கரன்.
பக்கங்கள் - 80, விலை ரூ. 14.00

**ஆரோக்கியம் தரும் சூப் வகைகள் 100**
ஆசிரியர் - ராஜம் அனந்தராமன்
பக்கங்கள் - 104
விலை ரூ. 18.00
(இரண்டும் - நர்மதா பதிப்பகம், 16/7 ராஜாபாதர் தெரு, பாண்டிபஜார், தி.நகர், சென்னை - 17)

## புக் ஷெல்ஃப்




**உறவின் எல்லை**
தகழி சிவசங்கரம் பிள்ளையின் நாவலை தமிழில் தந்திருப்பவர் சிவன். அன்றாட வயிற்றுப் பாட்டிற்கு அல்லாடும் மக்களிடையே எழும் காதல், மோக, கோப உணர்வுகளுடன் பின்னிப் பிணைந்த கதை.
பக்கங்கள் - 288, விலை ரூ. 36.00

**ஜோதிடம் சில சிந்தனைகள்**
ஜோதிடக் கலையின் சிறப்பு பற்றிய நூல். ஆசிரியர் காழியூர் நாராயணன்.
பக்கங்கள் - 114. விலை ரூ.18.00
(இரண்டும் - கங்கை புத்தக நிலையம், 13. தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17)

**தாளம் தப்பிய தாலாட்டு**
ஒரு குழந்தையின் அன்பு ஏங்கலை உணர்ச்சி

